கழக வெளியீடு: ௮௮

உ

திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம்



பேராசிரியர், கா. சுப்பிரமணிய பிள்ளை

எம். ஏ., எம். எல்., அட்வகேட்

அவர்கள் எழுதியது



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி. : : சென்னை-1.

# பதிப்புரை

மூன்ருண்டுப் பச்சிளங் குழந்தையாயிருந்த ஞான்றே, எல்லாவுலகங்கட்கும் இருமுதுகுரவராகிய இறைவனையும் இறைவியையும் நேரே கண்டு, அவர் குழைத்தூட்டிய ஞானப் பாலுண்டு, எல்லாக்கலைகளையும் ஓதாதுணர்ந்து, சைவப்பெரு நெறிக்கு விளைந்திருந்த பேரிடர் தீர்த்து, செந்தமிழ்நாடெங்குஞ் சிவப்பேரொளியினை விளங்கச்செய்து, அதற்கொரு தெய்வ முதலாசிரியராய் விளங்கிய திருஞானசம்பந்தப்பெருமானது பெருமைமிக்க வரலாற்றினைப் படிக்க யாவர்க்கும் மனவெழுச்சி யுண்டாதல் இயல்பே

முன்னரே அறிஞர் பலர் அப் பெருமான் வரலாற்றினை எழுதிவெளியிட்டிருக்க, இந்நூல் வெளிவரவேண்டியதெற்றுக் கெனின்? முன்னர் வெளிவந்த புத்தகங்களெல்லாம் பெருமான் வரலாற்றினை மட்டும் சேக்கிழார் பெரியபுராணத்தின் படி சுருக்கியும் விரித்தும் கூறுகின்றனவேயல்லாது இந்நூல் போல ஆராய்ச்சி முறையில் எழுதப்படவில்லை. ஆகலான் இது வெளிவரவேண்டியது இன்றியமையாததாயிற்று. முதற் கண், இந்நூலாசிரியராலேயே ஆராய்ச்சி முறையில் எழுதப் பட்ட அருள்ஞானத் தந்தையாய்த் திகழ்ந்த அப்பர் பெருமான் வரலாற்றினைக் கற்று இன்பமெய்திய இலங்கை, இந்தியா முதலிய இடங்களிலுள்ள அன்பர் சிலர், சைவசமயாசாரியர் களில் ஏனைய மூவர் வரலாறுகளையும், அம்முறையில் எழுதி வெளியிடுமாறு கேட்டுக்கொண்டதற்கு இணங்க இந்நூல் வெளியிடப்பெறுவதாயிற்று. இங்ஙனமே சுந்தரர், மாணிக்க வாசகர் ஆகிய இருவர் வரலாறுகளும் இறைவன் இன்னருளால் விரைவில் வெளிவரலாகும்.

இந்நூலின்கண், சம்பந்தர் வரலாறு பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு சரித்திரப்பகுதி முடிந்ததும் அதனால் உணரக் கிடக்கும் ஆய்வுரைகளை விளக்கி எழுதிச் சேர்த்திருப்பது கற்பவர்க்குக் கழிபேரின்பம் பயவாநிற்கும். இதன்கண், சம்பந்தர் தேவார ஆராய்ச்சியும், சம்பந்தர் கால ஆராய்ச்சியும், சம்பந்தர் திருநாமவிளக்கமும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன. இவ்வரலாறு பிரிவரிய ஊசிவழிப் பின்றொடரும் நூல்போலப், பெரியபுராணத்திற்குச் சிறிதும் மாறுபடாமல் எழுதப்பட்டிருக்கின்றது.

அன்பு அறவொழுக்கங்களிற் சிறந்து, தமிழிலும் ஆங்கிலத்திலும் பெரும்புலமை நிரம்பி, நுண்மாண் பொருள் மிக்க இவ்வரலாற்றினைச் செந்தமிழ்ச்சுவை விஞ்சும்படி எழுதியுதவிய திருவாளர் **கா. சுப்பிரமணிய பிள்ளை** யவர்களுக்கும், இதனை அச்சிடுகையில் எழுத்துப் பிழைகள் முதலியவற்றைப் பார்த்து உதவிய திருவாளர் **மா வடிவேலு முதலியா** ரவர்களுக்கும் எங்கள் உளமுவந்த பெருநன்றியைச் செலுத்துகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை



---

# திருஞானசம்பந்தர் புகழ்மாலை

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

(பெரியபுராணம்)

பண்டைவல் வினையினுற் பாயு டுத்துழல்
குண்டரை வென்றுமுன் கூடல் வைகியே
வெண்டிரு நீற்றொளி விளங்கச் செய்திடு
தண்டமிழ் விரகன்மெய்த் தாள்கள் போற்றுவாம்.

(கந்தபுராணம்)

தெள்ள ருந்தமிழ் வேட்கையிற் செலுத்துமென் றியே
னுள்ள மோர்தொறுஞ் சுவைப்பன வுமைதிரு ரு ப்பால்
வள்ளம் வாக்கினின் றூட்டிட மாந்திய காழிப்
பிள்ளை சீறடித் தாமரைக் காதலம் பிரசம்.

பதேச காண்ட

அருந்தியுமை யருள்கிண்ணத் தடிசிலவே தாகமத்திற்
றிருந்துபயன் செந்தமிழா லெமக்களித்த தேசிகனைக்
குரும்பைமுதி ராண்பனையிற் குருத்துதிக்கத் தமிழ்கூறிக்
கருஞ்சமணர் கனைக்கழுவேற் றியமீளி கழல்பணிவாம்.

(அருணகிரி புராணம்)

பரசமய கோளரியைப் பாலறா வாயனைப்பூம்
பழனஞ் சூழ்ந்த
சிரபுரத்துத் திருஞான சம்பந்தப் பெருமானைத்
தேய மெல்லாங்

குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளும் கவுணியர்தங்
குலதீ பத்தை
விரவியெமை யாளுடைய வென்றிமழ விளங்களிற்றை
விரும்பி வாழ்வாம்.

(காஞ்சிப் புராணம்)

மழலை யின்னமு தூற்றெழு மாசைவள் ளத்துக்
குழலின் மென்மொழி யுமையவள் கொடுத்தபால் கமழப்
பழகு செந்தமிழ்ப் பாடலந் தேன்வடித் தாடு
மழக னஞ்செவி யூட்டிய வறிஞனை யடுப்பாம்.

(திருவானைக்காப் புராணம்)



திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம்



## க. தோற்றுவாய்

தன்னுயிர்போல மன்னுயிர் பிறவற்றையுங் கருதி அவற்றிற்கு நன்மை செய்வதே பேரறமென்று பெரியோரால் விதந்தோதப்பெறும். அத்தகைய பேரறம் இயற்ற வல்லார் எவ்வுயிர்க்கும் இரங்கும் அருட்குண முடையவர்களேயாவர். அவர்களே அந்தணராகிய அறவோரென்று ஆசிரியர் திருவள்ளுவர் நீத்தார் பெருமையுட் குறித்தனர்.

> அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
> செந்தண்மை பூண்டொழுக லான். (குறள்-௩0)

தனக்கு நன்மை நாடுவதினும் பிறர்க்கு நன்மை செய்வதே அறமென்று சிறப்பாக அழைக்கப்படும். பிறர்க்குச் செய்யும் நன்மை காரணமாகவே உயர்வும் மதிப்பும் மக்கட்கு ஏற்படுகின்றன. குழந்தைகளைப் பாதுகாத்து வளர்த்தலினாலே தாய்க்குச் சிறப்புக் கூறப்படுகின்றது. அவர்கட்கு அறிவூட்டுவதனாலே தந்தைக்குப் புகழும் புண்ணியமும் விளைகின்றன. இளைஞர்க்கு உற்றுழி உதவுதலானும் வறிஞர்க்கு வேண்டுவன ஈதலானுஞ் செல்வர்க்குச் சிறப்பு ஏற்படுகின்றது. கல்வி கற்பித்தலினாற் கற்றவர்க்கு மேன்மை யுண்டாகின்றது. நாட்டில் வாழும் குடிகளை உட்பகை புறப்பகை முதலியவற்றால் நலிவடையாமற் காத்து ஓம்புதலினாலே வேந்தர்க்குப் பெரும் பெற்றி

நிலைக்கின்றது. சமய அறிவினையும் சமய ஒழுக்கத்தினையும் நிலைபெறச் செய்வதினாலே சமய ஆசிரியர்கட்குப் பெருஞ் சிறப்பு அமைந்துளது. இதனால் பிறர்க்கு உதவியாகிய அறமே சால்பு அனைத்திற்கும் அடிப்படையாக உள்ளது

செய்யும் நல்லறத்தின் உயர்விற்கேற்ப அறவோரது பெருமை மிகுந்து விளங்கும். உயிர்கட்குப் பசி தீர்ப்பது பேரறமென்பர். உடம்பிற்குரிய உணவு அளிப்பதினும் உள்ளத்தைச் செம்மைப்படுத்துங் கல்வியறிவினை ஈதல் சிறந்தது. இவ்வுலக வாழ்க்கைக்குப் பயன்படும் கல்வியறிவைக் கொடுப்பதைக் காட்டிலும் மறுமைக்கு நன்மை பயக்கும் நல்லொழுக்கவுணர்ச்சி யெழுப்புதல் பெரிதும் போற்றப்படுவதாகும். இம்மைக்கும் மறுமைக்கும் வீட்டிற்கும் நலம் பயக்கும் சமய அறிவினை ஈதல் அதனினும் விழுமியதாகும். சமயங்கள் யாவற்றுள்ளும் தலையாய ஒரு சமயத்தின் உண்மையறிவினைப் புகட்டுதல் பிற சமயக் கல்வி பயிற்றுதலினுஞ் சீரியதாகும்.

சமய போதனை போதிப்பவரின் தகுதிக்கேற்றவாறு பயன் விளைக்கும் இயல்புடையது. கல்வியறிவொழுக்கங்களால் மேம்பட்டுக் கடவுள்பாற் கழிபேரன்புடையார் செய்யுஞ் சமய போதனையே ஏனையோர் தருஞ் சமயக் கல்வியினுஞ் சிறந்ததாகும். அப் பேரன்பருள்ளும் முழுமுதற்கடவுளது திருவருளை எளிதிற் கைவரப்பெற்ற பெரியோருடைய அருண்மொழிகளே அளவற்ற நன்மை விளைக்க வல்லன. அவற்றுள்ளும் ஈரவொன்று மறியாத பச்சிளங்குழந்தைப் பருவத்திலேயே பரம்பொருளது பெறலருங்கருணைக்குரியவராய்ப் பேரின்பம் நுகர்ந்த அருள்ஞான வள்ளலது பெருஞ்சொல்லே எல்லையில்லாத பெருநல வாழ்வினைக் கைவரச்செய்ய வல்லதாகும்.

இனி, சமய நலத்தினை ஒருவருக்குச் செய்வதினும் பலர்க்குச் செய்தல் சிறந்தது. பலர்க்குச் செய்வதினும் நாடு முழுவதிற்குஞ் செய்தல் சிறந்தது. நாடு முழு

வதிற்குஞ் செய்வதினும் ஞாலமனைத்திற்குஞ் செய்தல் சிறந்தது. சமயம் விளக்கமுற்றிருக்குங் காலத்திலே சமய போதனை செய்வதினும் பல்வகை இடையூறுகளால், அது நிலைகுலைந்து அழியுங்காலை அதனை நிலைநாட்டி உலகத்தோரை உய்வித்தல் அருள் அறங்கள் எல்லாவற்றினுந் தலைமையானது. அப்பெற்றித்தாய பேரறம் புரிவோரே சமய வேந்தரெனப்படுவர். அனைய வேந்தருள் ஒப்பற்ற பெரு வேந்தராய்த் திகழ்ந்தவர் நம் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரென்பது, அவர் மூவாட்டைப் பிராயத்திலேயே முழுமுதற் கடவுளின் பேரருள்பெற்றுச் சைவப் பெருநெறிக்கு விளைந்த பேரிடர் தீர்த்து உலகெங்கும் சிவனருட் பேரொளி திகழ்ந்தோங்குமாறு திருவருட் பாடலாகிய தெள்ளமுதக் கடலளித்து வியப்புறும் அருட் பெருஞ் செயல்களாற்றி ஞாலத்துத் தாம் வதிந்தநாள் முழுவதும் மன்னுயிர்களை உய்யக்கொள்வதிலேயே பயன் படுத்தித், தமது திருமணத்தில் வந்த யாவரும் கொள்ளை கொள்ள வீடு உதவியருளினமையாற் றெள்ளிதிற் பெறப் படும். ஆதல்பற்றியே **தாயுமானவர்,**

> வெம்பந்தந் தீர்த்துலகாள் வேந்தன் திருஞான
> சம்பந்த னையருளாற் சாருநா ளெந்நாளோ?

என்றனர். **சங்கராசாரியரும்,**

> தருணமங்கலை யுனதுசிந்தை தழைந்தபாலமு தூறினல்
> அருணகொங்கையி லதுபெருங்கவி யலைநெடுங்கட லாகுமே
> வருணநன்குறு கவுணியன்சிறு மதலையம்புயல் பெருகியே
> பொருணயம்பெரு கவிதையென்றொரு புனிதமாரி பொழிந்ததே.

என்று நம் பெருமானைப் புகழ்ந்து துதித்தனர். அத் தகைய சமயப் பெருவேந்தரின் பெருஞ் சரிதையினை ஆராய்தல் பெருநலம் பயக்குமாதலின் அதனைச் செய்ய முற்படுகின்றாம்.

---

## உ. குழந்தைப் பருவம்

உலகப் பயன் கருதிக் கடவுளை வழிபடுதற்குரிய வேத நெறியும், அப் பயன் கருதாது வீட்டுநலங் கருதி விமலனை வணங்கும் வீறுற்ற சிவநெறியும், சைவாசிரிய பரம்பரையும் இஞ்ஞாலத்திலே நிலைபெறும்வண்ணம், நம் பரமாசாரியர் தோன்றித் திருவருள் பெற்ற இடம் சோழவளநாட்டிலேயுள்ள சீர்காழிப்பதியாகும்.

அப் பதியானது சிவநெறி பேணுதலே தமது குலத்தின் பெருங் கடமையாகக் கருதிய சோழ மன்னரது காவிரியாற்றின் வளஞ் சிறந்ததாய்ச் செழிப்புமிக்க செந்நெல் வயல்கள் சூழ்ந்ததாய், வானளாவிய மதில்களினுற் புடைசூழப் பெற்றிருந்தது. தோணிபுரமென்ற அதன் பெயர்க்கேற்ப அந்தணர்களது மந்திரவொலி முழக்கம் கடலொலிபோல ஓங்கி யெழுதலால் எப்பொழுதும் கடன் மேலே மிதப்ப தொப்ப விளங்கியது. ஆசிரியர் சேக்கிழார் பெருமான் அத்திருப்பதியின் வனப்பைப் பலபடப் பாராட்டியுள்ளார். அவற்றுட் சிலவற்றை ஈண்டுக் கூறுதும்.

எக்காலத்தும் அழியாது நிலவுதலால் அதன் மதில்களின்மேல் ஊழிப்பெரு வெள்ளங்களின் அலைகள்மோதிவிடுத்த வரைகள், பாற்கடல் கடைந்தகாலை மந்தரமலையைச் சூழ்ந்துகிடந்த அரவினது அடையாளத்தை யொத்திருந்தன. அந்நகரிற் றிகழும் தாமரைத் தடாகங்களிலே பச்சைநிறமுடைய இலைகள் நீரை மூடிப் படர்ந்திருப்பனவும் செந்தாமரைகள் அழகாக மலர்ந்திருப்பனவும் எவ்வாறிருந்தவெனின், நீல நிறமுடைய கடலின்மீது செந்நிறக் கதிர்களோடு ஒரு கதிரவன் காலையில் எழுவதைப் பார்த்துப் பல இளஞ் செஞ்ஞாயிறுகள் பல சிறு கடல்களின் மீது எழுந்து இலங்குவன போன்றிருந்தன. ஓமத்தின் புகையினுல் இரவும், திருநீற்றொளியினுற் பகலும் எப்போதுமிருத்தலால், வேறு இரவும் பகலும் அவ்வூருக்கு வேண்டாவாயின. வானளாவிய சோலைகளில் நுழைந்து மலர்த்தாதும் தேனும் தோயப்பெற்று வெளிப்பட்ட திங்க

ளானது வெண்ணிறம் மாறிச் செந்நிறம் பெற்று, மாலையில் விளங்கும் கதிரவனைப் போன்றது. வயல்களிலே மலர்ந்த செந்தாமரையாகிய செந்தீயிலே அவ்வயல் வரம்பிலுள்ள தேமாமரத்தின் கனி கிழிந்து ஒழுகும் பழச்சாறாகிய நெய் யானது எப்பொழுதும் இலைகளின் நடுவேயோடிப் பொழி வதனாலே, அவ்வூரிலுள்ள மரங்களும் வேள்விசெய்யுந் தன்மையனவாய்த் தோன்றின. இக் கருத்தமைந்த பாட்டு வருமாறு :

*பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்*
*வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்*
*நிரந்தரநீ ளிலைக்கடையா லொழுகுதலால் நெடிதவ்வூர்*
*மரங்களுமா குதிவேட்குந் தகையவென மணந்துளதால்.*

(சம்பந்தர்புராணம் - எ)

பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, பூந்தராய், சிரபுரம், தோணிபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சை வயம், கழுமலம் என்னும் பன்னிரண்டும் அப்பதிக்குரிய பெயர்களாம். குற்றமற்ற மந்திரங்களை ஓதி நல்லொழுக் கத்திற் சிறந்த கவுணியர் குடிக்கு அணியாய் விளங்கிய சிவபாதவிருதயரும், அவர் கருத்திற்கிணங்கி யொழுகும் அவர் வாழ்க்கைத் துணையாகிய பகவதியாரும் பரம்பரை யாகச் சிவநெறிபோற்றும் மரபினில் வந்தனர். அவர்கள் இருவரும் சிவபெருமானது திருவடித்தாமரைகளையே யன்றி வேறொன்றையும் வழிபடாதவர்களாய்த் திருநீற் றன்பு மிக்கவராய்த் திகழ்ந்தனர். அக்காலத்தே சமண சமயமும் புத்தசமயமும் தென்னாட்டிலே எங்கும் பரவின மையால், வேதநெறியுஞ் சைவநெறியும் வலிகுன்றி நின் றன. அப்புறப்புறச் சமயஇருளை நீக்கித் திருநீற்றி னொளியை நிலைநிறுத்தவல்ல அரும் புதல்வரைப் பெறக் கருதி, அவர்களிருவரும் திருத்தோணிபுரத்திலிருக்குஞ் சிவபெருமானையும் உமையம்மையாரையும் வழிபட்டு அரிய நோன்பு ஆற்றி அவர்களுடைய எண்ணம் நிறைவேறுங் காலத்தே பகவதியார் மகப்பேற்றிற் குரியவராயினார். பத்துத்திங்களிலும் உரிய சடங்குகள் நிறைவேறின.

பத்தாந்திங்களில் கோள்கள் உயர்நிலையில் நின்று வலி யுற்ற நல்லதொரு பொழுதாயமைந்த திருவாதிரைநாளிலே சைவநெறியும் மறைவழக்குஞ் சிறக்கும்வண்ணம், அடியா ருள்ளங் களிகூரும்வண்ணம், திருநீற்றின் சிறப்பு உல கெங்குந் திகழும்வண்ணம், ஏழுலகும் இன்புறும்வண்ணம், விண்ணவர்கூட்டம் வியப்ப, அந்தணரொழுக்கஞ் சிறப்ப, தமிழ்மக்கள் செய்த தவம் முற்றுப்பெற, அருந்தவத் தோர் செயல் விளங்க, எவ்வுலகினும் இவ்வுலகம் மேன்மை எய்த, எத்திசையினுந் தென்றிசை உயர்வுற, எம்மொழி வழக்கினுந் தமிழ்மொழி வழக்கே தழைத்தோங்க, இசை ஞானமும் மெய்ஞ்ஞானமும் நிலைத்திருப்ப, படைப்புத் தொழில் சீர்மைபெற, முக்காலத்துங் குற்றமில்லாது சீர்காழிப்பதி புகழ்பெற்றோங்க, தோணிபுரத் திறைவர் திருவருள் எங்கும் பெருக, நாத்திக மதங்கள் பாழ்பட, எப்பொருட்குஞ் சிவமாந்தன்மை தரவல்ல ஆளுடைய பிள்ளையார் இம்மேதினியிற் றோன்றியருளினர். ஆளுடைய பிள்ளையார் தோன்றுங்காலை திருக்கழுமலத்திலுள்ள எல்லாருடைய உள்ளமும் உடம்பும் களிகூர்ந்து புளக மெய்தின. பொழில்களெல்லாம் நறுமணங் கமழ்ந்தன. கதிரவனது தூயவொளி எங்கும் பரவிற்று. தென்றற் காற்று வீசியது. விண்ணவர்கள் மலர்மழை பொழிந்து மண்ணவர் வேள்விக்குத் துணை நின்றனர். பூதகணங்கட் குத் தலைவர்களும் திருவருளின் பெருமைகண்டு மகிழ் வடைந்தனர். மரங்கள் கொடிகள் முதலியவைகளுந் தழைத்தோங்கின. வானமும் குற்றமிலா வொளியொடு விளங்கிற்று. நற்புள்ளின் ஒலிகள் நாற்றிசைகளெங்கும் முழங்கி நற்குறிகள் காட்டின. காழிப்பதியின் தெருக் களிலெல்லாம் பல்வகை வாத்தியங்கள் தாமே முழங்கின. அருமைப் புதல்வர்க்குச் செய்யவேண்டிய சடங்குகள் யாவும் பெற்றோர்கள் செய்தனர். அந்தணர் குலத்துப் பெண்மணிகள் மிகுந்த மகிழ்ச்சியினுலே தங்கள் மாளிகை களிலே மலர்களுஞ் சாந்தும் அமைத்து, நிறைகுடமும் வெண்முளைப் பாலிகைகளும் வைத்து, அவற்றைக் கவி னுறச் செய்தனர். வறியவர்க்குப் பொன் முதலிய நற்

பொருட் கொடையும், சிவனடியார்க்கு அமுதளித்தலும், நறுமலர் தொடுத்தலும், அகிற்புகை, ஆகுதிப்புகை, கடுகின் புகை முதலியவற்றால் நன்மணங் கமழ்வித்தலுமாகிய பல் வகை நற்செயல்கள் பத்துநாட்களிலும் நடைபெற்றன. பெயரிடுதல், தொட்டிலமர்வித்தல், அமுதூட்டுதல், திரு நீற்றுக் காப்பமைத்தல் முதலிய சடங்குகளும் உரிய பரு வங்களிலே செவ்வையாக நடந்தன.

அன்னையாரது மடியிலும், மணிப்பீடத்திலும், ஒளி பொருந்திய தொட்டிலிலும், மலர் அமளியினுந் தமிழ் தழைக்கவருந் தனிப்புதல்வரை வைத்துப் பெற்றோர்கள் தாலாட்டி வளர்த்தனர். சின்னாட் சென்றபின்னர், சிவ பெருமானது திருத்தொண்டைத் தவிர மற்றொன்றுங் கைக்கொள்ள மாட்டோமென்று தெரிவிப்பார்போலப் பிள்ளையார் திருமுக மண்டிலமசையச்செங்கீரை[1] யாடினர். புறச்சமயங்கள் விலகியோடவும் சிவபெருமானிடந் திருத் தாளம் பெறுவதற்கு முற்காட்டாகவும் தம்முடைய கமலச் செங்கைகளாற் பிள்ளையார் சப்பாணி கொட்டினார். உயர் நெறியில் நில்லாத ஏனைச் சமயங்கள் தாழ்ந்து தடுமாறுவன வற்றைக் காட்டுவான் தமது திருமாளிகை முற்றத்திலே நாயனார் தவழ்ந்தருளினார். சுற்றத்தாரும் பிறரும் 'காழி யர்தம் சீராட்டே, கவுணியர் கற்பகமே' என்று மகிழ்ச்சி யுடன் கூறி நாயனாரை வருக! வென்று அழைத்தனர். அழைத்தவருக்குத் திருநகையாலும் திருமேனி யசைவி னாலும் பிள்ளையார் இன்பமளித்தனர். கீழ்ச்சமயங்கள் தளர்வுறும்படி கிண்கிணி யொலியொடு தளர்நடை கொண் டனர். பின்னர் நடந்து விளையாடத் தொடங்கினர். சிறு தேருருட்டும் பருவமும் சிறு பெண்களின் சிற்றில்களை அழிக்கும் பருவமும் கழிந்தபின் பிள்ளையார் மூன்றும் வயதுற்றனர்.

இதுவரை கூறிய சரித்திரப் பகுதியின் நுண்பொரு ளைத் தொகுத்து ஆராய்வாம். ஆசிரியர் சேக்கிழார்

1. செங்கீரையாடலென்பது இருகையு முழந்தாள்களும் ஊன்றித் தலைநிமிர்ந்தாடல்.

பெருமான் திருஞான சம்பந்தப் பிள்ளையாரது புராணத்தின் தொடக்கத்திலே 'வேதநெறி தழைத்தோங்க, மிகு சைவத் துறைவிளங்க, பூத பரம்பரை பொலிய' என்று அருளிச் செய்ததன் நோக்கம் யாதென்று ஆராயப்புகின் முதற்கண் வேதநெறியென்பது எது? சைவத்துறையென்பது எது? பூத பரம்பரை யென்பது யாது? என்ற வினாக்களுக்கு விடை தேடுதலவசியமாகும். பின்னர்த் திருஞானசம்பந்தப் பெருமானது திருவருட்பேற்றால் அவைகள் நிலைபேறெய்தியது யாங்ஙனம்? என்று ஆராய வேண்டும்.

'வேத நெறி' என்ற சொற்றொடர் வேதத்திற் கூறப் பட்ட நெறியென்று நேராகப் பொருள்படும். வேதமென்பது வடமொழியிலுள்ள இருக்காதி நான்கு வேதங்களைக் குறிக்குமென்பர் ஒருசாரார். அது மறையென்னும் தமிழ்ச் சொல்லிற்குப் பிரதிபதமாய் ஆதிக்கண்ணிருந்த தமிழ் மறையினைக் குறிக்குமென்பர் மற்றொரு சாரார். ஆதித் தமிழ் மறைகள் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையுங் கூறுவதாய்ச் சிவபெருமானால் நான்கு முனிவர்க்குக் கொடுக்கப்பட்டன என்பது ஆராய்ச்சியாற் போதரும். தொல்காப்பியப் பாயிரத்திலே கூறப்பட்ட நான்மறை, இருக்காதி நான்கு வேதங்களல்லவென்பது ஆசிரியர் நச்சினார்க்கினியர் கருத்து. அவை தமிழ்மறை யென்பது ஆராய்ச்சியாளர் துணிபு. தமிழ் முதனூல்கள் இறைவனால் தரப்பட்டனவென்பது,

*வினையி னீங்கி விளங்கிய வறிவின்*
*முனைவன் கண்டது முதனூ லாகும்*

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால் தெளிவாகும். புறநானூற்றிலே ஒரு செய்யுளானது,

*"நன்றாய்ந்த நீணிமிர்சடை*
*முதுமுதல்வன் வாய்போகா*
*தொன்றுபுரிந்த வீரிரண்டி*
*னாறுணர்ந்த வொருமுது நூல்*

..............................
நீர்நாண நெய்வழங்கியும்
எண்ணாணப் பலவேட்டும்." (புறம்-கசுசு)

சிவபிரான் இயற்றிய நான்கு பகுப்புடைய வேதத்தின்படி வேள்வி இயற்றப்பட்டதென்ற செய்தியைத் தெரிவிக்கின்றது. வடமொழி வேதங்களுள் அவை சிவபெருமானால் இயற்றப்பட்டன வென்பதற்குச் சான்றில்லை. ஆகலின் புறநானூற்றுட்போந்த வேள்வி பண்டைத் தமிழ்மறை வழக்கின்படி நிகழ்ந்திருத்தல் வேண்டும். அவ்வாறன்றி அது வடமொழி வேதத்தின் கொள்கைப்படி நடந்ததென்று கொள்ளின் வடமொழி வேதம் சிவபெருமானாலே செய்யப்பட்டதென்ற கொள்கை அக்காலத்திலே புதிதாக நிலவியிருத்தல் வேண்டும். அவ்வேள்விக்கண் நெய்யினால் ஆகுதி வழங்கியதாகக் கூறப்பட்டதேயொழிய ஊன் கொண்டு அது நிகழ்ந்ததென்று உரைக்கப்படவில்லை. 'நீர் நாண நெய் வழங்கியும்' என்றது காண்க. நிமிர்சடை முதல்வன் நூலிற் கூறியாங்கு அவ்வேள்வி நிகழ்ந்தமையால் அஃது அவனையே தலைவனாகப் பெற்றிருந்ததென்பது தெளிவு. அனைய வேள்விகள் பலவற்றைச், சோழநாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந் தாயனென்பான் வேட்டதாக அச்செய்யுள் கூறுகின்றது. நம் பேராசிரியர் மரபும் கவுணியர் மரபாகலானும், அவருடைய பெற்றோர்கள் 'மரபிரண்டுஞ் சைவநெறி வழிவந்த கேண்மையராய், அரவணிந்த சடைமுடியா ரடியலா லறியாது, பரவு திருநீற்றன்பு பாலிக்குந் தன்மையர்' என்று ஆசிரியர் சேக்கிழாரால் விதந்தோதப்பட்டமையானும், கவுணியன் விண்ணந்தாயனது வேள்வி வழக்கே பேராசிரியர் மரபிற்கும் உரித்தானது என்பது தெளியப்படும். ஆதலின் வேதநெறியென்பது சிவபெருமான் அருளிய வேதத்தின்படி ஊன்பயிலாது அப்பெருமானைத் தலைவராகக்கொண்டு செய்யும் வேள்வி வழக்கென்பது இனிது புலனாம். ஆகவே பல தெய்வங்களைக் குறித்து ஊன்பயில்கின்ற வேள்வி கூறும் நூல்நெறி ஈண்டுக் குறித்த வேதநெறியாகா தென்

பது தெளிவு. உலக போகங்களை விரும்பிச் செய்யப்பட்டதாகலின் வேதநெறியை ஆசிரியர் சேக்கிழார், 'உலகியல் வேதநூல் ஒழுக்கம்' என்றனர். 'சுருதிவழி யொழுகினர் சுவர்க்கத்தார்' என்றனர் உமாபதி சிவாசாரியார். பயன் கருதிக் கடவுளை வழிபட்டுப் போகங்களைத் துய்த்துப் பின்னர் அவற்றின் நிலையாமை கண்டு அவர் திருவடிகளையே அடையக் கருதும் உயர்நெறி சிவநெறியாகும். நிலைத்த இன்பத்தை அந்நெறி யளித்தலால் அது சிறப்பாக மெய்ந்நெறியென்றுங் கூறப்படும். ஆதல்பற்றி ஆசிரியர் சேக்கிழார், 'இலகுமெய்ந்நெறி சிவநெறியே' என்றனர். வீட்டின்பமென்னும் பேராற்றல் ஆடித் திளைப்பதற்கு வேதநெறியானது வழியாயும், சைவசமயமானது அவ்வழியின் முடிவிலுள்ள துறையாயு மிருத்தலான் 'வேதநெறி' யென்றும், 'சைவத் துறை'யென்றும் ஆசிரியர் சேக்கிழார் விதந்தோதுவாராயினர். வேத நெறியிலே சென்ற காலத்துப் பலப்பல பயன்கள் கருதி வழியின் புறத்தே உயிர்கள் ஒதுங்குதல் கூடுமாகலானும் சைவத் துறையானது வீட்டின்பத்திற்கே அவைகளைத் தவறாது உய்க்குஞ் சிறப்புடைமையானும் வாளா 'வேத நெறி' யென்றும் 'மிகு சைவத்துறை'யென்றும் கூறிப்போந்தனர். இனி, 'பூதபரம்பரை'யிலுள்ள 'பூதம்' என்ற சொல் உயிரையும் உண்மையையுங் குறிக்கும். உண்மைச்சமய பரம்பரையென்றும், உயிர்கள் மேன்மேல் வீடு கருதிச் செல்வதற்கு ஏதுவாய ஆசிரிய பரம்பரையென்றும் பொருள் கொள்ளலாம்.

நம் ஞானசம்பந்தப்பெருமான் மறைவழக்கு மிக்குடைய அந்தணர் மரபினிற்பிறந்து அதனைப் பாதுகாத்தமையானும், சைவத்தின் உண்மையை நாட்டிப் பல்லுயிர்க்கும் வீடளித்தமையானும், சிவநெறித் தலைவராய்ச் சைவாசிரிய பரம்பரை தட்டின்றி நடைபெற வழி திறந்தமையானும், அங்ஙனஞ் செய்வதற்கெல்லாங் காரணம் அவரது ஒப்பற்ற திருவருட்பேறுதலானும், அத்திருவருட்பேற்றிற் கறிகுறியாகிய சிவஞானப் பாலமுதம் பருகுவதற்கு அவர் 'அம்மே யப்பா' என்று தோணிபுர முதல்வரை அழைத்து

அழுதமை புறக் காரணமாதலானும், 'புனிதவாய் மலர்ந் தழுத' என்றார் ஆசிரியர் சேக்கிழார் பெருமான்.

சோழமன்னர் தொன்றுதொட்டுச் சிவநெறியைப் பேணிவந்தனரென்று கூறி அவர் நாட்டின்கண் வாழ்வோர் சைவ சமயத்தைப் பாதுகாப்பதில் மிக்க ஆர்வமுடையவ ரென்று குறிப்பித்தமையாலே சீர்காழிப் பதியிலுள்ளாரும் அவருட் சிறப்பாகச் சிவபாத விருதயரும் அவர் திரு மனைவியாரும் சைவசமய வளர்ச்சியைப் பெரிதுங் கருது பவர்கள் என்பதற்குத் தோற்றுவாய் செய்தவாறாயிற்று.

சீர்காழிப்பதிக்கு அப்பெயர் வந்தகாரணம் திருமால் சிவபெருமானை ஆண்டுப் பூசனை புரிந்ததென்பர். மற்றொரு வகையாகவும் அதற்குப் பொருள் கூறலாம். காழ் என்ற சொல்வன்மை, வயிரம் என்னும்பொருட்டு, காழி என்றால் வன்மையுடையது, வயிரமுடையது என்னும் பொருள் படும். சீர் என்றசொல் சிறப்பு என்னும் பொருளது. சிறப்பு நெறியாகிய சைவத்தைப் பேணுதலில் மிக வலிமை வாய்ந்தது சீர்காழி என்று பொருள் கொள்ளலாம். தோணிபுரமென்பது ஊழிப் பெருவெள்ளத்தும் அப்பதி யானது தோணிபோல் அதன்மேல் மிதந்து அழியாதிருக் கும் பெற்றியுடையதென்று குறிக்குந் திருப்பெயராகும். அத்துணைச் சிறப்புடைய இடமே உயிர்கள் பிறவிக்கடலி னின்றுங் கரையேறுவதற்குத் தெப்பமாக உள்ள சைவ சமயத்தைப் பாதுகாக்கவந்த முதற்பெரியார் தோன்று தற்கு மிகவும் பொருத்தமுடையது. கதிரவனிற் கடவுளை வழிபடுதலும், தாமரைமணி அணிதலும், எரியோம்பு தலும் அந்தணர் தமது சிறப்புக் கடமையாகக் கொண் டமையால், அவற்றையே பெரிதும் ஆசிரியர் நாட்டுவளங் கூறுமிடத்துப் பாராட்டியுள்ளார். பூதவுலகிற்குக் கதிர வன்போல ஞானவொளிமிக்க பல அடியார்கள் விளங்கித் தோன்றுதற்குக் காரணமாயது, பெரியோர் தோன்றிய இடமென்று குறிப்பார், சீர்காழிப்பதியிலுள்ள பொய்கை களின் தாமரைமலர்களைப் பல இளஞ்செஞ்ஞாயிறு களுக்கு ஒப்பிட்டார்.

வேள்வியாற் பெறும் நல்வினைப் பயன்கள் மீண்டும் பிறப்பிற்கேதுவாய் இருளிடத்துச் செலுத்துவதால் ஞானத்தை மறைத்தலின் 'ஓமதூமத்திரவும்' என்றும், மலநீக்கத்தில் விளங்கும் சிவத்துவப் பேற்றிற்கு அறிகுறியாகத் திருநீற்றைக் கூறுமிடத்துத் திருநீற்றினொளியைப் பகலென்றும் ஆசிரியர் சேக்கிழார் வேற்றுமை நயந்தோன்றக் கூறுவாராயினர். வேள்விச் சிறப்புக் கூறுவார் ஓரறிவுயிராகிய மரங்களும் ஆகுதிவேட்குந் தன்மையனவென்றனர்.

இனி, நம் திருஞானசம்பந்த நாயனாருடைய தாய்மரபும் தந்தைமரபும் சைவநெறியைச் சார்ந்தனவென்று ஆசிரியர் குறித்திருக்கின்றார். இதனால் பெற்றோர்களுள் ஒருவர் மரபே சைவநெறி பற்றியதாகவும் இருவர் மரபும் சைவநெறியைச் சாராதனவாகவு மிருக்கப்பெற்ற அந்தணரும் அக்காலத் திருந்தனரென்பது ஊகிக்கப்படும். இன்னும் அக்காலத்திருந்த அந்தணர் சிவநெறி யொழுகினவர், சிவநெறி யொழுகாதவர் என்று இருதிறத்தராயினரென்பது போதரும். சிவநெறிபற்றிய அந்தணரே தமிழ்நாட்டு ஆதிமறை வழக்கைக் கைக்கொண்டவரென்பது தெளியப்படும். அவர்க்கும் ஏனைச் சைவர்க்குந் தலைவராகவே திருஞானசம்பந்தப் பெருமான் திகழ்ந்தனரென்று கோடல் தவறாகாது. சிவநெறி யொழுகாத பிராமணரைத் தம்மவராக நம் பரமாசிரியர் கருதவில்லை.

> கல்லார் நெஞ்சி, னில்லா னீசன்
> சொல்லா தாரோ, டல்லோ நாமே. (தேவாரம்)

என்றதால் எல்லா அந்தணருஞ் சிவநெறியே கடைப்பிடித் தொழுகவேண்டுமென்பது அவர் கருத்து.

அவர் தந்தையார் சிவபாத விருதயர் என்ற தமது பெயர்க்கேற்பச் சிவபெருமான் திருவடித்தாமரைகளை தமது உள்ளத்தில் எஞ்ஞான்றும் பதியப்பெற்ற சீர்மையுடையராதலின் நாடெங்குஞ் சிவமணங் கமழவேண்டுமென்ற ஒரே பெருநோக்கமுடையவராய் ஓர் அருட்புதல்

வரைவேண்டி அருந்தவமியற்றினர். அவர் காதலியாருந் தம் கணவனோடு ஒத்த கருத்துடையவராய் நோற்றனர். இருவருடைய மெய்த்தவங்களும் ஒருமைப்பட்டு ஒப்பற்ற வென்பது பிறர் யாவருக்குங் கிடைத்தற்கரிய ஞானப் புதல்வற்பேறு எண்ணியாங்கு அவருக்கு எய்தினமையால் தெளிவாம்.

> பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
> மக்கட் பேறல்ல பிற. (குறள் - சுக)

என்ற திருக்குறளைத் தமது அனுபவத்திற் கண்டவரெல்லாருள்ளும் இவ்விருவருமே தலைசிறந்தவராவர். சைவநெறியை நிலைநாட்டுதற் பொருட்டுத் தவத்தாற்பெறும் புதல்வர் தம்மினும் பேராற்றலுடையராய்த் திகழ்வரென்ற கருத்தாலும் தம் மைந்தர் அருஞ்செயல் தமது செயலினும் மிக்க இன்பம் விளைக்குமாதலானும், சமயக் காப்பிற்குரிய அருள் ஆற்றலைத் தாமே வேண்டிப்பெறுது அஃதுடைய அரும் புதல்வரைவேண்டிச் சிவபாத விருதயர் தவங்கிடந் தனரென்க.

பரமாசிரியர் பிறந்தநாளும் சிவபெருமான் திருநாளும் திருவாதிரையே. அது நம் நாயனர் சிவம்பெருக்குந் தன்மையாரென்பதற்கு அறிகுறியாகும். அவரது குழந்தைப் பருவத்தைப்பற்றிப் பிள்ளைத்தமிழ் நயங்கள் யாவும் அமையும்படி பத்துப் பருவத்துள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பாடலமைத்துள்ளார் ஆசிரியர் சேக்கிழார். நாயனருடைய செயல்கள் யாவுஞ் சமய நாட்டத்தையே குறித்து நின்றன என்பது அப்பாட்டுக்களாற் புலனும்.

ஆளுடைய பிள்ளையாராய்த் தோன்றுமுன்னமே நம் நாயனர் சரியை கிரியை யோகங்களை முடித்துக் கடவுளோடு ஒப்பத் தொழிலும் வடிவமும்பெற்று உயர் பதவியில் இருந்திருத்தல்கூடும் என்பதும், இவ்வுலகத்தே உடம்பெடுத்துத் தவமுதிர்ச்சியால் முன்னை நல்லுணர்வினைக் குழந்தைப் பருவத்தேபெற்று விளங்கினரென்பதும், ‘பண்டு திருவடி மறவாப் பான்மையோர்’, ‘தம் மேலைச்

சார்புணர்ந்தோர்' என்ற திருவாக்குக்களான் ஊகித்தறியப்படும். நம் நாயனார் குமரப்பெருமானது அடியார் வைகும் அருளுலகத்தின்கண் அப்பெருமானுக்கு அடுத்த பெரும்பதவியில் இருந்தவராய்க் குமரப் பெருமானுக்குரிய வடிவமுந் தொழிலும் உடையவராய்ச் சைவசித்தாந்தத்தை நிலைநாட்டுதற்பொருட்டே மண்ணுலகின்கண் இழிந்தருளினரென்பது அவரைப் பரமசிவத்தின் திருமகனென்ற பெரியபுராணத் திருவாக்குக்களானும் அருணகிரிநாதர் முதலிய பெரியோர் வாக்குக்களானுந் துணியப்படும்.

ஆனால் நம் பரமாசிரியர் குமரக்கடவுளே, ஆன்மா அல்லர் என்று கூறுவது முகமனேயன்றி உண்மையாகாது.

மாநகர மலங்கரிமின் மகரதோ
    ரணநாட்டு மணிநீர் வாசத்
தூநறும்பூ ரணகும்பஞ் சோதிமணி
    விளக்கினொடு தூப மேந்து
மேனையணி பிறவுமெலா மெழில்பெருக
    வியற்றுமென வேவித் தானும்
**வானவர்நா யகர்மகனார்** வருமுன்பு
    தொழுதணைந்தான் மழவர் கோமான்.

நிறைகுடந்தூ பந்தீப நீடநிரைத் தேந்தி
நறைமலர்ப்பொற் சுண்ண நறும்பொரியுந் தூவி
மறையொலிபோய் வானளப்ப மாமுரச மார்ப்ப
**இறைவர்திரு மைந்தர்** தமையெதிர்கோ ளேற்றார்.

சிரபுரத்துப் பிள்ளையா ரருளிச் செய்த
    திருப்பதிகங் கேட்டதற்பின் றிருந்து நாவுக்
கரசுமதற் குடன்பாடு செய்து தாமு
    மவர்முன்னே யெழுந்தருள வமைந்த போது
புரமெரித்தார் **திருமகனா** ரப்ப ரிந்தப்
    புனனாட்டி லெழுந்தருளி யிருப்பீ ரென்று
கரகமலங் குவித்திறைஞ்சித் தவிர்ப்ப வாக்கின்
    காவலருந் தொழுதரிதாங் கருத்தி னேர்ந்தார்.

மாறில் வண்பெரு வணிகருந் தொண்டரு மலர்ந்த
நீறு சேர்தவக் குழாத்தினை நீளிடைக் கண்டே
யாறு சூடினர் திருமக னாரணைந் தாரென்
றீறி லாததோர் மகிழ்ச்சியி னுல்விழுந் திறைஞ்ச.
(சம்பந்தர் புராணம் - ருகச, ருசo, கூகஎ, கoஎச)

திகழு மலங்கற் கழல்பணி வார்சொற் படிசெய்யவோ
திகழு மலங்கற் பகவூர் செருத்தணி செப்பிவெண்பூ
திகழு மலங்கற் பருளுமென் னுமைமண் சேனையுபா
திகழு மலங்கற் குரைத்தோ னலதில்லை தெய்வங்களே.
(கந்தரந்தாதி - உக)

தென்ன வனங்கனஞ் சூழ்காத் திரிநக சூலகரத்
தென்ன வனங்கனந் தப்பத நீட்டினன் செல்வமுன்பின்
தென்ன வனங்கனன் னீற்றாற் றிருத்திய தென்னவின்னந்
தென்ன வனங்கனங் கைச்சிலைக் கூனையுந் தீர்த்தருளே.
(கந்தரந்தாதி - ருகூ)

ஓமெனுந் தாரக வொண்பொருள் சிவனுக்
காமென மொழிந்தே யருட்குரு வானோன்
பொற்புறு பொதிய வெற்புறு முனிக்கு
நற்பொருள் விளக்கு ஞான தேசிகன்
பொய்வழிச் சமணப் புலையிருள் நீக்கிச்
சைவம் வளர்க்குஞ் சம்பந்த மூர்த்தி.
(திருச்செந்தூர்ச் சுப்பிரமணியரகவல் - க-கூ.)

மேற்போந்த செய்யுட்களிற் கூறப்பட்ட வாக்கியங்களானே திருஞானசம்பந்தப் பெருமான் குமரக்கடவுளே யென்று கொள்ளுதல் கூடாதோவெனின், கூடாது. என்னை? சம்பந்தர் புராணம்-ருரு-ம் திருப்பாடலில் ஆசிரியர் சேக்கிழார் 'பண்டு திருவடி மறவாப் பான்மையோர்தமை' என்றமையால் சிவபெருமானது திருவடி மறவாத அடியவரென்பது தெளியப்படும். குழந்தைப் பருவத்திலே ஞானம் பெறும் பான்மையுடையார்க்கு அம்மையப்பராக இறைவன் எழுந்தருளி ஞானப்பால் கொடுத்தமையால் நம் நாயனார் சிவபெருமான்றன் திருமகனார்

என்று சொல்லுவதற்குப் பெரிதும் பொருத்தமுடைமை பற்றி முகமனாக அவ்வாறு கூறினாரேயன்றி, குமரக்கடவுளின் திருவவதாரமென்று யாண்டுங் கூறிற்றிலர். திருத்தொண்டின் நிலைவிளக்கவந்த அடியவர் என்பதையே ஆசிரியர் சேக்கிழார் பலவிடத்தும் விளக்கினார். திருநாவுக்கரசு நாயனார் நம் நாயனாரைச் சிறப்பித்துக் கூறுமிடத்தே 'கதவந் திறந்து உரைக்கப்பாடி யடைப்பித்த தழைத்த மொழியார்' என்று (திருநாவு. பு. உ௪0) மொழிந்ததாகவும், 'மெய்த் தொண்டர்க்கு இடையீடு பெரிதாமன்றே' (சம்பந்தர் புராணம். ருகூஉ) என்று நினைந்ததாகவும் ஆசிரியர் சேக்கிழார் குறித்தது காண்க. சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருஞானசம்பந்தரைத் திருநாவுக்கரசர், திருநாளைப் போவார் முதலியாரோடு சேர்த்து,

> நற்றமிழ்வல்ல ஞானசம்பந்தன்
> நாவினுக்கரையன் நாளைப்போவானுங்
> கற்றசூதன்நற் சாக்கியன்சிலந்தி
> கண்ணப்பன் கணம்புல்ல னென்றிவர்கள்
> குற்றஞ்செய்யினுங் குணமெனக்கருதுங்
> கொள்கைகண்டுநின் குரைகழலடைந்தேன்
> பொற்றிரள்மணிக் கமலங்கண்மலரும்
> பொய்கைசூழ் திருப்புன்கூருளானே. (சுந். தேவாரம்)

என்றருளிச் செய்தமையானும் நம் நாயனார் தொண்டரென்பது இனிது விளங்கும். சம்பந்தர் தமது தேவாரத்துள் 'நன்னெஞ்சே' என்றும், 'என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே' என்றும், 'தானெனை யாண்டவன்' என்றும் அருளிச் செய்தமையானும் அவர் அடியார் என்பது துணியப்படும். ஞானப்பா லுண்ணுவதற்குமுன் தவமுதிர்ச்சியால் குழந்தைப் பருவத்தே பண்டை நல்லுணர்வு பெற்றதும் நிரந்தரமாக அல்லாமல் ஒரொருகால் என்பதே குறிக்கப்பட்டது.

> 'தம்மேலைச் சார்புணர்ந்தே' யென்றது
> 'தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும் பிள்ளைமை தானோ'

என்றது அதனை வற்புறுத்தும். ஆதலால் சிவஞானம் பெறுவதற்குமுன் உயிர்க்குரிய தன்மைகள் அவர்க்கிருந் தமை உணரப்படும். புராண முழுவதிலும் நம் நாயனார் உண்மைத்தொண்டர் தலைவராய்த் திகழ்ந்தனரென்பதே போதருகின்றது. அவர் கந்தக் கடவுளின் அம்சமாயிருந்து தொண்டராய் நடித்தாரென்று கோடற்குச் சான்று யாது மில்லை. எல்லாவுயிர்களும் உய்தி எய்துவதற்கு வழிகாட்ட வரும் தலைவரும் ஓர் உயிராக இருத்தலே அவ்வுயிர்கட் குத் தாமும் வீடு அடையலாமென்னும் உறுதியைப் பயக்குமாதலின் அதுபற்றி இழுக்கு என்னையென்றொழிக.

சிவஞானமும் சிவானுபவமும் தொடக்கத்திலேயே முழுவதும் ஒருங்கு பெறுவதற்கு உயிர் தகுதி வாய்ந்த தன்றாகலின், ஞானப்பாலானது பொன் வள்ளத்திற் கரந் தூட்டப்பட்டது. இக்காரணத்தைக் குறிப்பாக,

'தெய்வச் சுருதி தமிழ்க்கன்றித்
தீட்டா நிலைமைத் தெனவுலகில்
தெரிக்குங் காழிச் சிவஞானச்
செம்மற் குழவிக் கருள்ஞானம்
பெய்து கொடுக்க வோமுலையாம்
பெரிய மலைவா யுறுத்துமென்றோ,
பெருமான் தனையுங் குழைத்தவலிப்
பெற்றி யறிந்து தடுத்தோ பூங்
கையி லிலகு நகக்குறிபற்
கதுவ னோமென்றோ, தீம்பால்
கறந்து கொடுத்தா யெனச்சகிமார்
கனிந்து பாட நகைமுகிழ்க்கும்
வைவைத் தமைத்த மதர்வேற்கண்
வாழ்வே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத
வல்லி வருக வருகவே. (அமுதாம்பிகை பி. த.)

என்னுஞ் செய்யுளில் ஆசிரியர் சிவஞானசுவாமிகள் அமைத் தது கருதத்தக்கது. சீர்காழிப் புராணத்துள் முருகனையே

தமக்குக் குழந்தையாக வரவேண்டுமென்று சிவபாத விருதயர் தவங்கிடந்தாரெனவும், அவ்வாறே கந்தக்கடவுள் கமலத் தடாகத்தின் பாங்கர் ஓர் மைந்தனுய் வந்துதித்தன ரெனவுங் கூறுஞ் சரிதை பெரியபுராணத்தோடு ஒவ்வாமையின் அது பௌராணிக மதமாமேயன்றி உண்மையாகாது. பகவதியார் மணிவயிற்றில் 'உருத்தெரியவரும் பெரும்பேறுலகுய்ய உளதாக' என்றதனை முகமனென்று கொள்வதற்கிடமில்லை. அருணகிரிநாதர் முருகக்கடவுளைத் துதிக்கும் பாடல்களில் அப்பெருமான் சமணர்களை வென்றதாகவும் சைவத்தை நாட்டியதாகவும் செப்பியதென்னையோ வெனின், ஸ்ரீகண்ட ருத்திரர் மகேசுரருடைய வடிவமுந் தொழிலுமுடையவராய் நின்றதுபோல நம் நாயனர் குமரக்கடவுளோடு ஒத்தவடிவமுந் தொழிலுமுடையவராய் அவருக்கடுத்த நிலையில் நின்றமையாலும் அதுபற்றி அவரை அபர முருகன் என்று கருதுங் கொள்கை அருணகிரிநாதர் காலத்தே நிலவியதாகலானும், அபர முருகற்குரிய செயல்கள் பர முருகற்குங் கூறுவது தோத்திர வழக்கும் புராண வழக்குமாதலானும் அவ்வாறே திருமாலின் அவதாரமெனப்படுஞ் ஸ்ரீராமருடைய செய்கை யனைத்தும் திருமாலுக்கேற்றிக் கூறும் வழக்கு அருணகிரிநாதர் பாடலுட் காணப்படுதலானும் அது 'புராண வழக்'கென்பது தெளியப்படும்.

---

## ௩. ஞானப்பாலுண்டு திருவருள் பெறுதல்

*சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்*
*பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்*
*உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்*
*தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்.*

*எப்பொருளு மாக்குவான் ஈசனே யெனுமுணர்வும்*
*அப்பொருடா னாளுடையார் அடியார்க ளெனுமறிவும்*
*இப்படியா லிதுவன்றித் தம்மிசைவு கொண்டியலுந்*
*துப்புரவில் லார்துணிவு துகளாகச் சூழ்ந்தெழுந்தார்.*

(சம்பந்தர் புராணம்-௭௦, ௭௧)

ஆளுடைய பிள்ளையார் தம் ஞானத்தந்தையாராகிய பரமசிவத்தினைப் பிரிந்த உணர்ச்சி தோன்றியபோது, அஞ்சினவர்போல் இடையிடையே குறிப்பாக அழுதனர். ஒருநாள் தம் தகப்பனாராகிய சிவபாத விருதயர் நீராடச் சென்றபொழுது, பிள்ளையார் தாமும் உடன்செல்லக் கருதி அழுது அவர் பின்சென்றார். அதுகண்டு சிவபாத விருதயர் பிள்ளையாரை வரக்கூடாதென்று விலக்கவும் அவர் பொற்கிண்கிணியணிந்த கால்களைக் கொட்டியழுது மீளாது நின்றமையால் அவரையும் உடனழைத்துச் சென்றனர். பிள்ளையாரோடு திருக்கோயிலினுள்ள திருக் குளத்தின் துறையை யடைந்து பிள்ளையாரைக் கரையிலே நிறுத்திவிட்டுத் தந்தையார் திருத்தோணிபுர முதல்வரை யும் உமையம்மையாரையும் வணங்கி நீருள் மூழ்கி நியமங் கள் பல செய்த பின்பு 'அகமருட' மந்திரஞ் (மறமகற்று மந்திரம்) சொல்லி நீருட் சிறிதுநேரம் மூழ்கி நின்றகாலை அவரைக் காணாமையினால் பிள்ளையார் பொறுத்திராது பண்டு கடவுளுடைய திருவடியை வழிபட்ட உணர்ச்சி வந்து மூண்டமையால் அதை நினைந்து அழத்தொடங்கி னார். கண்களில் நீர்ததும்பக் கைகளைப் பிசைந்துகொண்டு உதடுதுடிப்ப விம்மி யழுதகாலை அவர் தோணியப்பர் வீற்றிருக்கின்ற திருக்கோயிற் சிகரத்தைப் பார்த்து, 'அம்மே அப்பா' என்றழைத்தனர். அவர்க்கருள் செய்யக்

கருதிய திருத்தோணியப்பர் தம் தேவியாரோடு விடையின்மேலெழுந்தருளிப் பொய்கைக் கரையை யணைந்து, அம்மையைப் பார்த்துப் பொன்வள்ளத்திலே திருமுலைப் பாலினைக் கறந்து பிள்ளையாருக்கு ஊட்டும்படி கட்டளையிட்டருளினர். அவ்வாறே அம்மையார் திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்திலே கறந்தருளி அதிலே பெறற்கரிய சிவஞானமாகிய இனிய அமுதத்தையுங் குழைத்துக் குழந்தையின் கண்ணைத் துடைத்துப் பாலுணவை உண்ணும்படி கொடுத்தருளினர். யாவர்க்குந் தந்தையாராகிய அம்மையுமப்பனும் இவ்வாறு பிள்ளையாருக்கு ஞானத்தைக் கொடுத்தமையால் விண்ணவர்க்கும் முனிவருக்கும் பெறுதற்கரிய ஒப்பற்ற சிவஞானச் செல்வத்தை அவர் பெற்றுத் திருஞான சம்பந்தரென்னும் பெயர்க்குரியவரானார்.

அருட்சத்தியினது ஞானப்பால் அருந்தியதன் பயனாக நம் ஆளுடைய பிள்ளையார், 'சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானமும்,' 'பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங்கிய ஞானமும்,' 'உவமையிலாக் கலைஞானமும்,' 'உணர்வரிய மெய்ஞ்ஞானமும்' ஒருங்குணர்ந்தனர். இறைவனாலே எல்லாப் பொருள்களும் ஆக்கமடைகின்றன வென்ற உணர்ச்சியும், அங்ஙனம் ஆக்கப்பாடெய்தும் பொருள்களுள்ளே இறைவனடியார் அடங்குவரென்ற அறிவும், ஈசன் இவ்வாறு அருள்புரிகின்றான் என்ற உணர்ச்சியுமின்றித் தமது சிற்றறிவிற்கு ஒத்தபடி யொழுகும் வலியில்லாரது கொள்கை மாய்ந்தொழியும்படி உண்மை நிலை நாட்டுவான் எழுந்தனர்.

ஆயகாலை திருக்குளத்தின் முழுகி நியமங்கள் முடித்துக் கரையேறிய சிவபாத விருதயர் உயர்ஞானத்தோடு விளங்குகின்ற பிள்ளையாரைப் பார்த்து யார் கொடுத்த பாலுணவை நீயுண்டாயென்று வெகுண்டு, எச்சில் படும்படியாக உனக்கு இது கொடுத்தவரைக் காட்டு என்று கையில் ஒரு குச்சியை யெடுத்தோங்கினார். அப்போது பிள்ளையாராகிய பெருந்தகையார் ஆனந்தக்கண்ணீர்

பெய்துகொண்டு ஒருகாலைத் தூக்கி ஒரு திருக்கை விரலை உச்சியின் மேலே யெடுத்து, வானில் நிறைந்த பேரொளியிலே விளங்கும் இளங் காளைமீது உமையம்மையாரோடு அளவில்லாத கருணைபுரிந்து நின்ற பெருமானைச் சுட்டிக் காட்டி, உண்ணிறைந்த சிவானுபவத்தின் பயனாய் வெளியே யெழுகின்ற ஒப்பற்ற தமது ஞானத் திருமொழியினாலே அளவற்ற மந்திரங்கட்கு மூலமாகிய ஓங்காரத்தோடு கலந்த எழுத்தாற் றொடங்கி இவ்வுலகவர் அருளுரைபெற்றுய்யுமாறும் எல்லா வுயிர்களும் மகிழ்ச்சி மிக்குறுமாறுந் தமது திருவருட் பாடல் பரமசிவத்தின்பாற் சென்று ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு வாயிலாகச் சிவபெருமானது திருச்செவியைச் சிறப்பித்துச் செவ்விய இசையோடு எடுத்த 'தோடுடைய செவியன்' என்னும் அனுபவ உண்மை மிக்க திருப்பதிகத்தை மொழிந்து அதனாற் பிரமபுரமேவிய அண்ணலை அடையாளங்களுடன் இனிதெடுத்துக்கூறி எம்மை இவ்வாறு செய்த பிரான் இவனன்றே யென்று தந்தையாருக்கு அறிவுறுத்தினர்.

இந்நிலவுலகில் வாழ்பவர் தவறிழைத்தாலும் மீண்டு இறைவன்பால் அடைக்கலம் புகுந்தால் பரமசிவத்தின் பெருங்கருணை அவர்களை ஏற்றுய்விக்குமென்று அறிவுறுத்துவான், ஆழ்ந்தாராயாது கயிலையை யெடுக்க முயன்ற இராவணன் அம்மலைக்கீழ் அழுத்தப்பட்டுத் துன்புற்றகாலை மனந்திரும்பி அன்பொடு இன்னிசைப் பாடல் பாடியவுடன் கருணைக்கடவுள் அவனுக்கருள்புரிந்த சீர்மையை நம் பரமாசிரியர் தமது ஒவ்வொரு பதிகத்துள்ளும் எட்டாவது திருப்பாட்டின்கண் எடுத்தோதினார்.

தம்மை அன்புடன் வழிபடுவார்க்கே சிவபெருமான் அருள்செய்வதென்றிருப்பவும் அவரைத் தொழாது தாங்களே கடவுளரென்ற தப்புக் கொள்கையினாலே மயக்கமடைந்த மாலுமயனும் இழிந்த பிறப்பாகிய பன்றியும் அன்னமுமாய் அடிமுடி தேடியும் அவனை அறியாதொழிந்து, பின்னர் அஞ்செழுத்தோதி உய்ந்த வரலாற்றை ஒன்பதாவது திருப்பாட்டினுள் வைத்தார்.

பத்தாந் திருப்பாட்டினுள், கலைஞானங்கட்கெல்லாந் தலைவராகிய சிவபெருமானது அருள்நெறியை யறிந்து உய்யமாட்டாது தம்மிற்றமே நலங்கொளக் கருதும் அறிவில்லாத சமணர், புத்தர் முதலியோருடைய சமயநெறிகள் பழிவிளைக்குங் குற்றமுடையன என்று எடுத்து மொழிந்தார்.

பதினொன்றாவது திருப்பாட்டினைப் பதிகப்பயன் முதலியன கூறுந் திருக்கடைக்காப்பாக அமைத்துத் திருப்பதிகம் பாடித் தொழுது நின்றார்.

நின்றவுடன் நம் நாயனார் யாவரும் பெறுதற்கரிய திருவருள் பெற்றதைக் கண்டு விண்ணவரெல்லாரும் விசும்பினிற்கூடித் தேனொழுகும் பூமாரி பொழிந்தனர். வானத்தின் மங்கல ஓசையும், கந்தருவர் கின்னரர் முதலியோரது இசைக்கடல் முழக்கமும், இந்திரன் முதலியோரது துதி முழக்கமும், அளவற்ற கணநாதரது அரகரவென்னும் ஒலியுள் அடங்கின. மந்திர வொலிகள் மிகுதி முழங்கின. இறைவனைத் தொழவந்த விண்ணோர் முடிகளினின்றும் சிந்திய மணிகள் மழைத்துளிகள்போல நிலத்தே விழுந்து நிறைந்தன. தவமுனிவர்களாகிய கடல் புடைசூழச் சிவஞானப் பிள்ளையாருக்கு எல்லையற்ற பிறவிக்கடலைக் கடந்திடும்படியாகத் தம் இணையடிகளை அருளவந்த இறைவர் தம்மையலாரோடு திருக்கோயிலினுள்ள பெருந்தோணியையடைந்தனர். இறைவர் அவ்வாறு அணைந்தமை கண்ட மழவிளங்கன்றாகிய நாயனாரும் தமது கண்வழியே கருத்துச்செல்ல அப்பெருமான் நண்ணிய திருக்கோயிலினுட் புகுந்தனர்.

எத்துணையோ தவஞ்செய்து நம் நாயனார்க்குத் தந்தையெனப் பெற்ற அந்தணர் திலகர் கையிலெடுத்த சிறுகோல் கீழேவிழக் கைகுவித்துக் களிப்படைந்து கூத்தாடி மிக்க வியப்போடும் விருப்போடும் நாயனாருளிய அருந்தமிழ்ப் பதிகத்தால் அறியக்கிடந்த குறிப்புப்பொருளை உணர்ந்தனர். தம் புதல்வரைப்போலத் தாம் கடவுளைக் காணப் பெற்றிலரெனினும், நிகழ்ந்தவற்றைப் பார்த்து அவை

இறைவராது திருவருட்டிறனேயென்று துணிந்து, தம் புதல்வர் பின்சென்றார்.

இவ்வற்புதச் செய்தியறிந்த வேறு அந்தணர்களும் மயிர்க்கூச்செறிந்து இப்படிப்பட்ட அருஞ்செயல் இதற்கு முன் யாண்டும் நடந்ததில்லையே, இஃது என்ன வியப் பென்று வியந்து திருக்கோயில் வாயிலில் ஒருங்குகூடினர். திருத்தோணியில் வீற்றிருந்த பெருமான் விடைமேற் போந்து உமையம்மையாரோடு தம்மை யாட்கொண்டரு ளிய திறத்தினைப் பிள்ளையார் அவர்கட்கு எடுத்துக் கூறி னர். ஏழிசை நிறைந்த செந்தமிழ்ப் பதிகங்களால் இறை வனையே பாடுந் திருத்தொண்டு வாய்க்கப்பெற்ற சிறப்புடன் ஞானப்பால் மணங்கமழும் அமுதவாயினர், அந்தணர் பலர் விருப்புடன் சூழத் திருக்கோயிலினின்றும் புறப்பட்டார். அப்போது சீர்காழிப் பதியிலுள்ள யாவரும் கோபுர வாயிலுக்கு வந்து அவரை எதிர்கொண்டு அவர் திருவருள் பெற்ற திறனை வியந்து துதித்தனர்.

காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
தாழிய கடலே யதனிடை யமுதே அடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியா டனதிரு வருள்பெற் றனையென்பார்.

மறைவளர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியி னொளியே வெளியேவந்
திறையவ னுமையா ளுடனருள் தரவெய் தினையென்பார்.

புண்ணிய முதலே புனைமணி யரைஞா ணொடுபோதுங்
கண்ணிறை கதிரே கலைவளர் மதியே கவின்மேவும்
பண்ணியல் கதியே பருவமொ ரொருமூ வருடத்தே
எண்ணிய பொருளாய் நின்றவ ரருள்பெற் றனையென்பார்.

(சம்பந்தர் புராணம்-௬௧, ௬௨, ௬௩)

திருஞானசம்பந்தப் பெருமான் மூன்று வயதிலே கடவுளுடைய திருவருளைப் பெற்றது யாவர்க்கும் பெரு வியப்பைத் தரக்கூடியதே. சந்தானசாரியருள் தலைவராகிய

மெய்கண்ட தேவரும் அத்துணை வயதிலே அருள்பெற்றன ரெனக் கேட்கப்படுகின்றனம். அன்றி, ஏனைச் சைவாசிரியர் களும் பிறசமயத் தலைவர்களும் குழந்தைப் பருவத்தில் உயர்ஞானம் பெற்றதாக யாம் யாண்டுங் கேட்டிலேம். சம்பந்தப்பெருமான் ஒருவரே தமது திருவாக்கினாலே தமக்குப் பிள்ளைப் பருவத்தில் ஞானப்பால் கிடைத்ததை இனிது கூறியுள்ளார். மதுரையிலே பல்லாயிரம் சமணர் கள் நம் பெருமானை எதிர்த்த காலையில் அவர்களது ஆர வாரத்தைக் கண்டு அஞ்சிய பாண்டிமாதேவியார்க்கு அமைதி கூறுமிடத்து,

மானி னேர்விழி மாதராய் வழுதிக்கு
மாபெருந் தேவிகேள்
பால்நல்வா யொருபாலன் ஈங்கிவ னென்று
நீபரி வெய்திடேல். (ச. தேவாரம்)

என்று அவர் அருளிச்செய்தமையால் மதுரைப்பதியில் வாது நிகழ்ந்த காலையிலே நம் நாயனார் பால்மணம் வீசக் கூடிய ஒரு பாலனாயிருந்தமை தெளிவு. அதற்குச் சில காலத்திற்கு முன்பேயே அவர் திருவருள் பெற்றிருத்தல் வேண்டும். மற்றொரு பதிகத்திலே,

போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே.
(ச. தேவாரம்)

என்றருளிச் செய்தமையால் பரமசிவன் உமையம்மையா ரோடு எழுந்தருளித் தமக்கு ஞானப்பாலமுதம் நல்கியதை அவரே உரைத்தவாறாகும். இது நம் நாயனார் குழந்தைப் பருவத்திலேயே திருவருள் பெற்றதற்கு அகச்சான்றாகும்.

அங்ஙனந் திருவருள் பெற்றிருத்தல்கூடுமோ என் பார்க்கு அது கூடுமென்றே விடுக்கற்பாலது. இற்றைக் காலத்திற்கூடச் சிறுமகார் சிலர் அளவற்ற கணிதநூற் புலமைவல்லராய் ஒருமணி நேரத்திற் செய்து முடிக்கக்

கூடிய கணக்குகட்கு இரண்டொரு விநாடியில் முடிவு கூற வல்ல ஆற்றல் பெற்றிருத்தலைக் காண்கின்றோம். இவர்கள் இவ்வாறு பெற்றிருத்தற்குக் காரணம் முற்பிறப்பில் அளவு கடந்த கணிதநூற் பயிற்சி இவர்கட்கு அமைந்திருந்ததே யாகும். அவ்வாறே முற்பிறப்பிற் கடவுள்மாட்டு அளவற்ற அன்புசெலுத்தி, அவர் திருவருட்குப் பெரிதும் உரிமை பெற்றிருந்தவர்கள் இப்பிறப்பிலே மிக்க இளமைப் பருவத்திலேயே அத் திருவருட்பேற்றினை எய்துதற்குரிய தகுதியுடையராதல் கூடுமென்பது கருதத்தக்கதே.

அங்ஙனந் திருவருள் பெற்றவர் ஒருவர் இருவரே யொழியப் பிறரெவரும் இலராலோவெனின் இலர். உலகத்தில் மிக்குப் பயின்றுவருங் கணித நூலிலே எல்லையற்ற வியப்புப் புலமைவாய்ந்த இளஞ்சிறார் மிகச் சிலரே யிருத்தல்போலக் கடவுளை மெய்யன்போடு பயன் கருதாது வழிபாடு செய்தல் அரிதினும் அரிதாய்க் காணப்படும் இக்காலத்திலே மிக முயன்றும் பெறுதற்கரிய திருவருட்பேற்றினைக் குழவிப்பருவத்திலே, எய்துதற்குரியோர் ஒருவரிருவரேயாயிருத்தல் வியப்பாகாது. சண்டேசுர நாயனாரும் இளமைப் பருவத்தினரே. கண்ணப்பர் குழந்தைப் பருவத்தைக் கடந்தவரெனினும் அறிவால் அப்பருவத்தினரோடொத்தவரே. உலகத்தில் திருவருள் பெற்றவரே மிகச் சிலர். அவருள்ளுங் குழந்தைப் பருவத்தில் திருவருள் பெற்றவர் ஒருவரிருவர்தான் இருத்தல் கூடும். இயற்கையறிவினைக் கல்வியாகிய செயற்கையறிவாற் செம்மைப்படுத்துவதற்குப் பன்னாள் வேண்டப்படும். திருவருளினாலே இயற்கை அறிவு விளக்கமெய்துவதாயின் ஒரு கணத்திலே அது நிகழும். அதற்கு நாள் பல வேண்டியதில்லை. பல விளக்குகளை ஒவ்வொன்றாகக் கொளுத்த வேண்டுமானால் மிகுந்த நேரஞ்செல்லும். பல மின்சார விளக்குகளை ஒரே கருவியின் இயக்கத்தால் ஒரு கணப்பொழுதில் ஏற்றிவிடலாம். ஆதலால் நம் நாயனார் திருவருளினாலே ஓதாது எவற்றையும் உணர்ந்தது அவர்க்கு இயல்பாவதொன்றேயன்றி அரியதன்று.

கல்லாதே யெல்லாங் கற்பித்தான் காண்

(அப்பர்-திருத்தாண்டகம்)

என்றதுங் காண்க.

ஆயிர மைலுக்கு அப்பாலுள்ளவற்றைச் சேய்மை யுணர்ச்சி (Clairvoyance) என்னும் யோகக் காட்சியினால் அறியக்கூடுமென்பது இக்காலத்து ஆராய்ச்சியால் விளங்குகின்றது. அவ்வாறே காலத்தான் மறைக்கப்பட்டுள்ள வற்றையும் பாசம் நீங்கிய விரிந்த அறிவினாலே ஞானிகள் அறிவாரெனக் கொள்க.

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து. (குறள்-௩௯௮)

என்ற வண்ணம் முன்னைப் பல் பிறவிகளிற் பயின்ற ஞானமானது ஒரு பிறவியிலே மிக்க விளக்கமடைதல் இயல்பே. முன்னை நற்கல்வியின் பயனாக ஆகம ஞானமாகிய அபர ஞானத்தையும், முன்னைப் பெருந்தவத்தின் பயனாக அநுபவஞானமாகிய பரஞானத்தையும், நம் பரமாசிரியர் திருவருளினாலே குழந்தைப் பருவத்தே பெற்றுத் திகழ்ந்தனர்.

'சிவனடியே சிந்திக்கும்' என்ற திருப்பாட்டில் நான்கு வகை ஞானம் கூறப்பட்டுள்ளன. அவற்றைப் பற்றிய ஆராய்ச்சி விரிவாகப் புலவர்க்குள் நிகழ்ந்துள்ளது. கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடுதல் என்னும் நான்கின் சார்பாக ஞானம் நான்குவகைப்படுமென்பர் ஒரு சாரார். அபரஞானம், பரஞானமென்ற இரண்டே நான்காகக் கூறப்பட்டனவென்பர் மற்றொரு சாரார். இச் செய்யுளிலே இவ்வகைகளைப்பற்றித் தெளிவாக யாதுஞ் சுட்டப்படவில்லை. ஆதலால் அச்செய்யுட்கு நேர்பொருள் கொள்ளுதலே பொருத்தமுடைத்து.

சிவனடியென்பது உயிர்களை இயக்கு முதல்வனது செயல்வன்மையும் அறிவுவன்மையுமாம். திருவென்பது பேரின்பம் அல்லது சிவானந்தம். சிவபெருமான்றன் பேரறிவு பெருஞ்செயல்களுள் தம் அறிவுச்செயல் அடங்கப் பெறுதல் சிவானுபவமாகிய பேரின்பத்தை நல்குமாதலால்

அது 'திருப்பெருகு சிவஞான' மெனப்பட்டது. சிவப் பேற்றிற்குரிய அத்தகைய ஞானமே எவற்றினுந் தலைசிறந் தது. அது தலைவனை அறியுமறிவு. பற்றற்றானது பற்றி னைப்பற்றி நின்றொழுகுதல் அதன்பாற்படும்.

தலைவனை யறிந்து தன்னையறியும் அறிவினாலே பிற பொருள்களின் பற்றொழியும். நிலையாத உலகப் பொருள் வேறு, தான் வேறு என்று உணர்தலினாலே பிறவிக்கேது வாகிய அவா நீங்குதலால் தன்னையறியும் அறிவினைப் 'பவ மதனை யறமாற்றும் பாங்கினி லோங்கிய ஞானம்' என்றார். இது பாசநீக்கத்திற் கேதுவாயது.

அனுபவத்தாற் றலைவனை அறிந்து தன்னை யறியுமுன் பாசத்தோடு கூடிநின்ற நிலையில் முப்பொருளையும் ஆன்மா கருதலளவையால் அறிதற்குக் கருவியாயுள்ளது கலைஞான மாகும். ஏனை உலகப்பொருள்களை அறிவதைப் பார்க்கி னும் முப்பொருளைப்பற்றி ஆராயும் அறிவு சிறந்ததாகலின் அவற்றைப்பற்றிக் கூறும் அருள் நூல்களின் ஆராய்ச்சியே 'உவமையிலாக் கலைஞான' மெனப்பட்டது.

'மெய்ஞ்ஞான' மென்பது முப்பத்தாறு தத்துவங் களின் இயல்புகளை அறிதலே. மெய்-தத்துவம்.

> சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
> வகைதெரிவான் கட்டே யுலகு (குறள்-உஎ)

என்றவண்ணம் தத்துவத்தின் இயல்பு எளிதிற் புலப் படாது. நுணுகியறியுந் தன்மையதாதலின் அதனை 'உணர் வரிய மெய்ஞ்ஞான'மென்றார். தத்துவங்களின் கூட்டமே உலகனைத்தும் சட ஞாலத்தின் மூலத்தையறிவதே தத்துவ உணர்ச்சி. ஆகவே தலைவனையும் தன்னையும் உலகத்தையும் அனுபவத்தானும் கருதலளவையானும் அறியுமறிவே இச் செய்யுளுள் நான்கு ஞானமாகப் பகுத்துக் கூறப்பட்டது.

'எப்பொருளு மாக்குவா னீசன்' என்னுந் திருப் பாட்டினுட் சித்தாந்தக் கொள்கைக்கும் புறச்சமயக் கொள்கைக்குமுள்ள வேறுபாடும் புறச்சமயங்களை வென்று

சித்தாந்தத்தை நிலைநாட்டும் நாயனாரது திருவருள் நோக்கமும் இனிது விளக்கப்பட்டன.

திருவருள் பெறுவதற்குமுன் நாயனார் குழந்தைப் பருவத்தினராகலானும், அவர் திருக்கோயிற் சிகரத்தைப் பார்த்து, 'அம்மே அப்பா' என்றழைத்து அழுதமையாலும் அப்பொழுதே அவரை இறைவர் ஆட்கொள்ளுதற் குரிய நற்சமயம் வந்துற்றமையானும் இறைவர் குருவாக வந்து அருள் செய்யாது தந்தை தாயாராக வந்து பாலமுதம் அருந்தும் வாயிலாகச் சிவஞானத்தை நல்கினரென்க. குழந்தைப் பருவத்திற்கும் அழுத சமயத்திற்கும் ஏற்ற வாறு பாலடிசில் உதவினும் சிவபெருமான் மானிடச் சட்டை சாத்தி வாராது விடைமேல் உமையொருபாக ராகத் தோன்றியதற்குக் காரணம் நம் நாயனார் சகலராய்ப் பிறந்தும் பிரளயாகலருக்குரிய உபதேச முறைபெறும் பருவம் வாய்ந்திருந்தமையே என்பர். உயிர்கள் ஒருமல முடையன, இருமலமுடையன, மும்மல முடையனவென்று மூவகைப் படுமென்றும்; பிரகிருதி புவனங்களில் வைகும் உயிர்கள் மும்மல முடையனவென்றும்; அசுத்தமாயா புவனங்களில் வைகும் உயிர்கள் இருமல முடையனவென் றும்; சுத்தமாயா புவனங்களில் வைகும் உயிர்கள் ஒருமல முடையனவென்றும்; மும்மல முடையார்க்கு மக்கள் வடிவாய் வந்தும் இருமல முடையார்க்குக் கடவுள்வடிவாய் வந்தும் ஒருமலமுடையார்க்கு வெளிப்படாது அறிவின் கண்ணே நின்றும் இறைவர் உயர் ஞானத்தை நல்குவ ரென்றுஞ் சித்தாந்த நூல்கள் பகர்கின்றன. மும்மல முடையாருள் ஒரு மலமுடையார், இருமல முடையார்க் குரிய பக்குவம் வாய்ந்தவர்க்கு, அன்னோர்க்கு அருள் புரிந்த முறையிலே இறைவர் குருமொழி வைத்தலும் உண்டென்பர். நுண்ணிய இக்கொள்கை ஒருபுறமிருப்ப யார் யார் எவ்வெவ் வடிவினராக இறைவனை வழிபட்டார் களோ அவ்வவ் வடிவினராக அவர் தோன்றி யருள்செய் வாரென்ற கருத்தின்படி ஞானசம்பந்தர்க்கு அருள்புரிந்த துஉமாமென்று கூறுவாரு முளர்.

பெயராலும் வடிவாலும் பொருள்களைச் சுட்டியறியும் தன்மையுடைய உயிர்களுக்குக் கடவுளும், பெயரும் வடிவு முடையவராய்த் தோன்றி அருள் செய்வதே பொருத்த மாம்.

*திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை*
*உருநா மறியவோர் அந்தணனு யாண்டுகொண்டான்*
*ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க் காயிரந்*
*திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ.*

(திருவாசகம்)

என்றவண்ணம் அவர் அங்ஙனஞ் செய்யாராயின், அவராற் போந்த பயன் யாதுமின்று மென்க. ஆதலால் ஆன்மாக் களுக்கு அருள்செய்யும்பொருட்டுக் கடவுள் உருவத் திரு மேனி கொள்ளவேண்டியது இன்றியமையாத தென்பது அன்பர் யாவர்க்கும் ஒப்பமுடிந்ததொரு கருத்தாகும்

*அருவாகி நின்றானை யாரறிவார் தானே*
*உருவாகித் தோன்றானே லுற்று.* (சிவஞானபோதம்)

என்ற பெரியார் வாக்குங் காண்க.

இனி, கடவுள் உருவத் திருமேனிகொண்டு தோன்று வதும் இருவகையாகும். உலகப் பொருள்களில் யாதானு மொன்றை விரும்பித் தவங்கிடந்தவர்க்குக் கடவுள் தோன்றி அருள்செய்யுங்கால் அவர் அன்னோர்கள் வேண்டு வதையே ஈதலன்றித் தமது உண்மைத்தன்மையை அவர் கட்கு உணர்த்தமாட்டார். அவரது உண்மைத்தன்மையை அறியவிரும்பி அளவில் நற்றவமாற்றிய பெரியோர்க்கே அவர் உயர்ஞானத்தைக் கொடுப்பர். ஆதல்பற்றியே ஆசிரி யர் சேக்கிழார் 'தேவருக்கும் முனிவருக்குந் தெரிவரிய பொருளாகும் தாவில்தனிச் சிவஞானசம்பந்தராயினார்' என்று நம் நாயனார் பெற்ற பேற்றினை விதந்தோதியதூஉ மென்க.

இனி மூவாட்டைப் பிராயத்திலே, நம் நாயனார் ஒப் பற்ற ஞானம் பெற்றமை சமய நாட்டத்திற்குப் பேருதவி

யாயது. அத்துணைச் சிறுபிராயத்தே கரவுயாதுமின்றிக் குழந்தைகள் உள்ளதை உள்ளவாறு கூறுமியல்பின. ஆதலால் உண்மையை உணர விரும்புவார்க்கு அத்தகைய குழந்தைகளின் உறுதிமொழியே அசைவில்லாத நம்பிக்கையை அளிக்கவல்லது. இக்காரணத்தினாலேயே சீர்காழிப் பதியிலுள்ள அனைவரும் இந்த அருஞ்செயலைக் கண்டு பெருவியப்பும் பெருமகிழ்வும் எய்தினர்.

சிவபாதவிருதயர் பிள்ளையார்க்குப் பாலுணவு எச்சில் கலக்கும்படியாகக் கொடுத்தது யாரென்று கேட்டதையும் அதற்காகக் குழந்தையை அச்சுறுத்தியதையும் நோக்குமிடத்து, அக்காலத்திலே வருண ஆசாரங்கள் போற்றப் பட்டுவந்தன என்பது அறியப்படுகின்றது. பிள்ளையார் தமது வயதுக்கேற்ற ஊக்கத்துடன் ஒருகாலைத் தூக்கிக் கொண்டு ஒருவிரலால் சிவபெருமானைச் சுட்டிக்காட்டினர். 'காலெடுத்தே' என்ற சொற்றொடர் கூறப்படுவதேயன்றி இன்னகாலைத் தூக்கினரென்பது கூறப்படவில்லை. பாலுண்ட பொன்வள்ளம் ஒருகையிலிருப்ப மற்றொரு கையினால் கடவுளைச் சுட்டிக் காட்டியதாகவும் சுட்டிக்காட்டிய கைப்பக்கத்திற்கு எதிர்ப்பக்கமுள்ள காலே தூக்கப் பட்டதாகவுங் கருதி முன்னோர் சிலர் சம்பந்தப்பெருமானது திருவுருவத்தைத் திருநெல்வேலி முதலிய சில பதிகளில் அமைத்துள்ளார்கள். அவர் சுட்டிக் காட்டிய போது அவர்க்குமாத்திரமே தெரியும்படியாகச் சிவபெருமான் விடைமேல் அம்மையாரோடு விளங்கினரேயன்றிச் சிவபாதவிருதயர்க்குக்கூடத் தமது காட்சியைக் கொடுத்திலர்போலும். அது,

> தாணுவி னைத்தனி கண்டு தொடர்ந்தவர் தம்மைப்போற்
> காணுதல் பெற்றில ரேனு நிகழ்ந்தன கண்டுள்ளார்
> (சம்பந்தர் புராணம் - அ௬)

என்றமையால் விளங்கும். கண்ட கடவுளது திருக்கோலத்தையே 'தோடுடைய செவியன்' என்னுஞ் செய்யுளின் கண்ணே நம் பரமாசிரியர் விளக்கியருளினார். தகரவித்தையையுந் தமிழையுங் குறிக்குந் தகர மெய்யொடு எல்லா

மறைகட்கு மூலமாகிய ஓங்காரத்தையுஞ் சேர்த்து உமையம்மை தமக்கு நேரிற் பாலமுதம் அருளினமையாலே தோடணிந்த இறைவரது சத்திபாகமாகிய வாமபாகத்தையே முதற்கண் சிறப்பித்துத் 'தோடுடை செவியன்' என்றெடுத்தார். தான் சொல்லும் மொழியினை ஏற்பதற்குரிய அங்கம் செவியாதலின் பிற திருவங்கங்களினுஞ் செவியையே முதற்கண் சிறப்பித்துக் கூறினார். சிவபாத விருதயர் கருதியவண்ணந் தமக்குப் பாலருளியதின் மாத்திரையின் நில்லாது சிவஞானத்தை நல்கித் தமது உள்ளத்தைக் கவர்ந்து பழவினையை யறுத்துச் சிவமாக்கினமையால், அவ்வருட் செயல்கள் அனைத்தும் உட்பட 'எம்மை இது செய்தபிரான்' என்றனர்.

நம் பரமாசிரியர் தமது ஒவ்வொரு திருப்பதிகத்திலும் எட்டாம் பாட்டில் இராவணனுக்குச் சிவபெருமான் அருள் புரிந்ததையும், ஒன்பதாம் பாட்டில் மாலும் அயனும் அடி முடி தேடியதையும், பத்தாம் பாட்டில் சமணர் சாக்கியரது இழிந்த கொள்கையையும்பற்றிக் கூறி, பதினொன்றும் பாட்டினைத் திருக்கடைக் காப்பாக அமைத்துள்ளார். இங்ஙனஞ் செய்ததற்குக் காரணத்தைச் சேக்கிழார் சுவாமிகள் அறிவித்திருக்கின்றார்கள்.

மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளு மெனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்க னெடுத்துமுறிந் திசைபாட
அண்ணலவற் கருள்புரிந்த ஆக்கப்பா டருள்செய்தார்.

தொழுவார்க்கே யருளுவது சிவபெருமா னெனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாகுங் கருவிலங்கும் பறவையுமா யெய்தாமை
விழுவார்கள் அஞ்செழுத்துந் துதித்துய்ந்த படிவிரித்தார்.

வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதனெறி யறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
போதமிலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே யெனமொழிந்தா ரெங்கள்பிரான் சம்பந்தர்.

(சம்பந்தர் புராணம் எ௭, எ௮, எ௯)

இராவணன் சிவபெருமானை வழிபடுபவனாயிருந்துஞ் செருக்குமேலீட்டினால் அவர் பெருமையை மறந்து கயிலையை யெடுக்கப் புகுந்தனன். 'எண்ணமிலா வல்லரக்கன்' என்றமையாற் கடவுள் எழுந்தருளி யிருக்கும் மால் வரை கயிலை யென்பதைக் கருத்தினில் அமைவுற நினையாது பிற இடங்களைப்போல அதனையுங் கருதி அதனைத் தூக்க முயன்றன னென்பது பெறப்படும். தன் பாகன் அது கடவுள் மலை யென்று இடித்துரைத்தும், 'கேடு வரும் பின்னே மதி கெட்டுவரும் முன்னே' என்றபடி, அவனை முனிந்து மேற்சென்றமை அவனது அகந்தையை விளக்கும்.

*கடுகியதேர் செலாது கயிலாயமீது*
*கருதேலுன்வீர மொழிநீ*
*முடுகுவதன்று தன்மமென நின்று*
*பாகன்மொழி வானைநன்று முனியா*
*விடுவிடுவென்று சென்று விரைவுற்றரக்கன்*
*வரையுற் றெடுக்க முடிதோள்*
*நெடுநெடு விற்றுவீழ விரலுற்றபாதம்*
*நினைவுற்ற தென்றன் மனனே.*
(அப்பர் தேவாரம் தசபுராணம்-கக)

மக்கள் பலரும் அறியாமையினாற் கடவுள் நினைவு இல்லாது தவறிழைத்தல் இயல்பு. அங்ஙனம் தவறிழைத்தலால் அவர்கள் தண்டத்துக்குள்ளாவார்களெனினும், தாம் செய்த பிழைக்காகத் தம்மை நொந்து கடவுள்பால் அடைக்கலம் புகுவாரை அவர் தமது பெருங்கருணையினாற் குற்றம்பொறுத்து ஆட்கொள்வரென்பதை வலியுறுத்திய வாறாயிற்று. கடவுளுடைய தன்மைகளெல்லாவற்றிலும் மக்கள் முதற்கண் உணரவேண்டியது அவரது பேரருட் குணத்தினையே. கடவுள் உண்டென்ற கொள்கையுடையார் யாவரும் இவ்வுலகத்தைப் பார்த்தவுடனேயே அவரது பேராற்றலை யுணர்வார். அவர் பேராற்றன் மாத்திரமுடையவராயிருப்பின், குறைவுமிக்குடைய மக்கள் அவரை எளிதில் அடையமுடியாது. அவர்களுடைய சிறுமையுங் குற்ற

மும் இறைவனுக்கு ஒவ்வாமையால் அவரது திருவுள்ளத்திற்கு உடன்பாக நடந்து உய்தி கூடுதல் முடியாது என்ற கருத்தானது மக்கள் மனத்தில் நிலைபெறுமாயின் அவர்கள் கடவுள் வழிபாட்டினைச் செய்தற்கண் ஊக்கமில்லாதொழிவர். அம்மட்டோ, அவர்கள் கடவுள்வழிபாட்டினைக் கைவிடுதலுங் கூடும். கடவுள் பேரருளாளர் என்றறிந்தவிடத்தேதான் அவரை அடைந்து பேரின்ப மெய்தலாமென்ற நம்பிக்கை பிறக்கும். ஆதலால் கடவுள் வழிபாட்டின் இன்றியமையாமையையும பயனையும் அறிவுறுத்துந் திருக்குறிப்பினோடு அவரது பேரருட்டிறத்தினை இலங்கை மன்னன் செய்தி வாயிலாக நம் பரமாசிரியர் விளக்கியருளினார்.

இனி, செல்வம் வந்துற்ற காலைத் தெய்வமுஞ் சிறிது பேணாரென்றபடி அதிகாரத்தாலும் செல்வத்தாலும் உயிருக்கு வாழ்வெனும் மயல் மிகுந்த காலை கடவுள் நினைவு மாறுதல் கூடும். தம்மையே பெரியவராகக் கருதும் மயக்கமுடையார்க்குக் கடவுள் நினைவு ஒழிந்துபோத லியல்பே. அத்தகையார் தம்முட் கலாம் விளைத்தலும் இயல்பே. ஒவ்வொருவருந் தம்மையே பெரிதாகக் கருதுமிடத்துப் பிறரை இகழ்வர். இகழ்ச்சியாற் பகைமை விளையும். ஓருயிர்க்கும் மற்றோருயிர்க்கும் பகைமை விளைப்பது ஆணவமலத்தின் செயலாகும். தம்வயம் இல்லாத சிற்றுயிர்கள் ஒருவர்க்கொருவர் பகைமை விளைத்துத் தமக்கு இழிவையும் இறுதியையுந் தேடிக்கொள்வர். கடவுளுணர்ச்சி யின்மையால் உயிர்கட்குப் பகைமையும் துன்பமுமே விளையும் என்பதற்கு அடிமுடி தேடிய கதை பயன்படுதலாயிற்று.

கடவுளின் பேரருட்டன்மையை விளக்கியதுபோல உயிர்களின் ஆணவமறைப்பினையும் அதன் கேட்டினையும் விளக்கி அம்மலமும் அக்கேடும் ஒழிவதற்கும் பேரின்பப் பெருவாழ்வு பெறுதற்கும் கடவுள வழிபாடு இன்றியமையாததென்பதை ஒன்பதாம் பாட்டினுள் தெரிவித்தவாறாயிற்று. பதியின் சிறப்பியல்பும் பாசவியல்பும் உணர்த்தப்பட்டன.

பத்தாம் பாட்டினுள் சமணர் சாக்கியரது கொள்கை தவறுடைத் தென்பதை விளக்குமுகத்தான் பாசப் பிணிப்புடைய உயிர்கள் கடவுளது திருவருளின்றித் தாமே எவ்வாற்றானும் உய்தி கூடுதலில்லை யென்பதை வற்புறுத்தியவாறாயிற்று. இதனுள் தலைவனை இன்றியமையாத உயிரின் றன்மை விளக்கப்பட்டது. சமணர் கடவுளை வழிபடாது ஐம்பொறியடக்கத்தாலே உயிர் நற்கதி யடைதல் கூடுமென்று போதிப்பவர். சார்ந்ததன் வண்ணமாந் தன்மையையுடைய உயிர்கள் தமக்குப் பற்றுக்கோடாக முதல்வனைப் பற்றிக்கொள்ளாது தாமே தனித்து நிற்க முயன்றால், அஃது உயிரின் றன்மைக்கு ஒத்ததன் றாகலான் அவை முன்னர்ச் சார்ந்திருந்த பாசத்தில் விழுதலன்றித் தனித்து நிற்கும் ஆற்றலுடையன அல்ல. சமணர் முதலியோர் தங் கொள்கைப்படி நன்னெறி கடைப்பிடித் தொழுகாது தமது சமயத்தை எவ்வாற்றானும் நாட்டவேண்டுமென்று புகுந்து சைவசமயத்தார்க்குத் தீங்கிழைத்துப் பழியும் பாவமுந் தேடிக்கொண்டனர். இதனால் கடவுள் ஒருவர்க்கு அஞ்சாது சுயநலங் கருதிச் செல்வோர் பழி பாவங்கட் குள்ளாதல் கூடுமென்பது தெளியப்படும். ஆதல் பற்றி,

> தம்மிலே நலங்கொள்ளும், போதமிலாச் சமண்கையர்
> புத்தர்வழி பழியாக்கு மேதமே. (சு. புராணம்-எக)

என்றனர்.

இம் மூன்று பாட்டிலும் முப்பொருளின் உண்மையுந் தன்மையுங் கடவுள் வழிபாடாகிய சாதனமும் இனிது உணர்த்தப்பட்டன. இறுதிப் பாட்டாகிய திருக்கடைக் காப்பிலே கடவுள் வழிபாட்டின் பயனைத் தம் அனுபவத்தின் வைத்து ஆசிரியர் செவ்விதினுரைத்தார். இதனால் ஒவ்வொரு பதிகத்தின் இறுதி நான்கு பாட்டினுள்ளும், சிவஞான போதத்துட் பெறப்படும் பிரமாணவியல், இலக்கணவியல், சாதனவியல், பயனியல் என்ற நான்கியற் பொருள்களும் போந்தன காண்க. ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப் பாட்டின்கண் சம்பந்தப் பெருமான் தமது திருப்

பெயரை நிறுவியருளினமைக்குக் காரணம் என்னையோ வெனின், ஒரு திருப்பதிகத்தையேனும் கற்பார்க்குந் தமது சிவானுபவப் பயனை நன்கு அறிவுறுத்தக் கருதிய பெருங் கருணையேயா மென்க. அங்ஙனஞ் செய்தது தம் புகழ் விளக்கவன்று. இறைவர் புகழை ஞாலமுழுவதும் விளக்கக் கருதியே யென்க. இதனைத் தற்புகழ்ச்சியாகக் கூறுவோர் தமது அறியாமையைப் புலப்படுத்தியவராவர். 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற திருவுள்ளக் குறிப்போடு நம் பரமாசிரியர் ஊர்தோறுஞ் சென்று திருப்பதிகமருளிச் செய்தமையால் ஒவ்வொரு திருப்பதி கத்தையே கற்றவர்க்கும் உண்மை விளங்குதற் பொருட்டு ஒவ்வோர் பதிகத்துஞ் சித்தாந்தப் பொருளையுந் தமது அனுபவப்பயனையும் அறிவுறுத்தினு ரென்க.

உலகத்தில் மிக்க நல்ல நிகழ்ச்சிகள் நிறைவேறுங் காலத்தில் விண்ணவர் பூமாரி பொழிவாரென்ற ஐதிகம் நமது நாட்டில் வழங்கி வருகின்றது. அதனுண்மை யோகக்காட்சி முதலியவற்றால் அதனைக் காணவல்லார்க்கே இனிது விளங்கும். ஈண்டு நடக்கும் நற்செய்திகள் வான வர்க்கும் மகிழ்ச்சி விளைப்பனவென்பதே கருத்தாகக் கொள்க.

நம் நாயனார் தாம் திருவருள் பெற்றதைத் தந்தை யார்க்கு அறிவுறுத்துவான் எடுத்த இன்னிசைச் செந் தமிழ்த்தொண்டே தாம் பரமுத்தியெய்தும்வரை உயிர்கள் பொருட்டுக் கைக்கொள்வாராயினர். ஆதலால்,

இன்னிசை யேழு மிசைந்த செந்தமிழ்சற்கே
சொன்முறை பாடு தொழும்பருள் பெற்ற
(சம்பந்தர் புராணம் - அ௯

என்றனர் ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள்.

சீர்காழிப் பதியிலுள்ளார் தாங்கள் அறிந்த அளவில் நாயனாரது பெருமையைப் பன்மொழிகளாற் பாராட்டினர். வீடுபெறக் கருதும் எவ்வுலகத்தாரும் தாங்கள் செய்த தவப்பயனைக் கருதக்கூடிய பெரியோரைச் சீர்காழியார்

தங்கள் உரிமைதோன்றக் 'காழியர் தவமே' யென்றார். கவுணியர் மரபிற்குப் பெறற்கரிய செல்வமாக வாய்த்தமை யால் 'கவுணியர்தனமே' யென்றும், பிள்ளையாரது மெய்ஞ் ஞானத்தின் அளவினை அறியாராயினும் புலமை நிரம்பிய அவர் திருப்பாட்டினைத் தங் காதாற் கேட்டனராகலின் 'கலைஞானத்து ஆழிய கடலே' யென்றுங், கற்றதின் பயனா கிய கடவுள் வழிபாட்டினாற் பிறவி யறுக்கப்பெற்றமை யின் அதனிடை 'அமுதே'யென்றுந் துதித்தனர். அவரது திருப்பாடலை ஏழிசையோடு கேட்டமையால் அஃது உமை யம்மையாரின் திருவருட் பயனென்று குறிப்பார், 'ஏழிசை மொழியாள் தன் திருவருள் பெற்றனை' என்றனர். மறை யவர் வைதிக நெறியினராதலாலே, 'மறைவளர் திருவே' 'வைதிக நிலையே' யென்னுஞ் சொற்றொடர்கள் எழுந்தன. நீரினை முகில் பெய்வதுபோல ஞானத்தைப் பொழிகின்ற பாடலைப் பிள்ளையார் வழங்குதலின் 'வளர்ஞானப் பொறை யணி முகிலே' யென்றனர். சமயப் பாதுகாப்பிற்குப் புக லிடமாதலால் 'புகலியர் புகலே' யென்றனர். தோணிபுர வாசிகள் காவிரி வளத்தைத் துய்க்கு மக்களாதலின், 'பொன்னித்துறைப் பெருமணியே' யென்றனர். பல பொருள்படும் வேதத்தின் சிறந்த பகுதி இஃதெனக் காட் டலின், 'சுருதியினொளியே' யென்றனர். யாதொரு பாவ முஞ் செய்வதற்கு ஏதுவில்லாத குழந்தைப் பருவத்தி லேயே திருவருள் பெற்றமையானும், புனிதமிக்க இளஞ் செஞ்ஞாயிறாய் விளங்குதலானும், தண்டமிழ்ப் பதிகங் களை மேன்மேலோதும் பண்பினராதலானும், இன்னிசைப் போக்கு முழுவதும் இனிதமைந்த பாடற்றொண்டு புரித லானும் முறையே 'புண்ணிய முதலே' யென்றும், 'அரை ஞாணொடு போதுங் கண்ணிறை கதிரே' யென்றும், 'கலை வளர் மதியே' யென்றும், 'பண்ணியல் கதியே' யென்றுங் கூறி மூவாண்டிலே யாவரும் எண்ணி யெண்ணிப் பெறுதற் கரிய பரம்பொருளது திருவருள் பெற்றமையைப் பாராட் டிப் புகழ்ந்து போற்றுவாராயினர்.

---

## ௯. பொற்றாளம் முத்துச்சிவிகை பெறுதல்

திருஞானசம்பந்தப் பெருமான் திருக்கோயிலினின்று தமது திருமனைக்கு ஏகுங்காலை அந்தணர் பலரும் பிறரும் சம்பந்தப் பெருமானை வாழ்த்தித் தமது சென்னிமீது அவருடைய திருவடிகளைச் சூட்டி வரிசை வரிசையாக வந்தபோது, சிவபாதவிருதயர் தம் தவப்புதல்வரைத் தமது தோளின்மேல் ஏற்றிக்கொண்டு மகிழ்ச்சியுடன் சென்றனர். அந்தணர் குழாமும் திருத்தொண்டர் குழாமும் நெருங்கிச்சென்று தங்களுடைய மேலாடைகளை வானில் எறிந்து ஆரவாரஞ் செய்தனர். அவரனைவருஞ் சென்ற அழகிய வீதியானது சிவானந்தப் பேராறுசெல்ல அதன்மீது குமிழிகள் எழுந்து விளங்குவதுபோன்ற காட்சியைப் பெற்றிருந்தது. அவ்வூரிலுள்ள அந்தணர் பெண்மணிகள் தம் மாளிகைகளின் மேன்மாடங்களிலே நெருங்கி மங்கலமொழிகள் கூறி, நறுமலரும் வெண்பொரியும் செஞ்சாந்துந் தூவி நின்றனர். அவர்கள் பெரிய குன்றங்களின்மீது மின்னற் குழாங்கள் புடைபெயர்வது போல விளங்கினார்கள். மங்கலவாத்தியங்கள் ஒலிப்பதும் இன்னிசைக் கடவுட்பாடல் பாடுவதும், வீடுகளின் திண்ணைகளிலே மணிவிளக்கு அமைத்தலும், பூரணகும்பம் வைத்தலும் நடைபெற்றன. திருவீதி வலம்வந்து ஞானசம்பந்தப் பெருமான் சங்க முதலிய நல்லிசைக் கருவிகள் முழங்கத் திருமாளிகைக்கண் புகுந்தனர்.

திருத்தோணிபுரநாதரை அன்றிரவு இடைவிடாது நினைத்திருந்து மிகுந்த அன்போடு மறுநாட் காலையிலே கதிரவன் எழுந்ததும் திருக்கோயிற்குச்சென்று சிவபெருமானையும் உமாதேவியாரையும் வணங்கிப்பாடித் திருவருள்பெற்றுத் திருக்கோலக்காவை வணங்கும் விருப்போடு சென்றார். காவிரிநீர் தேன்பொழி மலரினையும் முத்தினையுங்கொண்டு வந்திடுவதாய், வண்டுகள் ரீங்காரஞ் செய்யப் பெண்டிர் திளைத்தாடுவதாயுள்ள நன்னீர்க்குளம் சிறந்துவிளங்கும் திருக்கோலக்காவினை யடைந்து, திருக்கோயிலை வலஞ்செய்து, வேதங்களால் அறிதற்கரிய இறை

வரது திருவடியையேத்தித் துதிசெய்வான் 'மடையில் வாளை' என்று தொடங்குந் திருப்பதிகத்தைக் கையினாற் றாளமிட்டு நம்முடைய நாயனார் பாடும்போது, திருவைந் தெழுத்தெழுதிய செம்பொற் றாளங்கள் முதல்வரது திருவருளால் எடுத்த பாடலுக்கிசைந்த வளவில் ஒற்றும்படியாக அவரது கைத்தலத்தில் வந்திருந்தன. அவற்றைக் கண்டு திருவருளை வியந்து அவற்றைச் சென்னியில் வைத்தருளிப் பின்னர் எடுத்து ஏழிசையுடன் பதிகத்தை முடித்துத் திருக்கடைக் காப்புச் சாத்தினர். வானவருள் இசை வல்லாராகிய நாரதர் முதலியோர் மலர்மழை பொழிந் தார்கள். பின்னர் நம் பரமாசிரியர் திருவருளைப்போற்றிச் சண்பைநகர்க்கு மீளுவாராயினர். அவர் நடந்துசெல்வ தைப் பொறுக்காத அவரின் தந்தையார் அவரைத் தோளில் ஏற்றிக்கொண்டனர். பின்னர் திருத்தோணி புரத்திலுள்ள திருக்கோயிற்குச் சென்று ஒரு கட்டளை யுடைய எட்டுத் திருப்பதிகத்துள் ஒன்றாகிய 'பூவார் கொன்றை' யென்று தொடங்கும் பதிகத்தைப் பாடி முடித்து வெளிப்போந்து அவ்வூரார்க்குத் தமது இனிய திருக்கோலக்காட்சியினை நல்கித் தமது மாளிகையிற் றங்கியிருந்தனர்.

நம் நாயனாரின் தாயாரது பிறப்பிடமாகிய திருநனி பள்ளியிலுள்ள உயர்ந்த மறையோரெல்லாரும் அவர் அருள்பெற்ற செய்தி கேட்டுப் பெருமகிழ்ச்சியுடன் மங்கள வாத்தியங்களையும் மந்திரங்களையும் முழக்கிக் கொண்டு சீர்காழிக்கு வந்து கவுணியர் தலைவருடைய திருவடிகளைத் தொழுதனர். அவ்வாறே சுவாமிகள் சிவ ஞானம் பெற்றதை யறிந்த பக்கத்து நாடுகளிலுள்ள வேதியரும் பிறரும் தொண்டர்களும் பெருவியப்போடு கூட்டங் கூட்டமாகச் சீர்காழிக்கு வந்து புகலியர்கோன் திருவடிகளைப் பணிவாராயினர். அவ்வூரிலுள்ளோர் அய லூர்களிலிருந்து வருகின்ற யாவர்க்கும் உணவு முதலிய வனைத்தும் விருப்புடன் அளித்தனர். ஆயகாலை அவ்வூ ரானது சிவலோகம்போல் விளங்கி எங்கும புகழ்பெற்றது.

திருநனிபள்ளியூரார் தம்மூருக்கு அடிகள் எழுந்தருள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளவும் அவர் அதற் கிசைந் தருளித் தோணிபுரத்துப் பெம்மானிடம் விடைபெற்றுக் கொண்டு ஏனைப் பதிகளையுந் தொழுவதற்குப் புறப்பட்டார். முன்போல அவர் தந் தந்தையார் அவரைத் தமது தோளின் மேல் வைத்துச் சென்றனர். சிவபெருமானது திருவடி தனது சென்னிமேற்கொண்ட கருத்துடன் ஞான வள்ள லார் போந்தகாலைத் திருநனிபள்ளிக் கருகிற் சென்றவுடன் வானளாவிய மலர்ச்சோலை தோன்றுவது கண்டு அஃது எப்பதி யென்று வினவத் தாதையார் திருநனிபள்ளி யென்று கூறக்கேட்டு நற்றமிழ்ப்பதிகம் பாடத் தொடங்கிக் 'காரைகள் கூகை' என்னும் பதிகத்தைப்பாடி முடித்து அதன் திருக்கடைக் காப்பினில் உமையொருபாகர் வீற்றி ருக்குந் திருநனி பள்ளியை நினைப்பாரது வினை கெடுமென்ப தற்குத் தமதாணை யென்னும் உறுதிமொழி வைத்தார்.

பின்னர், திருநனிபள்ளிப் பெருமானாரது திருக் கோயிலை அணைந்து மிகுந்த அன்போடு பெருமானைப் பணிந்து அவரது திருவருள் பெற்று மறையவர்கள் பல ருடைய விருப்பத்திற்கிணங்கி அங்கமர்ந்தனர். அங்கிருக் கும்போது திருத்தலைதைப் பதியிலுள்ள அந்தணர்களெல் லோருந் தவமிக்க தொண்டர் பலரோடும் வந்து அடிகளை வணங்கினர். தம்மூரை வாழை, கமுகு முதலியவற்றாலும் தோரணங்களாலும் நிறைகுடங்களாலும் மாலைகளாலும் அணிபெறச்செய்து தமது திருப்பதிக்கு அவரை அழைத் துச் சென்றனர். அங்கே திருக்கோயிலிற் சென்று வேத முதல்வரைப் பாடி வணங்கினர்.

பின்னர்த் திருவலம்புரமடைந்து, 'கொடியுடை' யென்று தொடங்கும் திருப்பதிகம்பாடித் திருச்சாய்க்காடு தொழுதற்குப் புறப்பட்டு இடைவழியிலே திருப்பல்லவனீச் சுரத்தைத் தொழுது பாடினர். திருச்சாய்க்காட்டிலுள்ள தொண்டரெல்லாராலும் எதிர்கொள்ளப்பெற்றுத் திருக் கோயில் புகுந்து இறைவரைப் பணிந்து, 'மண் புகார்' என்னுந் திருப்பதிகம் அருளிச் செய்தனர். பின்னர்த்

திருவெண்காட்டு நன்மக்களால் அழைக்கப்பெற்று அவ்வூர்க்குச் சென்று, திருக்கோயிலையடைந்து சிவபெருமானைத் தாழ்ந்திறைஞ்சிக் 'கண்காட்டு நுதலானும்' என்னும் பதிகத்தில் அவ்வூர் முக்குளத்தையும் பாடியருளினர். அப்பால் திருமுல்லைவாயிலை வணங்கிச் சீர்காழிக்கு மீண்டனர். அங்கே சிவபெருமானுக்குப் பாடற்றொண்டு செய்திருந்தகாலை, மயேந்திரப்பள்ளி, குருகாவூர் முதலிய திருப்பதிகட்குஞ் சென்று மாதொரு பாகர்க்குத் தமிழ்மாலை சாத்தினர்.

மீண்டு, நம் நாயனார் கழுமலமடைந்து தங்கியபோது, திருநீலகண்டயாழ்ப் பாணனாரும் மதங்கசூளாமணியாரும் ஒரு மனத்தவராய்ப் பிள்ளையாருடைய திருவடிகளில் வணங்கச், சண்பை நகர்க்கு வந்தனர். பாணனாரைப் பிள்ளையார் எதிர்கொள்ள அவர் அவருடைய திருவடித் தாமரைகளை மிக அன்புடன் தொழுது துதித்து மகிழ்ந்தனர். சம்பந்தப் பெருமான் பாணரைத் திருக்கோயில் வாயிலுக்கு அழைத்துச் சென்று சிவபெருமானை இன்னிசையாற் பாடும்படி அவரைப் பணித்தனர். அதற்கு மகிழ்ந்து தமது யாழினைப் பாடினியாருடன் இன்னிசை மிக மீட்டினர். அதனைக் கண்டு பிள்ளையார் மகிழ்ந்தனர். அந்தணர் யாவரும் வியந்தனர். பாணரும் அவர்தம் மனைவியாரும் ஒருமித்துப் பாடிய இசையினைக் கேட்டுக் கந்தருவரும் விஞ்சையரும் வானில் நின்று புகழ்ந்தனர்.

பிள்ளையார் அவர்களை அழைத்துக்கொண்டு சென்று தங்குமிடங்கொடுத்து விருந்து செய்தனர். பிள்ளையாருடைய திருப்பதிகங்களைக் கேட்டு மகிழ்ந்து அப் பதிக இசையினைத் தமது யாழிலிட்டு இசைத்து எல்லோரையும் பாணர் மகிழ்வித்தார். நாயனாரது திருப்பதிக இசையினை யாழிலிட்டு இசைத்து அவரோடு பிரியாதிருக்கப்பெறும் பேற்றினை அவர்பால்வேண்ட அவர் அதற்கு இசைந்தருளினர். பாணரும் பெறலருந் திருவருட்பேறெனக் கருதி அந்த நாள்போலவே எப்போதும் பிள்ளையாரை விட்டு நீங்காமல் நட்புடன் அவண் வைகினர்.

பின்னர்ப் பிள்ளையார் தில்லை நடம்பயில்வாரைப் பணியவெழுந்த தங் காதலைத் தந்தையாருக்குத் தெரிவிக்க அவரும் உடன்செல்ல இசைந்தனர். திருத்தோணிநாதரிடம் விடைபெற்றுக்கொண்டு புகலிவேந்தர் தந்தையாரோடும் அடியாரோடும் தில்லைக்குப் புறப்பட்டனர். இடையிலுள்ள பதிகளை வணங்கி வயல்களையுங் குளங்களையுங் கடந்துசென்று அவர் கொள்ளிடக்கரையை யடைந்தனர். செழுமலர்மாலைகளுஞ் சந்தனமும், பவளம் சங்கு முத்து முதலியவைகளும் உந்தியெறிந்து செல்லுங் கொள்ளிடமானது நாயனாருடைய திருவடிகளை வணங்கி எதிர்கொள்ள அதனைக் கடந்துசென்று தேவர் முதலிய யாவர்க்கும் வேண்டியனவெல்லாம் ஈயுந் தில்லையின் எல்லையை யடைந்தனர்.

உலகத்திற்கெல்லாம் நன்மையைத்தர வந்த இளங்களிறனைய பிள்ளையார் செல்லும் வழியின் இரண்டு பக்கங்களிலும் பறவைகள் தம் ஒலிகளால் வாழ்த்தியம்பத், தேனிறைந்த செவ்விய தாமரை அரும்புகளாகிய கைகளைக் குவித்துப் பொய்கைகளெல்லாம் மகிழ்ச்சிமிக்க தங்கள் முகத்தைக் காட்டின. அழகிய தோகைகளையுடைய மயிற் கூட்டங்கள் மிகுந்து நடமாடக் குளிர்ந்த நறுமணமுடைய காற்றானது வீசியெதிர்கொள்ள வண்டுகள் ஒலிப்பச் செவ்விய தளிர்கள் கதிரவனது ஒளிப்பட்டு இலக, இலைகள் இருமருங்கும் அசைய, பூக்கள் விரிந்து முகம்போல விளங்க, மெல்லிய கொம்புகளோடு பூஞ்சோலைகள் அசைந்தன. பெரிய வயல்களிலுள்ள நெற்கதிர்களெல்லாம் தென்றற்காற்று வாயிலாக நறுமணம் பொருந்திய மலரையுந் துகளையுந் தூவி அழகிய முகங்காட்டி வணங்கின. கமுகு மரங்கள் குளிர்ந்தகாற்று வீசி மகிழ்ந்தாடுவது போல் அசைந்தன. தில்லைவாழந்தணர் செய்யுஞ் சிவவேள்வியின் செழும்புகை சென்று வானத்தில் நீல ஆடையினால் ‘விதானம்’ அமைத்ததுபோலப் பரந்தது. கரும்பு செந்நெல் முதலியவைகள் செழித்தோங்கிய வயல்களை யெல்லாங் கடந்து போய், தளிர், அரும்பு,

மலர், கனி, கிழங்கு முதலியவைகள் சிறந்து விளங்கிய நந்தனவனங்களையுங் கடந்துசென்று, மாடமாளிகைகள் பொலிந்துவிளங்குந் தில்லைமூதூரின் தெற்குவாயிலுக்கு அருகே சண்பைமன்னர் நெருங்கினர். தில்லைவா ழந்தணர்களெல்லாரும் பிள்ளையார் வரவைக்கேட்டுக் களிகூர்ந்து தங்கள் ஊரினை அலங்கரித்து அவரை எதிர்கொள்ளச் சென்றார்கள். மறையொலியும் மங்கலவாத்திய முழக்கமும் வானில் நிறையவும், நிறைகுடமும் விளக்குந் திசையெங்கும் விளங்கவும், வாயிலின்புறத்தே சென்று திருஞானசம்பந்தரைக் கண்டு வாழ்த்துக்கூறி யழைத்தனர். ஞான வள்ளலாரும் தில்லைப்பதியின்கண் மறையவர் மாடங்கள் விளங்கி அன்பர்களது உள்ளம்போலச் சிவமணங் கமழ்ந்த திருவீதியைக் கண்டு களித்து எழுநிலைக் கோபுரத்தைத் தாழ்ந்திறைஞ்சித் திருக்கோயிலினுட் சென்று பொன்னம்பலத்தைத் தொழுது திருக்கைகளைச் சென்னிமேல் வைத்துக்கொண்டு கண்கள் களிகொள்ள உருக்கத்தோடு அம்பலத்தின் திருவாயிலுட் புகுந்தனர். சிவபெருமான் தனக்கு நல்கிய மெய்ஞ்ஞானத்தின் வடிவே அம்பலமாகவும் அந்த ஞானத்தின் பயனாகு உள்ளத்துநிறைந்த பேரின்ப வடிவமே திருநடமாகவுந் தமது புறக்கண்ணிற்குப் புலனாயது கண்டு கும்பிட்டெழுந்து இறைவரது திருநடனத்தைக் காழியர்கோன் போற்றுவாராயினர். தத்துவங்களைக் கடந்து உயிரறிவின்கண்ணே திருவருளால் எய்தப்படும் சிவபோகத்தினை எக்காலத்திலும் நுகருமாறு உடம்பிலுள்ள ஐம்பொறிகட்கும் அது புலனாகும்வண்ணம் திருவருள் செய்தனையென்று கூத்தப்பெருமானைப் புகழ்ந்துபாடிக் கண்ணீர் பொழிந்து ஆனந்தக் கூத்தாடினர். சிவபெருமானுக்குரிய பணிவிடைசெய்யுஞ் சிறப்புப் பற்றித் தில்லைவாழந்தணரைப் பதிகத்துள் முன்வைத்துக் 'கற்றாங் கெரியோம்பி' என்னுந் திருப்பதிகம்பாடி ஊனையும் உயிரையும் உருக்கும் இறைவரது திருக்கூத்தினை வெட்டவெளியே கண்டு பேரானந்த முற்றனர். பின்னர்ச் செம்பொற்கோயிலை வலம்வந்து புறம்போந்து கோயிற் றிருமுற்றத்தில் தாழ்ந்தெழுந்து நான்கு வீதிகளையுங்

தொழுதுசென்று தில்லையில் தங்குவதற்கு அச்சங்கொண்டு சண்பைமன்னர் திருவேட்களஞ் சென்று திருப்பதிகம் பாடி அங்குத் தங்கினர். அங்கிருந்து நாடோறுந் தில்லைக்குச்சென்று கூத்தப்பெருமான் குரைகழல் வணங்கி மீளும் போது ஒருநாள் திருக்கழிப்பாலைக்குச் சென்று அப்பதியி லிருக்குஞ் சிவபெருமானை அருந்தமிழாற் பாடினர். அவ ருடைய திருப்பதிக விசையைத் திருநீலகண்டப்பாணரும் தமது யாழிலிட்டு மிழற்றினர். ஒருநாள் திருவேட்கள மிருந்து தில்லை செல்லும்போது புகலிகாவலர் திரு நீறணிந்த தில்லை மூவாயிரவர்கள் சிவகணநாதராய்த் தோன்றுவதைக் கண்டு பெரும்பாணர்க்கு அக் காட்சி யைக் காண்பித்தனர். தில்லையிற் சென்றவுடன் தில்லைவா ழந்தணர்கள் சண்பைமன்னரை வணங்கி யெதிர்கொள்ள, அவர், தமது திருமுடிமேல்வைத்த செங்கையோடு திருக் கோயிலுட் புகுந்து பேரம்பலத்தை வணங்கி நட்டமாடும் பெருமான் எதிர்சென்று திருக்களிற்றுப்படிக்கீழ்த் தாழ்ந் திறைஞ்சினர். 'ஆடினாய் நறு' என்னும் திருப்பதிகம் பாடி அத் திருப்பதிகத்திலே தில்லை மறையவரைத் தாங் கண்ட நிலையில் எடுத்துக்கூறி,

நீலத்தார் கரியமிடற்றார் நல்ல நெற்றிமே லுறைகண்ணினார் பற்று
சூலத்தார் சுடலைப்பொடி நீறணிவார் சடையார்
சீலத்தார் தொழுதேத்து சிற்றம்பலஞ் சேர்தலாற் கழற்சேவடிகை
கோலத்தா யருளாயுன காரணங் கூறுதுமே. [தொழக்

அத்தகையார் தொழுதேத்துஞ் சிற்றம்பலமென்று புகழ்ந் தனர். திருப்பதிகத் திருக்கடைக் காப்பியற்றியபின்னர், இறைவரிடம் விடைபெற்றுக்கொண்டு பொன்னம்பலத்தை வலம்வந்து புறம் போந்தனர். திருநீலகண்ட யாழ்ப்பாணர் கேட்டுக்கொண்டபடி அவருடைய பதியாகிய எருக்கத்தம் புலியூரையும், 'நிவா நதி'யின் கரையிலுள்ள பிறபதிகளையுந் தொழுவான் புறப்பட்டனர். திருவெருக்கத்தம்புலியூரை யடைந்து பாணர் அவதரித்த அவ்வூர் பெருந்தவஞ் செய்த தென்று சிறப்பித்து ஆண்டு வீற்றிருக்குஞ் சிவபெருமா னைப் பணிந்து பாடினர்.

பின்னர் நம் பரமாசிரியர் அங்குநின்றும் எழுந்தருளிப் பலபதிகளை வணங்கிச்சென்று திருமுதுகுன்றத்தினையணைந்தார். 'திருமுதுகுன்ற மடைவோமே' என்ற முடிபுடைய திருப்பதிகம் பாடித் திருமுதுகுன்றினை வலம் வந்து திருவிருக்குக் குறள் பாடியபின் திருக்கோயிலுட் சென்று தாழ்ந்தெழுந்து 'முரசதிர்ந்தெழும்' என்னும் அருட்பாமாலை சாத்தினர். அப்பால் திருப்பெண்ணாகடம் அடைந்து அவண் திருத்தூங்கானை மாடத்துள் அமர்ந்த பரஞ்சோதியாரை வணங்கித் தமிழ்மாலை பாடி அதனுள் 'தீங்கு நீங்குவீர் தொழுமின்கள்' என்னும் அறிவு மொழியை யமைத்தனர்.

நம் நாயனர் பின்னர்த் திருவரத்துறைக்கு எழுந்தருளினர். அவ்விடத்திற்குச் செல்லுங்காலைத் தந்தையாரது தோள்மேலிருப்பதைத் தவிர்ந்து பக்கத்திலே அந்தணர் புடைசூழ விரைந்துசெல்வதைப் பார்த்துத் தந்தையாரும் வருந்தினர். பிள்ளையாரது பாததாமரைகளுஞ் சிறிது நொநதன. மாறன்பாடி யென்னுந் திருப்பதியை வந்தடையுங் காலத்தே கூடவருகின்ற அடியார்கள் வழி நடந்த வருத்தத்தால் சிறிது இளைத்தனர். பிள்ளையார் திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டு அவண் எய்தினர். திருஞானசம்பந்தப் பெருமானுடன் வந்ததால் அடியார்க்கு நேர்ந்த இளைப்பினைப் பார்த்து அஞ்சிக் கதிரவன் தன் ஆயிரங் கதிர்களையும் மறைதது மேலைக்கடலுள் வீழ்ந்தான். அன்றிரவு அடியாரோடு அப்பதியில் சிவபெருமான் திருவடிகளைத் தொழுது தங்கினர். திருவரத்துறை யிறைவர் பிள்ளையாரது வழிவருத்தத்தை நீக்குவதற்குத் திருவுளங்கொண்டு அப் பதியிலுள்ள அந்தணர் யாவர்க்குங் கனவிற்றோன்றி, 'ஞானசம்பந்தன் நம்பால் வருகின்றான்; அவனுக்கு ஏறுவதற்குச் சிறந்த முத்தினற்செய்த சிவிகையையும் மணிக் குடையையும் ஊதுவதற்குப் பொற்சின்னங்களையும நம்மிடமிருந்து எடுத்துக்கொண்டுபோய்க் கொடுங்கள்' என்று கட்டளையிட்டார். அப்போது மறையவர் யாவரும் அரத்துறைத் திருக்கோயிலில் வந்துகூடித்

தமக்கும் ஆண்டிருந்த அடியார்கட்கும் நேர்ந்த கனவினைப் பற்றிப் பேசிப் பெருவியப்பெய்தித் திருப்பள்ளியெழுச்சிக் காலத்திலே திருக்காப்பு நீக்கியவுடன், நல்முத்தினாற் செய்த சிவிகை, சிறந்த வெண்குடை, உயர்ந்த சின்னங்க ளெல்லாம் அங்கிருப்பக் கண்டு திருவருளை எத்திசைக்கும் விளக்கும் அறிகுறிகள் இவையாமெனக் கருதி மகிழ்ந்து முழக்கஞ் செய்தனர். அவைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு மங்கல வாத்தியங்களுடன் சண்பைமன்னரை எதிர்கொள்ளச் சென்றார்கள். அதற்குமுன்னமே சண்பை மன்னருக்குக் கடவுள் தோன்றி அவற்றை ஏற்றுக்கொள் ளும்படி ஆணை தந்தார். அப் பேரருட்டிறத்தினைப் பிள்ளை யார் தம் தந்தையார்க்கும் ஏனைத் தொண்டர்களுக்கும் அறிவித்தனர். பின்னர்ப் பொழுது புலர்ந்தது. பிள்ளையார் காலைக்கடனை முடித்துத் திருநீறணிந்து தம்முடைய செங்கை மலர்களைக்குவித்து வணங்கித் திருவைந் தெழுத்தை யோதிப் புறப்பட்டனர். ஞான வேந்தரை முத்தின்சிவிகையில் ஏற்றும் விருப்போடும் வந்தவன் போலக் கதிரவன் உதயஞ்செய்தனன். அச்சமயத்தில் அர, அரவென்னும் முழக்கத்துடன் திருவரத்துறை யந்த ணர்கள் சிவிகையையுங் குடையையுஞ் சின்னங்களையுங் கொண்டுவந்து இவை அரத்துறை முதல்வரது பேரருளால் வந்தன. இவற்றை ஏற்றுக் கொள்ளுவீராகவென்று வேண் டினர். காழிப்பெருமான் திருவருளை மிகவும்வியந்து, ‘எந்தை யீசன்’ என்னுந் திருப்பதிகம்பாடிச் சிவிகையினை வலம்வந்து திரு வெண்ணீறணிந்து திரு வைந்தெழுத் தோதித் திருவருட் கட்டளைப்படி உலகெலாம் உய்யும் வண்ணம் சிவிகையில் ஏறியருளினார். அப்போது தொண் டர்கள் ஆரவாரஞ்செய்தனர். வானினின்றும் மலர்மழை பொழிந்தது. முகில்களும் மத்தளங்களும் முழங்கின. எங்கும் ஆரவாரமிக வெண்சங்கமும் மணிகளும் வீசியெறி யும் அலைநிறைந்த திருப்பாற்கடற்கண் வளர்பிறைத் திங் கள் தோன்றியதுபோல வெண்கதிர்களை வரிசை வரிசை யாக வீசுகின்ற முத்துச்சிவிகையின்மீது திருநீற்றொளி விளங்கும் புகலிமன்னர் எழுந்தருளினர். தொண்டர்

களும் மறையவரும் பிறரும் பேரானந்தக்கடலில் திளைத் தாடி ஆனந்தக்கண்ணீர் பொழிந்தனர். திருச்சின்னமாகிய எக்காளமும் ஞானசம்பந்தர் வந்தாரெனவும், பாலறுவாயர் வந்தாரெனவும், முத்தமிழ் விரகர் வந்தாரெனவும் ஊதின. உண்மைஞானம் விளங்கவும், உலகத்தாரது மனத்திருள் நீங்கவுந் திருமறை யருளிச்செய்யும் பிள்ளையார் பொருளும் போகமும் ஞானமும் வேண்டுவார்க்கு வேண்டியவாறு ஈயுஞ் சிவபெருமானது திருநெல்வாயிலரத்துறையை வந் தடைந்தார்.

திருவரத்துறைத் திருக்கோபுர வாயிலுக்கு நெடுந் தூரத்திலேயே நம் நாயனார் சிவிகையினின்றும் இறங்கித் தாழ்ந்திறைஞ்சி மிகுந்த அன்போடுங் களிப்போடும் புகுந்து வலம்வந்து திருமுன்னர் அடைந்து தலைமேற் கைகுவித்து நிலமுற வணக்கஞ்செய்து, 'என்னையும் பொரு ளாக இன்னருள் புரிந்தருளும் பொன்னடித்தாமரை போற்றி' என்று மொழிந்து ஏழிசைப் பதிகம்பாடினர். அவண் சிலநாள் தங்கியிருந்தனர். திருநெல் வெண்ணெய் முதலிய பதிகளுக்கு அன்பருடன்சென்று வணங்கி மீண் டுந் திருத்தோணிபுரப் பெருமானையும் பெரியநாயகியம்மை யாரையுந் திருவுள்ளத்திற் கண்டு மனமுருகிப் புகலிப் பதிக்குச்செல்லக் கருதித் திருவரத்துறைப் பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு முத்துச்சிவிகையின்மேற் புறப் பட்டு வெண்மதிக்குடை நிழற்ற மறையவர் ஆனந்தக்கூத் தாடி, மந்திரங்கள் ஒலிப்ப, பொற்சின்னங்கள் ஊத, இன் னிசைக் கருவிகள் பல முழங்க மிகச்சிறப்பாக எழுந்தரு ளிச் செல்லுங்காலை, வழியிலுள்ள திருப்பதிகளிலுள்ளோர் வழியெங்கும் இருமருங்கிலுங் கொடிகளும் அழகிய விதா னங்களும் நடைப்பந்தர்களும் தோரணங்களும் வாழை கமுகு முதலியவைகளும் நிறைகுடங்களும் மாலைகளும் விளக்குகளும் வரிசை வரிசையாக அமைத்து வரவேற்ற னர். ஞானசம்பந்தப் பெருமான் அவ்வத் திருப்பதிகளி லுள்ள திருக்கோயில்களிற் சென்று கடவுளை வணங்கிப் பாடி, மேற்சென்று திருப்பழூவூரையடைந்து அவ்வூரின் கண் விமானத்தில் வீற்றிருக்கும் பெருமானை வழிபட்டு

ஆண்டு மலைநாட்டினர் திருப்பணிகள் செய்வதைச் சிறப் பித்துப் பாடினர். பின்னர், திருவிசயமங்கை, திருவை காவூர், புறம்பயம் முதலிய பதிகளைவணங்கிச் சேய்ஞ லூருக்கு வந்துசேர்ந்தார். சேய்ஞலூரிலுள்ள மறையோர் மிகவும் உள்ளன்புடன் வரவேற்றனர். அவ்வூர் சண்டேசுர நாயனாரது பிறப்பிடமாதலால் முத்துச்சிவிகையினின்றும் இறங்கி வழிபட்டுச் சென்றார். ஆண்டுள்ள திருக்கோயிலை யடைந்து இறைவரைத்தொழுது சண்டேசுர நாயனார் தந்தைதாள் தடிந்து திருவருள்பெற்ற சிறப்பினைத் திருப் பதிகத்துள் அமைத்துப்பாடினார். பின்னர், திருப்பனந் தாள், பந்தணைநல்லூர் முதலிய திருப்பதிகளைப் பணிந்து பாடிச்சென்று, ஓமாம்புலியூரை யடைந்தார். அவ்வூர் வடதளியின் மேவிய பெருமானாரது திருவடிபணிந்து அழகிய செந்தமிழ்ப் பதிகம்பாடி, திருவாழ்கொளிபுத்தூர், திருக்கடம்பை, திருநாரையூர், திருக்கருப்பறியலூர் முத லிய இடங்கட்குச்சென்று இறைவர்க்குச் செந்தமிழ்த் தொண்டு நிகழ்த்திச் சீர்காழிக்கேகினர். பிள்ளையார் அவ் வூர்க் கெழுந்தருளுவதைக் கேட்ட அவ்வூரந்தணர் வீதிக ளெல்லாங் கவின்பெறச்செய்து புதுமலரும் நறுந்துகளும் பொரியுந்தூவி மந்திரங்களை ஒலித்துக்கொண்டு சிவிகை மீது வெண்குடைக் கீழ்வரும் வள்ளலாரைச் சென்று கண்டு சென்னிமேற் கைகுவித்துப் பெருமுழக்கத்தோடு துதிசெய்தார்கள். பின்னர், நம் நாயனார் திருவீதி வலம் வந்து திருக்கோயிலுட் புகுந்து தோணியப்பரைத் தாழ்ந் திறைஞ்சித் தமிழ்வேதம்பாடிப் புறம்போந்து திருநீல கண்ட யாழ்ப்பாணருக்கு அவர் வீட்டுக்குச்செல்ல விடை கொடுத்துத் தமது திருமாளிகைக்கு எழுந்தருளினர். ஆங்கு, தம் தாயாரால் திருநீற்றுக்காப்புச் சாத்தப்பெற்று அவர்க்கும் பிறர்க்கும் அருள்செய்து திருமடத்திற்றங்கி னார். திருத்தோணியப்பரை நாடொறுந்தொழுது ஆண் டிருந்தகாலை 'உபநயன'ப்பருவம் வந்தது.

ஞானசம்பந்தர் திருவருள்பெற்று ஆலயத்தினின்றும் புறப்பட்டகாலை மறையோர் குழாமுந் தொண்டர் குழா

மும் ஒருங்கு அவரை எதிர்கொண்டனரென்று கூறப்பட்டது. இதனால், சிவபெருமானைக்குறித்து வேள்வி இயற்றி வழிபடும் வேதநெறிக்குரியவரும் சைவத்துறை நின்றவரும் வெவ்வேறு வகையினரென்பது பெறப்படும். அக்காலத்திலே, மனமகிழ்ச்சியைக் காட்டுவதற்கு மேலாடைகளை விசும்பில் எறிவது வழக்கமாக இருந்ததென்று அறிகிறோம். பெண்டிர் மங்கலவாழ்த்துக்கள் கூறுவதும் நறுமலரும் வாசனைப்பொடியும் பொரியுந் தூவுவதும் தெருத்திண்ணைகளில் நிறைகுடங்கள் வைப்பதும் சங்கு முதலிய மங்கல வாத்தியங்களை ஒலிப்பதும், வாழை கமுகு முதலியவைகள் நாட்டி அழகுசெய்வதும், தோரணங்கள் தூக்குவதும், தூபமெடுப்பதும், கொடிகள் வரிசையாக அமைப்பதும், நிறைகுடங்களில் அரிசி அரசிலையும் தருப்பையும் அமைப்பதும, பெரியோரை யெதிர்கொள்ளுங்காற் சிறப்பாக நிகழ்ந்தனவென்பது இச் சரித்திரத்தால் விளங்கும். பிள்ளையார், திருமாளிகை யெய்தியபின்பு, திருத்தோணியப்பருடைய சேவடிக் கமலங்களையே இரவுமுழுவதும் இடையறாக் காதலோடு நினைந்திருந்தார் என்பதால், இரவிலே ஞானிகள் அறிதுயிலுடையராய்த் தூக்கத்தை ஒழித்து இறைவனையே நாடி நிற்கும்நிலை விளக்கப்பட்டது காண்க. திருக்கோலக்காவிற் சிவபெருமான் செம்பொற்றாளங்கள் பிள்ளையார் திருக்கரங்களில் வந்தமையுமாறு அருளிச்செய்தது பிள்ளையாரது இன்னிசைத் தொண்டிற்கு இறைவன்மகிழ்ந்து அது செவ்வையாய் நடைபெறும் பொருட்டும் பிள்ளையார் செங்கைகள் நோவாதிருத்தற் பொருட்டுந் தாமே தம் குழந்தைக்கு வேண்டியதை நல்கினவாறாகும். பிள்ளையாராதல் பிறராதல் திருத்தாளங்களை இறைவர்பால் வேண்டிற்றிலர். இதனால் சிவஞானிகட்கு வேண்டுவதைச் சிவபெருமானே ஈந்தருள்வர் என்பதும், அவர்கள் பயன்கருதாது வழிபடுவரென்பதுந் தெளிக. இறைவர் நல்கிய திருத்தாளங்கள் சிவத்தொண்டிற்கே யென்பதனைக் குறிப்பாலுணர்த்துவான், திருத்தாளங்களில் ஐந்தெழுத்துமந்திரம் வரையப்பெற்றிருந்தது. மேலும் அவை அதிசயமாகவந்து நாயனாரது திருக்கரங்

களிற்றங்கின. உலகத்தார் கருதிய பொருளை இறைவன் அவர்களுக்குத் தோன்றாமலே மக்கள் வாயிலாகவே அளித் தருளுவர். தாமே நேரில் வேண்டியதை ஈதல் ஞானி களுக்கேயன்றிப் பிறர்க்கன்று. ஞானிகளே இறைவனை அறிவர். ஆதலால், அவர்களுக்கே நேரில் இறைவர் அருள் செய்வர். அது பிறர்க்கு வியப்பாகத்தான் இருக்கும். வினைக்கம்பியன் ஒருவனாலுஞ் செய்யப்படாமல் எவ்வாறதி சயமாகத் தாளங்கள் வருதல் கூடுமென்று எண்ணுவார் திருவருளின் பெருமையையறியாதவராவர். சிவபெருமான் ஒரு தாய்வயிற்றில் பிறவாமல் அன்பர் வேண்டிய வடிவை நினைத்தமாத்திரத்தில் எவ்வாறு எடுத்துத் தோன்றியருள வல்லாரோ அவ்வாறே அவரது நினைப்புமாத்திரத்தில் எப்பொருளும் ஐம்பூதங்களினின்று உருவெடுத்தல் இயல்பே. ஆதலால் இறைவர் அளித்தருளும் பொருள்கள் அவரது திருவுள்ளக்குறிப்பால் தோற்றமெய்துவனவே யன்றிப் பிறரால் அமைக்கப்படவேண்டுமென்ற முறைமை யில்லை. இக்கருத்துப்பற்றியே கடவுளை 'வார்த்தைக் குயவனார்' என்று சித்தர் நூலுள் வழங்கினரென்க. அப்ப ரடிகட்கு நல்கிய பொதிசோறும் இருவர்க்கும் அளிக்கப் பட்ட படிக்காசுங் காரைக்காலம்மையாருக்குக் கொடுக் கப்பட்ட மாங்கனியும் இறைவர் திருக்குறிப்பால் ஐம்பூதங் களினின்று வடிவெடுத்தனவே. உலகப் படைப்பில் உண் டாகும் கல், மண், பொன், வெள்ளி முதலிய பொருள்க ளெல்லாம் பூதங்களினின்று படைக்கப்பட்டனவே. அவை கள் வடிவெய்தற்குப் பன்னாட்சென்றனவென்றாற் சின்னா ளிலும் வடிவதோற்றந் திருவருளால் அமைத்தலுங் கூடும். கோழிமுட்டைகளை மிகுந்த சூட்டினால் இயற்கைப் பருவம் வருமுன்னரே குஞ்சுபொரிக்கும்படி செய்யலாம். அநேக வண்டி விறகுகள் அடுக்கி நெருப்பிட்டு உண்டாக்கும் வெப்பத்தை மின்னொளியைச் சூடாக மாற்றுவதனால் விரைவில் எழுப்பிவிடலாம். இவைகளினாலே, பன்னாளிலே முடிவனவற்றைச் சிறிதுநேரத்தில் முடிக்கலாமென்பது அறியக்கிடக்கின்றது. ஆதலால், நாம் அறியாத இயற்கை வலிகளின் ஆற்றலால் ஐம்பூதங்களினின்றும் பொருள்கள்

விரைவில் உருவெடுத்தல் கூடுமென்பது ஊகிக்கக்கூடும். இக்கருத்துப்பற்றியே, 'முனி கருப்பம் இராத் தங்காது' என்ற வாக்கெழுந்ததூஉமாம். பத்துத் திங்களில் உரு வெடுக்கும் உடம்பு மிகுந்த சூட்டு வளத்தினால் மூன்றே முக்கால் நாழிகையில் உருவெடுத்தல் கூடும். இயற்கை யாகத் தாவரப்பொருள்கள் ஐம்பூதங்களினின்றும் உரு வெடுத்தற்குப் பலநாட் கழியுமாயினும் செயற்கையாகத் திருவருட் குறிப்பால் எப்பொருளும் இமைக்குமளவில் தோற்றுதலும் மறைதலுங்கூடும். ஆதலின் நம் நாயனு ருக்கு அளித்தருளப்பெற்ற செம்பொற்றாளங்கள் இறைவர் திருவுள்ளக் கருத்தின்படி ஐம்பூதங்களினின்றுந் தாமா கவே வடிவெடுத்து அவருடைய திருக்கரங்களிற் போந்தன என்று தெளிக. இறைவர் எவ்வாறு தமது திருவருள் உருவத்தைத் தக்க பெருந்தவத்தினர்க்கு மாத்திரந் தோற்றுவிக்கின்றாரோ அவ்வாறே வியத்தற்குரிய பொருள் களை ஐம்பூதங்களினின்றும் படைத்துக்கொடுத்தலையும் அத்தகையோர் மாட்டே செய்தருளுவர். ஏனையோர்க்கு அவ்வாறருள்செய்வதில்லை என்பது உய்த்துணரற்பாற்று. 'சார்ந்தவர்க் கல்லால் நலமிலன்' என்றதுமது. நம் நாய னார்க்கு முத்துச்சிவிகை முதலியவற்றை இறைவர் நல்கிய போது அவர் மொழிந்தருளிய திருவாக்கானது இக் கருத்தை வற்புறுத்துதல் தெற்றெனஉணரப்படும்.

விண்ணவர் மலர்மாரி பொழிந்தனரென்பதும் இத னோடு ஒத்து ஆராயத்தக்கது. விண்ணவர் விண்ணுலகத்தி லுள்ள கற்பகதரு முதலிய மரங்களிலுள்ள மலர்களைக் கொய்து தூவுகின்றார்கள் என்பது புராண ஐதிகமாகும். விண்ணுலகமொன்றிருக்கலாம். அது நமது கண்ணுக்குத் தோன்றுவதில்லை. அஃது ஐம்பூதங்களாலாயதோ அல்லது வான் என்னும் ஐந்தாம் பூதத்தாலாயதோ, அதற்கும் நுட்பமான தத்துவத்தாலாயதோ யாமறியக்கூடவில்லை. நம் சிவாகமங்களிலே நில முதலானது (பிருதிவி தத்துவம்) நூறுகோடி யோசனையளவு பரவியிருப்பதாகக் கூறப்பட் டிருத்தலால், இவ்வுலகத்திற்கு மேலுள்ள புவனங்களிலும்

உயிர்கள் வாழ்வதற்குஞ் செடி கொடிகள் தழைப்பதற்கும் அவைகளிலே மலர் பூப்பதற்குங் காரணம் உண்டென்பது ஊகிக்கப்படும். இஃதன்றியும் வானிலுறையும் விண்ணவர்கள் பூதநுட்பங்களின் தன்மையையுணர்ந்து மலர் முதலியவற்றை விரைவிற் பூக்கச்செய்து அவற்றை எடுத்தெறிதலும் நம்பக்கூடிய தென்பாருமுளர். இறந்த உயிர்களின் தத்துவ ஆராய்ச்சி மிகுந்த இக்காலத்திலே (Psychic Research) குறளிகளின் ஆற்றலால் எதிர்பாராத இடத்தில் திடீரென நெருப்புப் பற்றுவதும் கல்விழுவதும் தூயவல்லாப் பொருள்கள் விழுவதும் பழக்கத்திலே தாமாகப் பார்த்தவர்கள் விண்ணவர் பூமாரிபொழியக் கூடுமென்பதை நம்பாதிரரரென்க. இவற்றை நம்பாதவர்கள் வானில் விண்ணவரென்னும் வகையினர் மக்களினும் பேராற்றலுடையவராக இருப்பாரென்று நம்புவாராயின் உலகத்தில் நிகழும் நற்செய்தியைக்கண்டு விண்ணவர் தம்மகிழ்ச்சியைக் காட்டுதல் கூடுமென்று கொள்ளுவாராக. இது நிற்க.

நம் நாயனார் பச்சிளம் பாலகராயிருந்தமை கருதிச் சிவபாதவிருதயர் அவரைத் தமது தோளிலே தாங்கிச் சென்றார். ஆனால், சிவஞானச்செல்வராகிய அவர்க்கு இன்பமானது இடையறாது பெருகிக்கொண்டிருத்தலால் நடை முதலியவற்றாற் சிறிதும் வருந்துவாரல்லர். ஆதலால், சேக்கிழாரடிகள், நாயனார் நடந்து செல்லுதலால் வருந்தினரென்று கூறாது தாதையார் தரியாது தோளின்மேல் தரித்துக்கொள்ள என்றருளிச் செய்தாரென்க. சிவலோகத்திலே, சிவபெருமான் உமாதேவியாரோடு வெளிப்படையாகத் தோன்றியருளுவதுபோலத் திருத்தோணியபபர் எளிதில் ஞானசம்பந்தருக்குத் தோன்றியருளி அவர் வாயிலாக ஏனையோர்க்குந் தாம் அருள்செய்யுந் திறத்தை அறியச்செய்த திருவிடமாதலால் சண்பைமூதூரைச் சிவலோகமென விளங்கியதென்றார். இன்னுஞ் சிவலோகத்திலே சிவபெருமான் சீகண்ட முதல்வரை அதிட்டித்து நின்று அன்பர்க்கருள் செய்வதுபோலச் சீர்காழிப்பதிக்கண் ஞானசம்பந்தரை அதிட்டித்து நின்று யாவர்க்கும் அருள்செய்தமையானும் அது தெளிவென்ப.

ஞானசம்பந்தரது தந்தைமரபைப் போலத் தாய் மரபும் சைவநெறி வழிவந்தமையால் அவர் தாயாரது பிறப்பிடமாகிய திருநனிபள்ளியிலிருந்த மறையவரெல்லாரும் விரைந்துவந்து அவர் கழல்பணிந்தனரென்க. இருவினைப் பிணிப்பினால் பெருந்துயருறும் உயிர்கள் இறைவரைத்தொழுது உய்யவேண்டுமென்னுங் கருணையினாலே அவர்கட்கு மிகுந்த உறுதியுரைப்பார். 'நனிபள்ளி யுள்ள வினை கெடுதலாணை நமதே' என்றார். காரைகள் கூகை யென்று தொடங்குந் திருப்பதிகத்தைப் பாலையை நெய்தலாக்கப்பாடிய பதிகமென்பர். 'பாலைநெய்தல் பாடியதும்' என்ற திருவாக்கு, திருக்களிற்றுப் படியாரிலே ஒரு செய்யுளின் தலைப்பிலே காணப்படுகின்றது. 'காரைகள் கூகை முல்லை' என்ற அடி பாலையினியல்பைக் கூறுகின்றது.

நகைமலி முத்திலங்கு மணல்சூழ் கிடக்கை
நனிபள்ளி போலு நமர்காள்.

என்ற ஏழாந்திருப்பாட்டிறுதியால் நெய்தனிலத்தினியல்பு சுட்டப்பட்டது.

எப்பொழுதுஞ் சிவனடியே சிந்திக்குந் திருவுடையாராதலின் சேய்மையிலுள்ள உலகப் பொருள்களின்கண் நம் நாயனார் தமது காட்சியைச் செலுத்தாராதலின் மலர்ச் சோலை தோன்றிய இடம் திருநனிபள்ளி என்று தாமே தெரிந்துகொள்ள முயலாது 'தோன்றுவது எப்பதி' என்று பிறரை வினவினாரென்க.

திருத்தலங்களைத் தூரத்தே கண்டபோது தொழுது போற்றுதல் வேண்டுமென்பதும், திருப்பதிகளின் எல்லையை அடைந்தவுடன் அப்பதியையுந் திருக்கோபுரத்தையுந் தாழ்ந்திறைஞ்ச வேண்டுமென்பதும், திருக்கோயில் வாயிலிற் பணியவேண்டுமென்பதும், திருக்கோயிலுட் சென்றகாலை வலம்வருதல் வேண்டுமென்பதும், இறைவரைத்தொழுது மீளும்போது தாழ்ந்திறைஞ்சவேண்டுமென்பதும், தொழுங்காலை சென்னிமேற் கைகுவித்தலுமாமென்பதுமாகிய இம் முறைகள் நாயனாரது தலயாத்திரையாராய்ச்சியால் விளங்கும்.

பானல்வயற் றிருநனி பள்ளியெனத்
தாதையார் பணிப்பக் கேட்டு
ஞானபோனகர் தொழுது நற்றமிழ்ச்
சொற்றொடை மாலை நவிலலுற்றார் (கஈச)

முத்தமிழ் விரகர் தாமும் முதல்வர்கோ புரத்து முன்னர்
சித்தநீ டுவகை யோடுஞ் சென்றுதாழ்ந் தெழுந்து புக்குப்
........................ .............. ..........................
நித்தனார் தம்முன்பெய்தி நிலமுறத் தொழுது வீழ்ந்தார் (கஉரு)

வேணியார் தம்மை நாளும் போற்றிய
விருப்பின் மிக்கார் (கஉஅ)

திருவீதியைத் தொழுதணைந்தனர் (கருசு)

பாடினர் ஆடினர் பொழிந்தனர் விழிமாரி (கசுக)

மாடு செம்பொனின் மாளிகையை வலங்கொண்டு
............தொழுதுபோந் தருமறை (கருஅ)

எழுநிலைக் கோபுரம் பணிந் தெழுந்தனர் (கருஎ)

என்றும் வருவனவற்றால் அவை தெளியப்படும். தில்லை யானது மிகப் புனிதமென்ற காரணத்தால் ஆண்டு இறைவனைத் தொழுதலேயன்றித் தங்குதல் கூடாதென்று நம் பரமாசிரியர் திருவேட்களஞ் சென்றமை கருதத்தக்கது. இனைய செய்கையெல்லாம் பிறஆன்மாக்கட்கு வழிபடு முறையை அறிவித்து அவர்களை உய்யக்கொள்ளுதற் பொருட்டும், பரமஞானமுடைய தம்மைப் பெரியராக மதியாது ஏனையான்மாக்களோடு ஒருங்குவைத்து எண்ணினமையானும் நிகழ்ந்தனவென்க.

திருநீலகண்டப் பாணனாரை நம் பிள்ளையார் பேரன் போடு வரவேற்றனர்.

அளவிலா மகிழ்ச்சியினார் தமைநோக்கி யையர்நீ
ருளமகிழ விங்கணைந்த வுறுதியுடை யோமென்றே
யிளநிலா நகைமுகிழ்ப்ப விசைத்தவரை யுடன்கொண்டு
களநிலவு நஞ்சணிந்தார் பாலணையுங் கவுணியனார்.

(சம்பந்தர் புராணம் - ருக)

என்ற செய்யுளிலே பாணரை ஐயர் என்றது கவனிக்கத் தக்கது. அக்காலத்திலே எம்மரபினராயிருப்பினும் விருந் தினராய் வந்தவரை ஐயரென்று உபசரித்தழைப்பது வழக்கம்போலும். தம் மெய்த்தந்தையார் தோணிபுரத் திறைவராதலால் பாணரைக் கண்டவுடன் அவரைத் திருக் கோயிலுக்கு அழைத்துச்சென்று இசை பாடுவித்தன ரென்க. பாணருடைய அன்பைப் பாராட்டுவார் 'ஏயு மிசை யாழ் உங்கள் இறைவர்க்கியற்றும்' என்றார். அப்பரடிகளை நோக்கி 'உங்கள் தம்பிரானை நீர் பாடுக!' என்றதனை இது நினைவுறுத்துகின்றது. அப் பாணனார்க்கு உறைவிடம் அமைத்து நல்விருந்து இயற்றினமை, உலகினர்க்கு விருந் தோம்புதலின் சிறப்பினை அறிவுறுத்தியவாறாகும். பிள்ளை யார், தாமாகத் தம் பதிகங்களை யாழிலிட்டு இசைக்கும்படி பாணரைக் கேட்கவில்லை. அவருடைய திருப்பதிகங்களை யாழிலிட்டு இசைக்கும் வரத்தைப் பாணர் அவர்பால் வேண்டியபோது உடனே மனமகிழ்வுற்று இசைந்தனர். இதனால், நம் பரமாசிரியரது தன்பெருமை யறியாமையும் பிறருடைய நன்னோக்கங்களை நிறைவேற்றுங் கருணையும் புலனாதல் காண்க.

பிள்ளையார் தில்லைப்பெருமானை வணங்கிய முறை யினைத் தெரிவிக்கும் திருப்பாட்டுகள் மிகவும் பொருள்வள முள்ளனவென்பது பின் வருவனவற்றா லறியப்படும்.

அண்ண லார்தமக் களித்தமெய்ஞ்
ஞானமே யானவம் பலமுந்தம்
உண்ணி றைந்தஞா னத்தெழு
மானந்த வொருபெருந் தனிக்கூத்துங்
கண்ணின் முன்புறக் கண்டுகும்
பிட்டெழுங் களிப்பொடுங் கடற்காழிப்
புண்ணி யக்கொழுந் தனையவர்
போற்றுவார் புனிதரா டியபொற்பு.

உணர்வி னோர்பெற வருஞ்சிவ
போகத்தை யொழிவின்றி யுருவின்க
ணணையு மைம்பொறி யளவினு
மெளிவர வருளினை யெனப்போற்றி
யிணையில் வண்பெருங் கருணையே
யேத்திமுன் னெடுத்தசொற் பதிகத்திற்
புணரு மின்னிசை பாடின
ராடினா ரொழிந்தனர் விழிமாரி.
(சம்பந்தர் புராணம் கசுO - கசுக)

பொன்னம்பலமானது சிவபெருமான் தமக்கருளிய மெய்ஞ் ஞானமாகவும் அம்பலத்துள் நிகழும் ஒப்பற்ற திருநடனம் ஞானநிறைவால் தமது உள்ளத்தெழும் பேரானந்தமாக வும் பிள்ளையார் கண்ணெதிரே கண்டு களித்தார் என்று கூறப்பட்டது. சிதம்பரம் என்ற சொல்லில் 'சித்' என்பது ஞானம் என்று பொருள்படும். ஞானமே சத்தியின் வடிவம். 'சத்தியின் வடிவே தென்னிற்றடையிலா ஞான மாகும்' (சிவஞான சித்தியார்) சிவசத்தியால் ஞானப் பாலுண்டு சிவஞானம் பெற்றமையால் சத்தியின் வடிவ மாகிய திருவம்பலத்தைத் தமக்கு அளித்த மெய்ஞ்ஞான மாகவே கண்டார். திருநடனம் இறைவரது ஐந்தொழி லைக் குறிப்பதாகும்.

தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு. (உண்மை விளக்கம் - ஙரு)

சிவசத்தியின் வாயிலாகவே ஐந்தொழிலும் நடை பெறுகின்றன. அதுவே திருவம்பலத்தில் இறைவர் திரு நடனஞ் செய்வதாகக் கூறப்படும் பதிஞானத்தை அடைந் தவர்களே மெய்ப்பரம் பொருளின் அருட்செய்கைகளைப் பழக்கத்திலுணர்ந்து பேரின்பம் நுகரவல்லாராதலின் 'ஞானத்தெழுந்த ஒரு பெருந்தனிக் கூத்தும்' என்றனர். இனி உலகமெல்லாம் ஒடுங்கிய ஊழி முடிவில் தமது அருட் சத்தியோடு சிவபெருமான் தனியே நின்று திருநடனஞ்

செய்தல் சிவஞானிகட்கு எல்லையில்லாத பேரின்பத்தைக் கொடுத்தற் பொருட்டாம. மக்கள் பலரும் தேவர் பலரும் ஆடுங் கூத்துகள் தத்தம் நலத்தின் பொருட்டேயாயொழி யச் சிவபெருமானது திருக்கூத்து பிறர்பொருட்டாதலா னும் எல்லாம் ஒடுங்கிய காலத்துத் தனியே நிகழுவதாக லானும் ஞானிகள் அறிவிற் சிவன் அருளால் மன்னிப் பேரின்பம் விளேத்தலானும் உண்ணிறைந்த ஞானத்தெழும் ஆனந்த ஒருபெருந் தனிக்கூத்தென்றாரென்க. ஊனக் கண்கொண்டு பார்க்கும் நம்மவர்க்கு ஞானத்தின் அறிகுறி யாகிய திருவம்பலமும் ஆனந்தத்தின் அறிகுறியாகிய திருக்கூத்தும் பூதக்காட்சியாகத் தோன்றும். பதார்த் தங்கள் பாராது பரமே பார்த்திருக்கும் பேரறிவினராகிய நம் நாயனுருக்குப் பூதவடிவாக உள்ளனவும் ஞானவடிவ மாகவே விளங்கும். ஆதலால் சிவஞானத்தையும் சிவா னந்தத்தையுமே கண்ணின் முன்புறக்கண்டு கும்பிட்டன ரென்றனர் தொண்டர் புராணமுடையாரென்க. நனவி லேயே அதீதநிலேயில் நிற்கும் அண்ணலார்க்கு ஐம்பொறி யோடுகூடி உலகத்தை நோக்கியகாலேயுஞ் சிவபோகமே கைவருதல் இயல்பு. பொன்னம்பலத் திருக்கூத்துக் காட் சியால், தமது சிவபோகம் ஐம்புலனுக்கும் பேரின்பம் விளேத்தமை கசுக-ம் பாட்டில் இனிதுணர்த்தப்பட்டது.

இறைவன் உயிர்க்குயிராயிருந்து ஐந்தொழில் நடத்து வதைத் தெளிவாகப் புறக்கண்களால் திருவம்பலத் திருக் கூத்தின்கண் கண்டாராதலின், சேக்கிழார், 'விண்ணுயகன் கூத்து வெட்ட வெளியே திளேத்துக் கண்ணுர அமுதுண் டார்' என்ருர். தில்லேவாழந்தணர் தன்மையை அறிய விரும்பிய பாணருக்கு அவர்கள் கணநாதராய்த் தோன்றி யதைக் காட்டினுர். தில்லேப் பெருமானுக்கு அணுக்கத் தொண்டர்களாயிருக்கும் பேறு தில்லேவாழந்தணர்களுக்கு எவ்வாறு கிடைத்ததென்று பாணர் அறியக் கருதினர் போலும். அவர்கள் ஆதியில் திருநடனங் கண்டு கணநாத ராம் பேறுபெற்ற அந்தணர்வழி வந்தமையால் அவருக்கு அச் சிறப்பு வாய்ந்தது.

பாணருடைய பிறப்பிடமாகிய எருக்கத்தம்புலியூருக்கு நாயனார் சென்றகாலைத் தமது திருப்பதிகத்துள் அவரைச் சிறப்பித்துக் கூறியது மிகவும் போற்றத்தக்கதே. தாம் அடியார் தலைவராயிருந்தும் பிற அடியார்கள்பால் மிகுந்த அன்பு வைத்திருந்தனரென்பது இதனால் தெரிகின்றது.

ஐயர் நீரவ தரித்திட
விப்பதி யளவின்மா தவமுன்பு
செய்த வாறெனச் சிறப்புரைத்
தருளியச் செழும்பதி யிடங்கொண்ட
மைகொள் கண்டர்தங் கோயிலி
னுட்புக்கு வலங்கொண்டு வணங்கிப்பா
ருய்ய வந்தவர் செழுந்தமிழ்ப்
பதிகமங் கிசையுட னுரைசெய்தார.

(சம்பந்தர் புராணம் -கஎக)

திருவரத்துறைக்குச் செல்லுங்காலை ஆண்டு வீற்றிருக்கும் பெருமானைக் காணவேண்டுமென்னும் வேட்கை மிகுதியினாலே தந்தையார் தோளினின்று இறங்கித் தாமே விரைவிற் செல்வாராயினர். திருக்கயிலையைச் சாரவேண்டுமென்று அப்பர் விரைந்தேகினர்போலும். தாம் வழி நடந்த வருத்தம் ஒன்றும் உணராரென்பதுபற்றி அவர் வருந்திலரென்று கூறாது 'பாததாமரை நொந்தது பைப் பைய' என்றனரென்க. பாசத்தை அறவே நீக்கப்பெற்றவர் செம்பொருட் காட்சியை அவாவுதல் பொருத்தமுடையதே.

பாச மற்றில ராயினும் பார்மிசை
ஆசை சங்கரற் காயின தன்மையால்
தேசு மிக்க திருவுரு வானவர்
ஈச னைத்தொழு தேதொழு தேகினார்.

(சம்பந்தர் புராணம் - கஅசு)

இடுக்கண் வந்தாலும் இறைவரது திருமந்திரத்தையே தமக் காதரவாகக் கொள்ளுதல் பெரியோரது வழக்கம்.

மாறன் பாடியெ னும்பதி வந்துற
ஆறு செல்வருந் தந்தி னசைவினால்
வேறு செல்பவர் மெய்துறப் பிள்ளையார்
ஏறு மஞ்செழுந் தோதியங் கெய்திட
(சம்பந்தர் புராணம் - ககக)

என்றது காண்க. வேனிற்காலத்து வெப்பத்தை நீக்குவதற்கு முத்தினுஞ் சிறந்த மணி இல்லையாதலானும் வெண்கொற்றக்குடை களங்கமின்மையைக் குறிப்பதாய்ச் சமய வேந்தற்குரிய சின்னமாய் அமைதலானும் பொற்சின்னங்கள், சமயநிலை நாட்டவரும் அரசரது பெருமையைப் பகர்வதாலும் சம்பந்தருக்கு அவை அளிக்கப்பட்டன போலும். அவை இறைவரது திருவருளாற் கிடைத்தமையால் அவற்றை மறுத்தற்கஞ்சி ஏற்றுக்கொண்டார். தாம் சிவிகை ஏறினாலும், இறைவரது திருவருளே தமது திருத்தொண்டினை நிகழ்த்துவதென்ற கருத்தால் சிவிகையின் மீது அஞ்செழுத்தோதி யேறினர். சிவிகையும் வெண்ணிறமாய்ப் பல வெண்கதிர்களை வீசினமையானும் புகலியர்கோனும் வெண்ணீறணிந்து முழுமதி யன்ன திருமுகத்தோடு விளங்கினமையானும் 'பாற்கடல் வளர்மதி யுதித்தென' என்றார் புராண ஆசிரியர். செம்பொற்றாளங்கள் வந்தமையை விளக்கிய காரணங்கள் இவற்றிற்குமொக்கும். பிள்ளையார் ஆன்ம இனத்தைச் சார்ந்தவரென்பது திருவரத்துறைக்குச் சென்று தொழுதகாலை,

மன்னு கோயிலை வலங்கொண்டு திருமுன்பு வந்து
சென்னி யிற்கரங் குவித்துவீழ்ந் தன்பொடு திளைப்பார்
என்னை யும்பொரு ளாகஇன் னருள்புரிந் தருளும்
பொன்ன டித்தலத் தாமரை போற்றியென் றெழுந்தார்.
(சம்பந்தர் புராணம் - உஉ௬)

என்றதால் தெளியப்படும். நம் நாயனார் மீண்டு சீர்காழி சேரும்வரை பாணரும் அவருடன் சென்றதாகத் தெரிகின்றது. சீர்காழியிலேயே அவருஞ் சிலகாலம் குடியிருந்தாரென்பது சீர்காழிக்கு மீண்டபின்பு திருக்கோயிலுக்குச் சென்று வணங்கி மாளிகைக்கேகுங் காலத்திற் பாணர்

பின்னேவர அவரை 'வளம்பெருகு மனையிற்போக' என்றருளிச் செய்தமையால் விளங்கும். நம் பரமாசாரியாருடைய தாயார் தம் அருட் குழந்தையின்பாலுள்ள கழிபேரன்பினால் இடையூறு யாதும் அணுகாவண்ணம் பிள்ளையாருக்குத் திருநீற்றுக்காப்புச் சாத்தினர்போலும். திருநீற்றினைக் காப்பாக அணியும் வழககம் அக்காலத்து உண்டென்பது போதரும். இறைவனுக்குத் திருப்பல்லாண்டு மொழிவதுபோலச் சம்பந்தருக்குத் திருநீற்றுக்காப்புச் சாத்தியதாகும். சிவஞானிகளுக்கு யாதொரு இடையூறும் இயற்கையிலே அணுகாமை தெளிக.

---

## ரு. உபநயனம்

ஈண்டு, மாமறைச்சிறுவரது 'உபநயனச்' சடங்கு நிகழ்ந்த முறையைக் கூறுவாம். மறையவரது உலகியன் முறைக்கேற்ப உபநயனச் சடங்கு நம் நாயனார்க்குச் செய்யப்பட்டது. அஃது அவர்க்கு வேண்டுவதில்லை என்பது தோன்ற 'ஒரு பிறப்புமெய்தாமையுடையார் தம்மை இருபிறப்பின் நிலைமையினைச் சடங்கு காட்டி எய்துவிக்கும்' என்றார் ஆசிரியர் சேக்கிழார். உபநயனஞ் செய்யுங்காலை வேதம் நான்கும் ஓதுவதற்கு அதிகாரங் கொடுத்தல் மரபாகலின் அவ்வாறு அதிகாரங் கொடுத்ததாக உபநயனச் சடங்கியற்றிய மறையவர் நாயனார்க்குச் செப்பவும் அவர் குற்றமில்லாத அளவிறந்த மறைகளை எடுத்தியம்பினார். மறையவர் யாவரும் பிள்ளையாரது கலைஞானத்தின் பெருமையுணர்ந்து அவரைத் தமது தியானக் கடவுளாகக் கருதி வணங்கி அவர்பால் தம்முடைய ஐயங்களைத் தெரிவித்துக்கொண்டகாலை அவர் எல்லா மந்திரங்களுந் தோன்றுவதற் கேதுவாகிய மூலமந்திரம் ஐந்தெழுத்து என்பதை அவர்களுக்கு அறிவுறுத்துவான் 'அந்தியுண் மந்திரம் அஞ்செழுத்துமே' என்னும் முடிபுடைய திருப்பதிகத்தினைப் பாடியருளினர்.

உபநயனச் சடங்குகள் யாவும் முடிந்து சிவநெறியொழுகும் அந்தணரோடு சீர்காழிப்பதியில் அமர்ந்திருந்த காலையில், திருநாவுக்கரசர் அவரைக் காண்பான் கழுமலத்திற்கு வந்தனர். அவர் வருகின்றார் என்பதைக் கேட்டு அவரைக் காண்பது தமது தவப்பயன் என்று கருதி அன்பர் குழாத்தோடும் எதிர்கொள்ள எழுந்தருளினர். அப்பர் பெருமானது அன்புவிளங்குந் திருவேடத்தினை நம் பரமாசிரியர் தூரத்தே கண்டபொழுதே தொழுது எதிர்செல்ல, ஆளுடைய அரசும் எதிர்வநது வணங்க இருவரும் அளவளாவினர். பின்னர், நாயனார் அரசைத் திருத்தோணியப்பர் கோயிலுக்கு அழைத்துச்சென்று அவரோடு இறைவரை வணங்கித் திருமாளிகைக்கு அவரை உடன்கொண்டு சென்றார். திருநாவுக்கரசருக்கும் அவரோடு உடன்வந்த

ஏனைத் தொண்டர்க்குஞ் சிறப்பாக அமுது செய்வித்துப் பெரு நண்போடு உடனுறைந்தனர். பின்னர், திருநாவுக்கரசர் பிறபதிகளை வணங்க விடைபெற்றுச் செல்ல அவர்க்குப் பின்சென்று வழியனுப்பிச் சீர்காழிக்கு மீண்டு அங்கே வீற்றிருக்கும் நாளில் ஞான வள்ளலார் மொழிமாற்று, மாலைமாற்று, மடக்கு, இயமகம், ஏகபாதம், இருக்குக்குறள், எழுகூற்றிருக்கை, ஈரடிவைப்பு, முடுகு முதலிய பலவகைப் பாவினங்கட்கு மூலமாகிய திருப்பதிகங்களைத் தோணிபுர நாதர்மீது பாடினர். திருப்பதிகங்களின் இசையனைத்தையும் பாணரும் அவர் மனைவியார் மதங்க சூளாமணியாரும் யாழிலிட்டு வாசித்து வந்தார்கள். பின்னர், தமிழ்நாட்டின்கண்ணுள்ள திருப்பதிகளனைத்துஞ் சென்று வணங்க விரும்புங் கருத்தினை நம் நாயனார் தம் தாதையாருக்கு அறிவித்தார். தாதையார் தம் அருமைப் புதல்வரைப் பிரிந்துறைய வியலாதென்றும் சிலநாள் கழித்துத் தாம் ஒரு வேள்விசெய்யக் கருதுவதாகவும் அதுவரை நாயனாரோடு உடன் வருவதாகவும் உரைத்தார். பிள்ளையார் திருத்தோணியப்பரிடம் விடைபெற்றுக்கொண்டு தந்தையார் பின்வரப் பாணரோடும் முத்துச்சிவிகைமீது வெண்குடை நிழற்ற, சின்னங்கள் ஊத, பதிகள்தோறும் அடியார்கள் பணிந் தெதிர்கொள்ளும்படி புறப்பட்டார். திருக்கண்ணார் கோயில் முதலிய திருப்பதிகளை வணங்கி அவர் காவிரியின் வடகரையின் மேற்றிசைப்பக்கஞ் சென்றார். குறுக்கை, அதிகை, அன்னியூர், பந்தணைநல்லூர், மணஞ்சேரி, வேள்விக்குடி, பூந்துருத்தி, திருக்கோடிகா, கஞ்சனூர், திருமாந்துறை, திருமங்கலக்குடி, திருவியலூர், திருந்துதேவன்குடி, இன்னம்பர், வடகுரங்காடுதுறை, திருப்பழனம் முதலிய பதிகட்குச்சென்று திருப்பதிகம் பாடித் தொழுதார். குரங்காடுதுறைப் பதிகத்தில் வாலியார் சிவபெருமானை வழிபட்டதைச் சிறப்பித்துப் பாடினர். பின்னர் திருவையாற்றுக்குச் சென்றனர். ஆண்டிருந்த தொண்டர்களெல்லாரும் அத்திருப்பதியினை மிகவும் அணிபெறச்செய்து சம்பந்தரை எதிர்கொண்டனர். அத்தலத்தை அடையும்போது அவர்,

'புலனைந்தும் பொறிகலங்கி'

என்னும் பதிகத்தை அருளிச்செய்தார். பின்னர், திருக்கோயிற்குச் சென்று 'கோடல்' என்னும் பதிகம் பாடினார். பின்னர், திருப்பெரும்புலியூர் முதலான தலங்களை வணங்கி மேற்றிசைக்குச் சென்று நெய்த்தானம், மழபாடி முதலிய தலங்களை வணங்கினார். திருமழபாடியில் சிவபெருமான் வயிரத்தூணிலமர்ந்ததைச் சிறப்பித்துப் பாடினார். அப்புறம், திருக்கானூர், அன்பிலாலந்துறை, வடகரை, மாந்துறை முதலிய தலங்களை வணங்கிப் பாடினார். திருமாந்துறையில் திங்கள் ஞாயிறு மருத்துக்கள் என்னும் விண்ணோர், இறைவனை வழிபட்டதைச் சிறப்பித்தனர். பின்னர், மழநாட்டிற்குச் சென்று திருப்பாச்சிலாச்சிராமத்தில் வீற்றிருக்கும் பெருமானை வணங்கக் கருதினர்.

அவ்வூரிற் கொல்லிமழவனென்பான் தன் அருமைப் புதல்விக்கு முயலகனென்னும் நோயினால்வந்த பெரு வருத்தம் பரிகாரங்களால் தீராமைகண்டு திருக்கோயிலுட்டிருமுன் அப் பெண்மணியைக் கொணர்ந்து வைத்திருந்தான். சம்பந்தர் வருகின்றார் என்று சின்னமூதக்கேட்டவளவில் அத் திருக்கோயிலை அலங்கரித்து அவரை எதிர்கொள்ள ஏற்பாடுசெய்து முன்னோடிச்சென்று அவரது முத்துச் சிவிகையின்முன் தாழ்ந்திறைஞ்சினன். பிள்ளையார் கட்டளைப்படி எழுந்து அவரை அழைத்துக்கொண்டு வீதியினைக் கடந்து திருக்கோயிலுட் புகுந்தபோது சந்நிதியில் அவன் மகள் உணர்விழந்து நிலத்திற் கிடந்ததைக் கண்ட, நாயனார், இஃதென்னவென்று வினவ, அவன் அவளது நோயினை எடுத்துரைத்தான். உடனே, ஞானவள்ளலார் அருள்கூர்ந்து 'மணிவளர் கண்டரோ மங்கையை வாட மயல் செய்வதோ இவர் மாண்பே' என்ற முடிபுடைய நோய் தீர்க்குஞ் செந்தமிழ்ப்பதிகத்தைப் பாடினார். உடனே அப்பெண்மணி நோய்நீங்கி எழுந்து தந்தை மருங்கே நின்றாள். கொல்லிமழவனும் அக்கன்னியுஞ் சண்பைமன்னரது திருவடியில் வீழ்ந்திறைஞ்சினர். அன்பர்கள் யாவரும் பெருமுழக்கஞ் செய்தனர். பின்னர்

அங்கு நின்றும் போந்து திருப்பைஞ்ஞீலி, ஈங்கோய்மலை முதலிய பதிகளை வணங்கிப் பிள்ளையார் கொங்கு நாட்டிற்கு எழுந்தருளினர்.

திருஞானசம்பந்தப் பெருமானுக்கு உபநயனச் சடங்கு கட்டாயமில்லையாயினும் தங்கள் சமய வழக்கங்களைக் கைவிடாத திண்மையுடைய மறையவர்கள் இறைவனது திருவருள்பெற்ற பெரியார்க்கும் உலகியலின்படி உபநயனஞ் செய்வித்து மறை நான்குந் தந்தோமென்று மொழிந்தனர் இன்னும் பிராமணர் யாவரும் பூணூலணிவதில் தவறுவதில்லை. புகலியர்கோன் அளவற்ற புனித மறைகளை அவர்கள் வியக்கும்வண்ணம் எடுத்தியம்பினர் என்றமையால் அம்மறையவர் அறியாததாய்த் தேவாரத்திற்கு மூலமாயுள்ள பண்டை மறைகள் பலவற்றை அவர் ஓதினரென்பது ஊகிக்கப்படும். அம் மறையவருடைய ஐயங்களையெல்லாம் நீக்கி உண்மை ஞானத்தைத் தோற்றுவித்தலால் நம் பரமாசிரியர், அவர்களது தியானப் பொருளென்று சிறப்பிக்கப்பட்டனர். எல்லா மந்திரங்களினுஞ் சிறப்பாகக் காயத்திரியை எடுத்துக்கூறுது, ஐந்தெழுத்தினை விதந்தோதியது கவனிக்கத்தக்கது. இக்காலத்திலே பிராமணர்கள் காயத்திரியையே எல்லாவற்றினுஞ் சிறப்பாகக் கைக்கொள்ளுகின்றார்கள். ஐந்தெழுத்து, சிவநெறியையும் வைதிக நெறியையும் ஒன்றுபடுத்துவது. இதனாலே தென்னாட்டிலே சிவவழிபாடே இரண்டிற்கும் பொதுவாய் ஆதியில் இருந்ததென்பது கருதப்படும்.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் ஒருவரையொருவர் கண்டு அளவளாவியது, அன்பரை அன்பர் காமுறுவர் என்ற உண்மையை இனிது விளக்குகின்றது.

புகலியர்கோன் அப்பரடிகளை எதிர்கொள்ளக் கிடைத்தது நற்றவப்பயனென்று கருதியதும், அவருடைய திருவேடத்தைத் தூரத்தே தோன்றியபோதே தொழுததும் 'நேயமலிந்தவர் வேடத்தினை அரனெனச் சிவஞானிகள் தொழுவர்' என்ற சிவஞானபோதப் பன்னிரண்டாஞ் சூத்திரக் கருத்துக்கு எடுத்துக்காட்டாதல் காண்க.

திருநாவுக்கரசரது திருவேடத்தைப் பின்வரும் பாட்டில் ஆசிரியர் சேக்கிழார் இனிது எடுத்தியம்பியுள்ளார். அது,

சிந்தையிடை அறாஅன்புந் திருமேனி தனிலசைவும்
கந்தைமிசை யாங்கருத்துங் கையுழவா ரப்படையும்
வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற்பொலி திருநீறும்
அந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய
(சம்பந்தர் புராணம் - உஎ0)

என்பது.

திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசரைச் சீர்காழியில் வரவேற்றவுடன் முதலிலே திருக்கோயிலுக்கே அவரை அழைத்துச்சென்றனர், அஃது தம் ஞானத் தந்தையாரது வீடாதலால். பின்னர்த் தமது திருமாளிகைக்கு அவரை அழைத்துச்சென்றதும், அங்கே அவருக்குத் திருவமுது செய்வித்து விருந்தோம்பியதும், அங்கே அவர் தங்கிய நாட்களிலெல்லாம் அவருடனுறைந்து அளவளாவியதும், அவர் புறப்பட்டகாலை அவரோடு திருக்கோலக்காவரை உடன்சென்று பிரிந்ததும், இருவருக்குமிருந்த அளவற்ற நட்பின் செம்மையைக் காட்டும். திருஞானசம்பந்தர் பாடிய மாலைமாற்று முதலிய பாவினங்கட்கு அவருடைய தேவாரப்பதிகங்களே இன்றும் மூல இலக்கியமாகக் காணப்படுகின்றது. பிற தேவாரங்களுள் இவை காணப்படுமாறில்லை. சிவபாதவிருதயர் பிறப்புப்பற்றித் தாதையாராதலால் அவரை நம் நாயனார்க்குத் 'தங்குலத்தாதையர்' என்று ஆசிரியர் சேக்கிழார் கூறுவாராயினர்.

அந்தணர் மரபிலே வேள்வியைப் பெரிதாகப் பாராட்டுவது வழக்கமாதலின், சிவபாதவிருதயர் இருமைக்கு மின்பமளிக்கும் யாகஞ் செய்யவேண்டுமென்றார். ஆதலாலவர் வீடுபேற்றை நல்குஞ் சிவநெறியினை நேராகக் கைப்பற்றினவராகத் தோன்றவில்லை. ஆதலாலவருக்கு விடைமேல் எழுந்தருளிய பெருமான் காட்சி கொடுத்தருளிற்றிலர் போலும்! அல்லது அவர் சோமாசிமாறநாயனாரைப் போலப் பயன்கருதாது வேள்வி முயன்றிருத்தலுங்கூடும்.

கொல்லி மழவனுடைய புதல்விக்கு முயலகன் நோயைத் தீர்த்தது அடிகளுடைய பெருங்கருணைத் திறத்தினைக்காட்டும். அவனுடைய வேண்டுகோளுக்கிரங்கியே அந்த அற்புதம் செய்யப்பட்டது.

எவ்வுயிர்க்குந் தண்ணருள் பூண்டொழுகும் சிவஞானிகளது அந்தண்மைக்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாகும்.



## கூ. முத்துப்பந்தர் பெறல், வணிகன் விடந்தீர்த்தல்

திருஞானசம்பந்தர் கொங்குநாட்டிலுள்ள பல திருப்பதிகளையும் வணங்கிப்பாடிக் கொடிமாடச் செங்குன்றூரை யடைந்தனர். அங்கே அன்பரெல்லாராலும் எதிர்கொள்ளப் பெற்றுத் திருக்கோயிலுட்சென்று பரமரைத் தொழுது செந்தமிழ் மாலைகள் சாத்தினர். அங்குறையுமநாளில் திருநணாவிற்குஞ் சென்று கடவுளைத் தொழுதனர். அக்காலத்தில் அந்நாட்டிலே பனிமிகுந்து பிள்ளையாரது அடியாருக்குக் காய்ச்சல் ஏற்பட்டது.

அதனைத் தீர்க்கும்வண்ணம் திருநீலகண்டத்தைச் சிறப்பித்து, 'அவ்வினைக்கிவ்வினை' என்று தொடங்குந் திருப்பதிகம் பாடினர். அதனால் அப்பதியிலும் அந்நாட்டிலும் வாழ்பவர்கள் அனைவரையும் பனிப்பிணி விட்டகன்றது.

பின்னர், அடிகள், திருப்பாண்டிக் கொடுமுடி, திருவெஞ்சமாக்கூடல் முதலிய பதிகளை வணங்கிப்பாடிக் கீழ்த்திசைக்குப் புறப்பட்டார். கருவூர்த்திருவானிலைக் கோயிலைத் தொழுது பாடி, மாணிக்கவெற்பு முதலிய இடங்களை வணங்கிக் காவிரியின் தென்கரையிலுள்ள தலங்களைப் பணியச்சென்றனர். பின், திருப்பராய்த்துறை, திருவாலந்துறை, திருச்செந்துறை, திருக்கற்குடி முதலிய தலங்களை வணங்கித் திருமூக்கீச்சரம் பணிந்து, திருச்சிராப்பள்ளி யணைந்தனர். அங்கே செந்தமிழ்ப்பதிகம் பாடியபின் திருவானைக்காவையடைந்து அங்கு வீற்றிருக்கும் பெருமானை வணங்கிப் பாடிய பதிகத்திற் கோச்செங்கட் சோழனுடைய அடிமைத்திறத்தை வியந்தனர். ஒரு பதிகத்தில் திருமயேந்திரத்தையுந் திருவாரூரையுந் திருக்கயிலையையுஞ் சிறப்பித்துக் கூறினர். தவத்துறை, திருப்பாற்றுறை, திருஎறும்பியூர் முதலிய தலங்களை வணங்கித் திருநெடுங்களம் அடைந்தனர். அங்கு வீற்றிருக்கும் பெருமானைத்

தொழுதபின்பு திருக்காட்டுப்பள்ளியைத் தொழச் சென்றார். பின்னர்த் திருவாலம்பொழில், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர் வீரட்டம் முதலிய தலங்களைப் பணிந்து பாடினர். திருச்சோற்றுத்துறையை அடைந்து சிவபெருமானை வணங்கி வண்டமிழ்மாலை பாடி, திருவேதிகுடி, திருவெண்ணில், திருச்சக்கரப்பள்ளி, திருச்சேய்ஞலூர், திருப்பாலைத்துறை, திருநல்லூர், திருக்கருகாவூர், அவளிவணல்லூர், திருப்பரிதிநியமம், திருப்பூவனூர், திருப்பசுபதீச்சரம், திருவலஞ்சுழி முதலிய தலங்களை வணங்கிப் பதிகமிசைத்தனர்.

நம் பரமாசிரியர் திருவலஞ்சுழியிற் றங்கியகாலை முதுவேனிற்காலம் வந்தது. திருஆறைமேற்றளி, திருச்சத்திமுற்றம் என்னுந் தலங்களைத் தொழுது திருப்பட்டீச்சரத்துக்குச் செல்லுங்கால் ஒரு சிவபூதம் ஓர் முத்துப்பந்தரைக் கொணர்ந்து நிழற்றியது. தன்னைப் பட்டீசர் அனுப்பியதாக அது கூறிற்று. அதுவும் இறைவர் திருவருள என்று நம் நாயனர் பாராட்டி நிலமிசை வீழ்ந்து வணங்கினர். முத்துப்பந்தரின் கால்களைப் பரிசனங்கள கைக்கொண்டார்கள்.

இமையவரும் முனிவரும் பொழிந்த மலர்களால் அப்பந்தர் பூம்பந்தர் போலாயிற்று. திருத்தொண்டர் குழாம் முழக்கஞ்செய்ய மறைகளின் ஒலி நிறைந்தோங்கப் பிள்ளையார் முத்துப்பந்தரின்கீழ்க் கூத்தப்பெருமான் திருவடி நீழலில் அமர்ந்ததுபோல அமர்ந்து சென்றார். திருவருளைப் போற்றிக்கொண்டு திருப்பட்டீச்சரம் அணைந்து அங்கு வீற்றிருக்குஞ் சிவபெருமானை வழிபட்டுச் செந்தமிழ்ப் பதிகம் பாடிப் பெருங்காதலுடன் புறம்போந்து அப்பதியிலமர்ந்தனர்.

அங்குறையுநாளில் திருவாறைவடதளியையும் இரும்பூளை என்னுந் தலத்தையும் இறைஞ்சினர். பின் அரதைப் பெரும்பாழி, திருச்சேறை, திருநாலூர், குடவாயில், திருநரையூர், திருப்புத்தூர் முதலிய தலங்களை வணங்கினர்.

திருக்குடமூக்கு, திருக்கீழ்க்கோட்டம், திருக்காரோணம், திருநாகேச்சரம் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருவிடைமருதூரை யடைந்தனர். அத் திருப்பதியிற் கடவுளை வணங்கி 'ஓடேகலன்' என்னும் இன்னிசைத் திருப்பதிகம் பாடினர். திருக்குரங்காடுதுறையைத் தொழுதுபாடித் திருவாவடுதுறையை அடைந்தனர். அப்பதியில் தங்கியிருக்குங் காலத்தில் பிள்ளையாரது தந்தையார் வேள்வி செய்தற்குரிய காலம் வந்ததென்று தெரிவித்து அரும்பொருள் வேண்டுமென்று கூறினர். பிள்ளையார் அதற்கிசைந்து நம்பர் திருமுன்சென்று 'இடரினுந் தளரினும்' எனுந் திருப்பதிகம் பாடினர். அப்போது இறைவனுடைய திருவருளால் ஒரு பூதம் ஆயிரம் பொன்னடங்கிய துணிமுடிப்பைப் பீடத்திற் கொணர்ந்து வைத்தது. பிள்ளையார் அதனைக் கண்டு இப்பொன் உலவாக்கிழி சிவபெருமான் தந்ததென்று தாதையார்க்குத் தெரிவித்து அதனை எடுத்து அவரிடங் கொடுத்துப் பண்டை மறை விதிப்படி பரமசிவனையே கருதி அவரும் சீர்காழியிலுள்ள பிற வேதியரும் வேள்வி செய்யச்செய்யப் பொன் மிகுமென்று கூறியருளினர். அவ்வாறே செய்யக் கருதிச் சிவபாத விருதயர் விடைபெற்றுச் சென்றனர்.

பின்னர்ப் பிள்ளையார் திருக்கோழம்பம், வைகன்மாடக்கோயில், திருநல்லம், திருவழுந்தூர், திருத்துருத்தி, திருமூவலூர், திருமயிலாடுதுறை, திருவிளநகர், திருப்பறியலூர், திருவீரட்டம், திருவேட்டக்குடி முதலிய தலங்களை வணங்கிப் பாடித் திருத்தருமபுரஞ் சேர்ந்தனர். அவ்வூரானது திருநீலகண்ட யாழ்ப்பாணரின் தாயாருடைய பிறப்பிடமாயிருந்தமையால், அவர் சுற்றத்தார் யாவரும் வந்து நாயனாரைத் தொழுது வாழ்த்தினர். பாணர் தாம் யாழினாலே இசைத் தொண்டியற்றும் பேறு பெற்றதை அவர்களுக்குரைத்தனர். அவர்கள் அதனைக் கேட்டுத் திருப்பதிகத்தினை யாழிலிட்டுத் தக்கமுறையில் வாசிப்பதினாலே உலகமெங்கும் அதன் இசை பரவுதலாயிற்றென்றனர். அதனைக்கேட்ட பெரும்பாணர், ஞானசம்பந்தப்

பெருமானைப் பணிந்து திருப்பதிகத்தின் இசை, அளவிலடங்காத் தன்மையதென்று, தம் சுற்றத்தாரும், ஏனையோரும் அறிந்துய்யுமாறு ஒரு திருப்பதிகம் பாடியருளுமாறு வேண்டினர். அவ்வாறே புகலியர்கோனும் மனிதர் கண்டத்திலுங் கருவியிலும் அடங்காதவண்ணம் 'மாதர் மடப்பிடி' என்னுந் திருப்பதிகத்தைத் திருவாய் மலர்ந்தருளினர். அப்போது பாணனார் தமது கையிலிருந்த யாழில் அத் திருப்பதிகத்திசையை அமைத்துப் பாடத் தொடங்கி, அஃது அமையாமை கண்டு, அச்சமும் பரிவுமுற்றுப் பிள்ளையார் திருவடிகளை வணங்கி இக்கருவியை யான் தொடுவதினாலன்றோ, இத்திருப்பதிகத்திசையை இதில் ஏற்கத் தொடங்கினேன். ஆதலால் இக்கருவியை ஒழித்திடுவதே நலமென்று, அதனை எறிதற்கு ஓங்குதலும், பிள்ளையார் அதனைத் தடுத்தருளி அதனைத் தங் கையில் வாங்கிக்கொண்டு, ஐயரே! மாதொருபாகனாரது திருவருளின் பெருமை யாவும், இக்கருவியினில் அளவுபடுமோ? (அளவுபடாது). நம்முடைய தகுதிக்கேற்பவும், உலகத்தாருக்கு அறிவுறுத்தற்பொருட்டும் கருவியளவில் எத்துணை வாசித்தல் கூடுமோ அத்துணை திருப்பதிகத்திசையை யமைத்துப் பாடுதல் தக்கதே. ஆதலின் அதனில் அமைந்த அளவு இசைபாடுவீராகவென்று கட்டளையிட்டு யாழினை அவரிடம் திரும்பக் கொடுத்தருளினர். திருநீலகண்டயாழ்ப்பாணரும் அவ்வாறே முன்போல இசைத் தொண்டினை மேற்கொண்டனர். பின்னர் கவுணியர் தலைவர் அத்திருப்பதியில் சிலநாள் தங்கிப் பிறபதிகளை வணங்கப் புறப்பட்டுத் திருநள்ளாற்றினை யடைந்து அளவற்ற பேரன்போடு, 'போகமார்த்த பூண்முலையாள்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினர்.

அப்பதிகத்தைப் பாணனார் இன்னிசையோடு யாழிலிட்டு வாசிக்கப் பிள்ளையார் திருத்தாளத்துடன் பாட, யாவருங் கேட்டுப் பெருமகிழ்வெய்தினர். அங்கு நின்று போந்து திருச்சாத்தமங்கையை யடைந்து, திருநீலநக்க நாயனாரால் மிகவுஞ் சிறப்பாக எதிர்கொள்ளப்பெற்று

அயவந்தியின்கண் அமர்ந்தருளுஞ் சிவபெருமானை வணங்கிப் பாடி அவர் மனையில் விருந்தேற்று வீற்றிருந்தனர்.

திருநீலநக்கரது பெருமையைத் தமது திருப்பதிகத்தில் நம் நாயனார் விதந்தோதினர். பின்னர் அத்தலம் நீங்கித் திருக்காரோணத்திற்குச் சென்று சொற்றமிழ் மாலைகள் பாடினர். அப்பால், கீழ்வேளூர்ப் பெருமான் கழல் வணங்கிச் சென்று, திருச்செங்காட்டங்குடியை யடைந்தனர். அங்கே சிறுத்தொண்ட நாயனாரால் எதிர்கொள்ளப்பெற்று, அவருடன் அளவளாவிக் கணபதீச்சரத்தினுறையுங் கடவுளைத் தொழுது தமது திருப்பதிகத்தில் சிறுத்தொண்டர் பெருமையை விளக்கியருளினர். அவரது மனையில் அமர்ந்தருளி, அன்பருடன் இருக்குநாளில், திருமருகலுக்குச் சென்று பரமரைப் பணிந்து செந்தமிழ்ப் பாமாலை சாத்தினர்.

அக்காலத்திலே, ஒரு வணிகன் ஒரு கன்னியை உடனழைத்துக்கொண்டு, திருக்கோயிலின் ஒருபுறத்திலிருந்த மடத்தில் ஓர் இரவு தங்கித் தூங்கும்போது அரவு தீண்டப்பெற்று மடிந்தனன். அதனைக் கண்டு துயரக் கடலிலாழ்ந்த இளங்கன்னி ஆதரவு யாதுமின்றிச் சோர்ந்தனள். சோர்ந்து அவள் பின்வருமாறு புலம்பினள்.

அன்னையையும் அத்தனையும் பிரிந்து நின்னை
யடைவாக வுடன்போந்தே னரவால் வீடி
யென்னையுமிங் கிட்டகன்றா யானென் செய்கே
னிவ்விடுக்கண் தீர்க்கின்றார் யாரு மில்லை
மன்னியசீர் வணிகர்குல மணியே யானும்
வாழேனென் றென்றயர்வாள் மதியி னாலே
சென்னியிளம் பிறையணிவார் கோயில் வாயில்
திசைநோக்கிக் கைதொழுவாள் செயலொன் றில்லாள்.

அடியாரா மிமையவர்தங் கூட்ட முய்ய
அலைகடல்வாய் நஞ்சுண்ட அமுதே செங்கண்
நெடியானும் நான்முகனுங் காணக் கோல
நீலவிட அரவணிந்த நிலமா வெந்து

பொடியான காமனுயி ரிரதி வேண்டப்
புரந்தளித்த புண்ணியனே பொங்கா வாசக்
கடியாரு மலாசசோலை மருங்கு சூழுங்
கவின்மருகற் பெருமானே காவா யென்றும்.

வந்தடைந்த சிறுமறையோன் உயிர்மேற் சீறி
வருங்காலன பெருங்கால வலயம் போலுஞ்
செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரிய கோலஞ்
சிதைந்துருள உதைந்தருளுஞ் செய்யதாளா
இந்தவிடக் கொடுவேக நீங்கு மாறும்
யானிடுக்கட் குழியினறு மேறு மாறும்
அந்திமதிக் குழவிவளா செய்ய வேணி
அணிமருகற் பெருமானே அருளா யென்றும்.
(சம்பந்தர் புராணம் - சஎரு, சஎசு, சஎஎ)

வணிகர் குலமணியே, தாயையுந் தந்தையையும் பிரிந்து நீயே தஞ்சமென்று உடன்வந்தேன். நீயும் பாம்பின்வாய்ப் பட்டு என்னை இங்கே தனியேவிட்டு அகன்றனை. யான் என் செய்வது? இத்துயரத்தைத் தீர்ப்பார் யாருமில்லையே. இனி யானும் உயிர்தரியேன் என்றுகூறி அயர்ந்து திருக்கோயிற்றிசையை நோக்கித் தொழுது, செய்வதொன்றும் அறியாது செப்புவாள். அடியவர்களாகிய வானவர்கள் உய்யும்பொருட்டுத் திருப்பாற்கடலில் எழுந்த நஞ்சினை அமுதுசெய்த கடவுளே! அரி அயனறியா நீலகண்டரே! மன்மதன் உயிரை அவன் மனைவி வேண்டக் கருணைகூர்ந்தளித்த புண்ணிய முதல்வரே! திருமருகற் பெருமானே! என்னைக் காப்பாற்றும். மார்க்கண்டன் உயிரை வௌவ வந்த காலனை உதைத்த கடவுளே, இந்த வணிகனது கொடுவிடத்தினின்று நீங்கும் வண்ணமும, யான் துன்பக் கடலிலிருந்து கரையேறும் வண்ணமும், அருள் செய்வீராக என்று அக்கன்னி அழுதனள். இவ்வாறு புலம்பித் திருவருளை வேண்டும் இளங்கொடியின் அழுகைக் குரலானது, திருக்கோயிலுக்கு எழுந்தருளிச்சென்ற புகலிமன்னரது திருச்செவியிற் புக்கது. உடனே, அவள் இருந்த திருமடத்தைச் சார்ந்து அவளை நோக்கி அஞ்சாதே நினது

இடுக்கண் யாதென்று பகர்வாயெனப் பணித்தருள அவள் அவரது திருவடியில் வீழ்ந்து, கண்ணருவி சொரிந்து கூறுவாள்: வைப்பூரிலுள்ள தாமன் என்னும் வணிகன் எனக்குத் தந்தை, அவனது மருமகன் இவன், அவனுக்கு ஏழு பெண்மக்கள், அவருள் என்னை ஒழிய ஏனைய அறுவரையும் ஊதியத்தின்பொருட்டு அயலார்க்கே அவன் கொடுத்தனன். அதனால் தளர்வெய்திய இவனைக் கருதி யான் மறைந்து இவனுடன் வெளிப்போநதேன். இவனும பாம்பு கடித்திறந்தான். கடல்நடுவில் மரக்கலங்கவிழத் துன்புறுவாரது நிலையை யான் அடைந்தேன். என் துயரம் நீங்கும்படி நீர் என் உறவினராக வந்தருளினீர் என்றனள். உடனே காழிவேந்தர், அவன் நஞ்சு தீருமாறு திருமருகற் பெருமானைப் பாடலுற்றனர்.

சடையானை எவ்வுயிர்க்குந் தாயா னானைச்
சங்கரனைச் சசிகண்ட மவுலி யானை
விடையானை வேதியனை வெண்ணீற் றானை
விரவாதார் புரமூன்று மெரியச் செற்ற
படையானைப் பங்கயத்து மேவி னானும்
பாம்பணையில் துயின்றானும் பரவுங் கோல
முடையானை யுடையானே தகுமோ இந்த
ஒள்ளிழையா ளுண்மெலிவென் றுரைத்துப் பாட.

(சம்பந்தர் புராணம் - சஅ௨)

அங்ஙனம் பாடியவளவில் வணிகனும் விடம்நீங்கி எழுந்துநின்றான். திருத்தொண்டர் குழாங்கள் மகிழ்ச்சியினால் முழக்கஞ் செய்தன. வணிகன் நங்கையொடு பிள்ளையாரது திருவடியில் தாழ்ந்திறைஞ்சினன். அவர்கள் இருவர்க்கும் மணவாழ்க்கை யருளி, அவ்விருவர்க்கும் விடைகொடுத்துவிட்டு, ஞானசம்பந்தப்பெருமான் திருமருகலில் தங்கியிருக்கும்போது, சிறுத்தொண்டர் மீண்டும செங்காட்டங்குடிக்கு எழுந்தருளும்படி அவரை வேண்டினர். அப்போது திருக்கோயிலுக்குச் சென்று பலமுறை இறைவரை வணங்கியகாலை அவர் கணபதீச்சரத்தில் வீற்றிருக்குந் தமது திருக்கோலக் காட்சியைக் காட்டினர். உடனே

'அங்கமும் வேதமும்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளிக் கணபதீச்சரஞ்சென்று கடவுளை வணங்கி அங்குச் சிலநாள் தங்கி, சிறுத்தொண்டரிடம் விடைபெற்றுக் கொண்டு, பல பதிகளையும் பணிந்து திருப்புகலூருக்குச் சென்றனர்.

திருக்கொடிமாடச் செங்குன்றூரில் அமர்ந்திருந்த காலையில், தம் பரிசனங்கட்கு வந்த குளிர்ப்பிணியைத் திருநீலகண்டத் திருப்பதிகம்பாடி ஒழித்தமையால் அச் சுரநோயானது நச்சுத் தன்மையுடையதாய் நோய் கண்டவரைக் கொல்லும் இயல்பிற்று என்பது ஊகிக்கப்படும். திருநீலகண்ட மந்திரமானது நச்சுநோய்க்குப் பெருமருந்தாதலின், இன்றும் அத் திருப்பதிகத்தை ஓதுவார் விடநோயால்வந்த இடர்நீங்கி இன்புறுவரென்பது அறியற்பாற்று. 'நல்லாரொருவருளரேல் அவர்பொருட் டெல்லார்க்கும் பெய்யுமழை' என்றவண்ணம ஞானசம்பந்தப் பெருமானது திருவருட் பேற்றினாலே, அந்நாடு முழுவதும் அப் பனிப்பிணி தீர்ந்தொழிதலாயிற்று. இதுவும் அப் பெருந்தகையாரது பேரிரக்கத்தை வற்புறுத்தும்.

ஞானசம்பந்தப் பெருமான் தொண்டர்களோடு அளவளாவி, அவர்களை வினவுமுகத்தான், கடவுளது பெருமையை விரித்துரைத்தமை, திருக்கண்டியூர் வீரட்டப் பதிகத்துட் காணப்படும். "சிரிப்பார், களிப்பார், தேனிப்பார், திரண்டு திரண்டு உன் திருவார்த்தை விரிப்பார்" என்னுந் திருப்பாட்டினுட் போந்த ஞானிகளது செயலுக்கு இஃதோர் எடுத்துக்காட்டாதல் காண்க.

வினவி யெடுத்த திருப்பதிக
 மேவு திருக்கடைக் காப்புத்தன்னில்
அனைய வினைவரி யோன்செயலை
 அடியாரைக் கேட்டு மகிழ்ந்த தன்மை
புனைவுறு பாடலிற் போற்றிசெய்து
 போந்து புகலிக் கவுணியனார்
துனைபுனற் பொன்னித் திரைவலங்கொள்
 சோற்றுந் துறைதொழச் சென்றடைவார்.

(சம்பந்தர் புராணம் - நடுரு)

முதுவேனிற் காலத்திலே வெய்யிலின் வெப்பந் தணித்தற்பொருட்டு, திருப்பட்டீச்சரநாதர் முத்தமிழ் விரகர்க்கும், அவருடன்வந்த அடியார்க்கும் அருள்புரிந்தமையும், நம் நாயனார் விரும்பாமல் தானே நிகழ்ந்தது. அடியார்க்கு வேண்டுவனவற்றை இறைவன் தாமே அளித்தருளுவரென்பது முன்னமே கூறப்பட்டது. திருவருள்வழியே நிற்கும் பெரியார், முத்துப்பந்தரையுந் திருவருட்பயனாகவே கருதி மேதினியிற் பணிந்தனர். இதனால், அதனைத் தமது அரிய தவப்பயனென்று நம் நாயனார் கருதிற்றிலர் என்பது போதரும். நம் பரமாசாரியாரது தற்போத இழப்பும் யாண்டுந் திருவருளையே போற்றுஞ் சிறப்பும் ஈண்டுப் புலனாதல் காண்க. திருவருளால் வந்த முத்துப்பந்தரை ஆசிரியர் சேக்கிழார் நட்டமாடும் நம்பரது திருவடி நீழலுக்கு உவமித்ததும் இக் கருத்துப்பற்றியேயாம். திருக்குடந்தையிலே உள்ள மாமகத்துத் தீர்த்தத்தின் சிறப்பு, அக்காலத்திலும் மிக்குப் பாராட்டப்பெற்றதென்பது,

> பூமருவுங் கங்கைமுதற் புனிதமாம் பெருந்தீர்த்த
> மாமகந்தா னாடுதற்கு வந்துவழி படுங்கோயில்
> தூமருவு மலர்க்கையால் தொழுதுவலங் கொண்டணைந்து
> காமர்கெட நுதல்விழித்தார் கழல்பணிந்து களிகூர்ந்தார்.
> (சம்பந்தர் புராணம் - ௪0௯)

என்னும் பாட்டின் இரண்டடிகளால் இனிது விளங்கும்.

திருவாவடுதுறையிலே சிவபாதவிருதயர் வேள்விக்குப் பொருள் வேண்டியகாலை, நம் பரமாசிரியர், சிவபெருமானுடைய திருவடிகளே அந்தமில் பொருளாவனவென்றெழுந்தாரென்பது அத் திருப்பதிகத்துள் 'நினைகழல் தொழு தெழுவேன்' என்று ஒவ்வொரு திருப்பாட்டினுள்ளுங் குறித்தமையால் தெளியப்படும். அவர், சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு ஞானமுடையாராதலின் அவ்வாறு ஓதியருளினரென்க. தந்தைக்கு மைந்தர் உற்றுழி உதவுங் கடப்பாடும் ஈண்டுப் பெறப்படும். 'சிந்தை வேட்டதற்கு மேற்படப் பெறுவர்' என்றவண்ணம், சிவபாதவிருதயரும் விரும்பியதற்கு மிகுதியாகவே பசும்பொன்

ஞயிரம் பெற்றதோடு, பிற அந்தணர்க்கும் நல்வேள்வியின் பொருட்டு வழங்கத்தக்க நிதியனைத்தையும் அவ்வுலவாக் கிழியானது கொடுத்தது.

பிற தெய்வங்களைக் குறியாது சிவபெருமானையே கருதி ஊன் பயிலாத நல்வேளவியினையே நம பரமாசிரியர் ஆதரித்தனரென்பது,

ஆதி மாமறை விதியினு லாறுசூழ் வேணி
நாத னுரைமுன் னுகவே புரியுநல் வேள்வி
தீது நீஙகநீா செய்பவுந் தருக்கழு மலநது
வேத வேதிய ரனைவருஞ் செயயவ, மிகுமால்.
(சம்பந்தர் புராணம் - சஉக)

என்னும் பாட்டினுல் இனிது விளங்கும். பிற தெய்வங் களின்பொருட்டுச் செய்யும் வேள்வி கூறும்நூல், 'ஆதிமா மறை' அன்றென்பதூஉம், பயன் கருதாது பாவமின்றிச் செய்யும் வேள்வியே வேள்வியென்பதூஉம் இத் திருப் பாட்டினுல் தெளியக் கிடக்கின்றது.

திருத்தருமபுத்திரன்கண் திருநீலகண்ட யாழ்ப்பா ணர் திருப்பதிக இசையின் பெருமையினை உலகர்க்கு உணர்த்தவேண்டு மென்றமையால் அவர் கல்விச் செருக் கற்ற தாழ்மைமிக்க மனமுடையா ரென்பதும், திருவருட் பாடலின் இசைப்பெருமையை நுணுகி யறிந்தவரென் பதும் ஊகிக்கப்படும். திருப்பதிக இசைப்பெற்றியும், திருப்பதிகப் பொருட்பெற்றிபோல அளவுபடாத் தன்மை யது. மக்கள் தாமறிந்தவளவு இசைக்கருவியில் திருப் பதிகத்தை அமைத்துப் பாடுங் கடப்பாடுடையாரெனினும், அதன் இசைப்பெற்றியை முழுதும் அமைக்க வல்லரல்ல ரென்பது இவ் வற்புதத்தால் இனிது தெளியப்படும். இதனுலே, அருள்நாத ஒலியாகிய தேவாரத்தின் இசைத் திறனை மக்கள் அறியுமாற்றலுடைய ரல்லரென்பதும் அதனை அறிதல் சிவஞானிகளுக்கே இயலுமென்பதும் அறிக. 'சிந்தையால் அளவுபடா இசைப்பெருமை செய லளவிலெய்துமோ' வென்றதுமது. சொல்லும், பொரு

ளும் ஒருங்கியைந்து செல்லுந் தன்மையனவென்பதும், திருப்பதிகத்தின் பொருள் திருவருளின் பெருமையை அறிவுறுத்துமுகத்தால் அளவற்று விரிந்துசெல்வது போலத் திருப்பதிகத்தின் இசையும் திருவருளின் பெருமை யெலாந் தெரிவிக்கும் பான்மையதென்பதும் ஈண்டு அறியக்கிடப்பன. இங்ஙனம் இசையின்பெருமை வேறெங் கும் விளக்கப்படவில்லை. இதுகாறுங் கூறியவாற்றால் தேவாரத் திருவருட்பாடல்களின் இசைவளம், எல்லையற்ற தென்பதனை யாவரும் உய்த்துணரக் கடவர். நன்னீர்ப் பேராற்றிலுள்ள புனல் முழுவதையும் ஒரு பாத்திரத்திலே மக்களால் அடக்க முடியாதாயினும் தத்தமக்கு வேண்டிய வளவு தத்தமது கலங்களிலே எடுத்துப் பயன் றுய்த்தல் உலகவழக்கிற் காணப்படுமாறுபோல, திருப்பதிக இசை யினையும், தத்தமறிவிற்கேற்ப, தத்தம் இசைக்கருவியில் மக்கள் அமைத்துப் பாடுதல் பொருத்தமுடையதென்பதே நம் பரமாசிரியருடைய திருவுள்ளக் கருத்தென்பது ஈண்டு நனி விளக்கப்பட்டது.

திருநீலகண்ட யாழ்ப்பாணர் திருப்பதிக இசைப் பெருமையை உணர்ந்தவரே யெனினும், 'மாதர் மடப்பிடி' யென்னும் பதிகத்தின் இசைப்பெருமையை உய்த்துணர முயலாது திருப்பதிகம் பாடியவுடன் தமது வழக்கப் படியே, அதனையும் யாழிலிட்டு வாசிக்கத் தொடங்கினர். பாணர் ஞானப்பெருந்தகையார்பாற் பேரச்சமும் பேரன்பு முடையாராதலின், அங்ஙனம் வாசிக்கத் தொடங்கியதே தவறென்றும், அங்ஙனம் செய்தற்கு வாயிலாக இருந் தது தமது யாழென்றுங்கருதி அதனை ஒழிக்கப்புகுந் தனர். நிலையாமை உணர்ந்தோர் உலகப் பொருளின்கண் தங்கட்கு அவா எழுந்தகாலை அப்பொருள்களைத் துறத்தல் போலப் பாணரும் தமது யாழினைத்துறக்க முற்பட்ட னர். அவரது யாழ் இன்னிசைத் தெள்ளமுதத்தை உல கர்க்கு வழங்கும் பேருதவி புரிவதாதலின், நம் பரமா சிரியர் அதனை உடைப்பதைத் தடுத்தருளினரென்க. ஈண்டும் பாணரை ஞானபோனகர், 'ஐயர், நீர் யாழிதனை

முறிக்குமது என்' என்றது கவனிக்கத்தக்கது. பாணனார்க்கு ஊக்கந் தளராதபடி திருநள்ளாற்றிலே அவரது இன்னிசைப் பெருமையைத் தொண்டர்களுக்கு விளக்கியருளினர்.

பிள்ளையார் திருத்தாளங் கொடுபாடப்
பின்புபெரும் பாணனார்தாந்
தெள்ளமுத இன்னிசையின் தேம்பொழிதந்
திரியாழைச சிறக்க வீக்கிக்
கொள்ளவிடும் பொழுதின்கட் குவலயத்தோர்
களிகூரக் குலவு சண்பை
வள்ளலார் திருவுள்ள மகிழ்ந்துதிருத்
தொண்டருடன் மருவுங் காலை.
(சம்பந்தர் புராணம் - சஙிஅ)

என்றது காண்க.

ஞானசம்பந்தர் காலத்திலே, திருநீலநக்க நாயனார் திருச்சாத்த மங்கையில் வாழ்ந்தாரென்பதும், சிறுத்தொண்ட நாயனார் திருச்செங்காட்டங்குடியிற் சிறப்புற்றுத் திகழ்ந்தனர் என்பதும் சரித்திரத்தால அறியற்பாலது. சிறுத்தொண்டர்க்குச் சிவபெருமான் பேரருள் புரிவதன் முன்னரே அவர் சம்பந்தமூர்த்தியை வரவேற்றனர். திருமருகலில், வணிகனது விடந்தீர்த்தமை காழிவேந்தரது பேரருட் பெற்றியினையும், பிறர்பொருட்டு அவர் வேண்டுவதை இறைவர் வேண்டியவாறே உடனுடன் ஈந்தருளுஞ் சிறப்பையும் விளக்குவதாகும். பேரன்பர்க்கு இறந்து போன உயிரினை மீட்டுதல் அரியதோர் செயலன்றென்பது இவ்வற்புதத்தால் தெளியப்படும். ஆயினும், அததகைய பேரன்பர் ஞாலத்தில் இதுவரை மிகச சிலரே யாருமறியத் திகழ்ந்தனர். வேண்டுவார்க்கெல்லாம் வீடுதவுதல்போலப் போகமும் உதவும் புண்ணியர் நம் பரமாசிரியரென்பது வணிகனுக்கும், அவனுடன் போந்த இளங் கன்னிக்கும் மணம் புணரும் பெருவாழ்வு வகுத்துவிட்டாரென்பதனுல் நன்கறியப்படும்.

திருமருகலினின்றும் சிறுத்தொண்டர் வேண்டியவாறே செங்காட்டங்குடிக்குப் புகலிமன்னர் எழுந்தருளற்பாலரென்பதைப் பரமனார் தாமே கணபதீச்சரத்தின் மேவுந் தமது திருக்காட்சியினைத் திருமருகலிலே அவர்க்குக் காட்டியருளிக் குறிப்பித்தனர் போலும். இதனாற் சிறுத்தொண்டருடைய மெய்ம்மையான சிவபத்தியும், அடியார் பத்தியும் விளங்குதல் காண்க.

# எ. திருமறைக்கதவு திறந்தடைத்தல்

சண்பைமன்னர் திருப்புகலூரை அடைந்தபோது திருமுருகநாயனாரால் சிறப்பாக எதிர்கொள்ளப்பட்டார். அங்கு வீற்றிருக்குஞ் சிவபெருமானைத் தொழுது செந்தமிழ் மாலை சாத்தினர். முருகநாயனார் திருமடத்தில் தங்கியிருக்கும்பொழுது, வர்த்தமானீச்சுரஞ்சென்று வணங்கி, முருகனார் திருத்தொண்டைத் திருப்பதிகத்திற் சிறப்பித்துப் பாடினர். திருநாவுக்கரசர் திருவாரூர்ப்பெருமானை வணங்கித் திருப்புகலூருக்கு வருகின்றாரென்று கேள்விப்பட்டு ஞானசம்பந்தர் அவரை விரைந்து எதிர்கொள்வான், திருத்தொண்டர்களோடு திருப்புகலூர் எல்லைகடந்து சென்றார். இருவருங் கண்டு அளவளாவி மகிழ்ந்தகாலை புகலிமன்னர் சொல்வேந்தரைத் திருவாரூர்ச் சிறப்பினைப் பற்றி வினவ, அத்திருப்பதியில் நிகழ்ந்த திருவாதிரை நாட்சிறப்பினை, ஒரு திருப்பதிகத்தால் அவர் தெரிவித்தருளினர். உடனே சம்பந்தமூர்த்தி திருவாரூருக்குச் சென்று மீள்வேனென்று அப்பமூர்த்திக்குரைத்து மேற்சென்றார். அவ்வாறே அப்பரடிகள் திருப்புகலூருக்குச் சென்றனர். சண்பை மன்னர் பற்பல ஆயிரந் தொண்டரோடு திருவிற்குடி வீரட்டப்பெருமானைப் பணிந்து பாடித் திருவாரூர்ப் புறத்தணைந்தார். திருவாரூரின்கண் எடுக்கப்பட்ட வானளாவிய கொடிகள் ஒளிபெற்றுத் திகழ்வது கண்ட புகலிவேந்தர் 'பருக்கையானை' யென்னும் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு, திருவாரூர் எல்லை யடைந்தவுடன், முத்துச்சிவிகையினின்று மிறங்கிச் செங்கை நிறைந்த மலர்களைத் தூவித் திருஇருக்குக் குறள் திருவாய் மலர்ந்தருளிப் பணிந்தனர். அவரை எதிர்கொளவந்திறைஞ்சிய தொண்டர் குழாத்தினை வணங்கி, 'அந்தமாயுலகாதியாய்' என்று தொடங்கி 'எந்தை தானெனை ஏன்றுகொளுங்கொல்' என்னு முடிபமைத்துப் பதிக மிசைத்தார். பின்னர்த் திருக்கோயில் வாயிலை யடைந்து, தேவாசிரியன் மண்டபத்தைத் தொழுது, திருக்கோபுரம் பணிந்து, உட்சென்று புற்றிடங்கொண்டார் திருமுன்பு நில றப் பல

முறை பணிந்தார். அப்பெருமானுக்குச் செந்தமிழ்ப் பாமாலை சாத்திப் புறம்போந்து ஒரு திருமடத் தங்கினார். திருவாரூர் அரநெறி யமர்ந்த பெருமானை வழிபட்டுப் புற்றிடங் கொண்டாரைக் காலந்தோறும் பணிந்திருந்தனர். அங்குறையுநாளில் திருக்கோளிலி முதலிய பதிகளையுந் தொழுது மீண்டனர். சிலநாட் கழித்துத் திருநாவுக்கரசரைக் காணுங் கருத்துடன் திருப்புகலூருக்குச் செல்லக் கருதினர். திருவாரூரினின்றும் அகன்றபொழுது ஞான வள்ளலார் அத் திருப்பதியினையே நோக்கிப் 'பவனமாய்ச் சோடையாய்' என்னுந் திருப்பதிகம் பாடி அரிதிற் பிரிந்து சென்றார். திருப்பனையூர் முதலிய பல பதிகளையும் பணிந்து பிள்ளையார் திருப்புகலூரினைச் சார்ந்தவுடன், அப்பமூர்த்தியும், திருமுருக நாயனாரும் பிற தொண்டருடன் அவரை எதிர்கொண்டு பணிநதனர். அவர்களுடன் நம் நாயனார் திருக்கோயிலை யடைந்து திருப்பதிகம் பாடி மீண்டு முருகனார் திருமனைக்கண் அமர்ந்திருந்தனர்.

அப்போது திருநீலநக்கனாரும், சிறுத்தொண்ட நாயனாரும் அவண்சென்று தங்கினர். மெய்யன்பர் யாவரோடுங் காழிவேந்தர் அளவளாவிக் கலந்திருந்தார். 'குறி கலந்திசை' யென்னுந் திருப்பதிகமும் அப்பதியிலே பாடப் பெற்றது. பின்னர் ஞானசம்பந்தரும் அப்பமூர்த்தியும் திருப்புகலூர் நின்றும் பிற பதிகளை வணங்கப் புறப்பட்டார்கள். முருகனார் திருப்புகலூரில் இருந்தனர். சிறுத்தொண்டரும், திருநீலநக்கரும் விடைபெற்றுத் தத்தம் ஊருக்குச் சென்றனர். சம்பந்தரும் அப்பரும் புகலூரைத் தொழுது போம்போது அப்பமூர்த்தியைவிட்டு நீங்காது சம்பந்தர் முத்துச்சிவிகை பின்வரத் தாமுடன் நடந்து சென்றகாலை, சொல்வேந்தர் அவரை நோக்கி, 'சிவபெருமான் உமக்களித்த முத்துச்சிவிகையின்மேல் எழுந்தருளுவீராக' என்று கூறப் பிள்ளையாரும் 'திங்கண்முடியார் திருவருள் அவ்வாறாயின், நீர் எங்கு முன்செல்கின்றீரோ, அங்கே யானுந் தொண்டர்களுடன் வரக் கருதுகின்றேன்' என்றனர். அதற்கு அப்பமூர்த்தியும் இசைந்தனர். அப்ப

மூர்த்தி, திரு அம்பருக்குச் செல்லச் சண்பைமன்னரும் பரிசனங்களோடு அவ்வூரை யடைந்தனர். அந்நகரின் கண் மாகாளத்தில் வீற்றிருக்கும் அண்ணலாரைத் தொழுது வண்டமிழ்மாலை இசைத்தனர். காலங்கள்தோறுஞ் சிவ பெருமானை வழிபட்டு அந்நகரிற் சிலநாள் வதிந்தனர். கோச்செங்கட்சோழன் அந்நகர்த் திருக்கோயிலுக்குச் செய்த பணிவிடையைச் சிறப்பித்தனர். அங்குறையு நாளிலே, திருக்கடவூர் தொழவிரும்பிச் சொல்வேந்தரோடு அப்பதியை யடைந்தனர். அங்கே குங்கிலியக்கலய நாயனார் முதலிய அடியாரால் எதிர்கொளளப்பெற்றனர். திரு வீரட்டப் பதியிலே, காலனை உதைத்த கடவுளைத்தொழுது 'சடையுடையா' ரென்னும் இன்னிசைப் பதிகத்தைப் பாடினர். பேரன்பரிருவரும் அவ்வூரிலே குங்கிலியக்கலய நாயனாரது விருந்தேற்றனர். பின்னர்த் திருக்கடவூர்த் திருமயானமும் பணிந்து, சிலநாள் திருக்கடவூரில் அமர்ந் திருந்து, திருவாக்கூருக்குப் புறப்பட்டனர். அவ்வூர்த் தான்றோன்றிமாடத்து வீற்றிருக்கும் பெருமானைப் பணிந்துபாடி, திருமீயச்சூர், திருப்பாம்புரநகர் முதலிய தலங்களை வணங்கித் திருவீழிமிழலைக்கருகே சென்றனர். அங்கேயுள்ள அந்தணர்கள் யாவரும் மிகச் சிறப்பாக நம் நாயனாரை வரவேற்றனர். அவர் நாவின் மன்னரோடு விண்ணிழி விமானத்துறையும் அண்ணலைத்தொழுது செந் தமிழ்மாலை சந்தமிகப்பாடி, இன்பவெள்ளத்திற் றிளைத் தாடினார். திருக்கோயில் மதிற்புறத்தேயுள்ள பெருமடத் திற் சொல்வேந்தரும் அவரைச்சேர்ந்த அடியார்களுஞ் சென்று தங்கினர். திருக்கோபுரத்திற்கு வடபாலுள்ள ஒருமடத்திற் சண்பைமன்னர் தங்கியருளினர். காலங்கள் தோறுந் தப்பாமற் சிவபெருமானைத்தொழுது அங்குறையு நாளிற் புகலிமன்னர் ப்பணுபெருந்துறை, திலதைப்பதி முற்றம் என்னுந் தலங்களைப் பணிந்தனர். சீர்காழியி லுள்ள பலரும், ஞானசம்பந்தப்பெருமானைக் காணும் விருப்பத்துடன் திருவீழிமிழலைக்கு வந்தனர். வந்து புகலியர்கோனைத் தொழுது, திருக்கழுமலத்திற்குத் தங்க ளுடன் எழுந்தருளல்வேண்டுமென்று கேட்டனர். அதற்

குப் பிள்ளையார், திருவீழிமிழலை இறைவர் அருள்பெற்றுப் புறப்படுவதாகப் பதிலுரைத்தனர் திருததோணிபுரத் துறையுந் திருவடிவத்தினைத் திருவீழிமிழலையிலேயே, கடவுள் பிள்ளையார்க்குக் கனவினிற் காட்டினர். அதனை யுணர்ந்து வியப்புற்று ஞானபோனகர் சென்னிமேற் கை குவித்துத் திருக்கோயிலுட்சென்று, விண்ணிழி விமானத் தின்கண்ணே தோணிபுரத் திருக்காட்சியினைக் கண்டு களித்து 'மைம்மரு பூங்குழல்' என்னுந் திருப்பதிகம்பாடி மகிழ்ந்தனர். பின்னர்ப் புகலியினின்றுபோந்த மறை யோர்களை நோக்கிப் பிரமபுரத்துறையும் பெருமானது திருவுருவக்காட்சியினை வீழிமிழலையிலேயே கண்டுகொண்ட படியால் நீங்கள் சீர்காழிக்கு மீள்வீராக என்று பணித் தனர். அவ்வாறே அவர்கள ஏகியபின், பிள்ளையாருந் திருநாவுக்கரசரும பெருநட்போடு திருவீழிமிழலை இறை வரைத் தொழுது அவண் அமர்ந்திருந்தார்.

அக்காலத்திலே மழை சுருங்கி உணவுப்பொருள் களின் விளைவுகுன்றிக் குடிகளெல்லாரும் பசியினால் வருத்த முற்றார்கள். திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் 'சிவனடியார்க்கும், பசிப்பிணியால் துன்பம் வருமோ' வென்று கருதியிருந்தகாலை அவர்கட்குக் கனவில் திருவீழி மிழலைநாதர் தோன்றியருளி 'இப் பஞ்சகாலத்துப் பசி நோயானது, உங்களை அடையமாட்டாதெனினும் உங்க ளைச் சார்ந்துள்ள அடியவர்களது வாட்டத்தைத் தீர்க்கும் பொருட்டு, நாடோறும் ஒவ்வொரு காசு கிழக்குப்பீடத் திலும், மேற்குப் பீடத்திலும், இக்கருப்புக் கழியும்வரை வைத்தருளுவோம்' என்று உறுதிகூறினர். அவ்வாறே அவர்கள் திருக்கோயிலை வலம்வந்தகாலை, படிக்காசு கண் டெடுத்துச் சிவனடியார்கட்கு நாடோறும் பறைசாற்றித் திருவமுது செய்வித்தனர்.

இது நிகழுநாளிலே, அப்பரடிகளது திருமடத்திலே தொண்டர்கள், விரைவில் முற்படத் திருவமுது செய் வதைக்கண்டு பிள்ளையார் தமது திருமடத்திற் சமையல் முடியக் காலந்தாழ்த்தற்குக் காரணமென்னையென்று அமு

தமைப்பாரை வினவ, அவர்கள் பிள்ளையார்பெற்ற காசு வாசி தீராமையினால், வேண்டும்பொருள்களை வாங்கிவரக் காலந்தாழ்த்த தென்றனர். திருத்தொண்டினாற்றலால் அப்பர்பெருமான் வாசிதீர்ந்த காசு பெற்றாரென்று கருதிச் சிவபெருமானைத் தொழுது 'வாசி தீரவே காசு நல்குவீர்' என்னுந் திருப்பதிகம் பாடினார். அன்றுமுதற் பிள்ளையாரும் நற்காசுபெற்று அடியவர்க்குக் காலம்பெற அமுதளித்தனர். பேரன்பரிருவரும், அடியார்கட்குப் பெரு வளமிக்க விருந்தளித்தனர். பின்னர் மழைபொழிந்து பஞ்சம் நீங்கியது. சொல்வேந்தருங் காழிமன்னரும் வீழிமிழலை இறைவரருள்பெற்றுப் பிறவிடங்களை வணங்கப் புறப்பட்டனர். திருவாஞ்சியம், திருத்தலையாலங்காடு, திருச்சாத்தக்குடி, திருக்கரவீரம், திருவிளமர் முதலிய தலங்களைவணங்கித் திருவாரூருக்குச் சென்றனர். திருக்காறாயல், திருத்தேவூர், திருநெல்லிக்கா, திருக்கைச்சினம், திருத்தெங்கூர், திருக்கொள்ளிக்காடு, திருக்கோட்டூர், திருவெண்டுறை, திருத்தண்டலைநீணெறி, திருக்களர் முதலிய தலங்களைப்பணிந்து பாடித் திருமறைக்காட்டின் மருங்கணைந்தனர். அதனை அறிந்த திருமறைக்காட்டிலுள்ள யாவரும் தங்கள் ஊரை மிகவுங் கவின்பெற அணி செய்து பெரியோரிருவரையும் எதிர்கொள்ளச் சென்றனர். முதலில் திருநாவுக்கரசரையும் பின்னர்ச் சண்பை மன்னரையும் அவர்கள் எதிர்கொண்டு வணங்கினர். சண்பைமன்னர் முத்துச்சிவிகையினின்றுமிறங்கி அவர்களுடன் அளவளாவி மேற்சென்றனர் சொல்வேந்தரும் பிள்ளையாரும் திருமறைக்காட்டின் வீதியிலே ஒருங்கெழுந்தருளிய காலத்தே அடியார்களது திருநாமமுழக்கமானது கடலொலியினும் மிகுதிப்பட்டுப் பத்துத் திசையினும் பரவி விண்ணுலகத்தப்பாலுஞ் சென்றது. திருக்கோபுரத்தைத் தாழ்ந்திறைஞ்சித் திருக்கோயில் வெளிமுற்றத்தைக் கடந்து, பண்டை மறைகள் காப்பிட்டிருந்த திருவாயிலின்பாங்கர் நம் பரமாசிரியர் வந்தனர். அருமறைகள் திருக்காப்பிட்ட திருக்கதவங்கள் அவ் வருமறையோதும் பேரன்பரால் அதுவரை திறக்கப்படாமையின் பிறிதொரு

பக்கம் வாயிலமைத்து அவ்வூரார் அதன் வழியாகப்போய்க் கடவுளை வணங்குவதைக் கேட்ட புகலியர்கோன், திரு நாவுக்கரசரை நோக்கி, 'அப்பரே! திருமறைக்காட்டு இறைவரை அவர்க்கு நேராயுள்ள திருவாயிலைத் திறந்து புகுந்து நாம் வணங்கவேண்டும். அத் திருக்காப்பு நீங்குமாறு நீரே திருப்பதிகம் பாடுக' வென்றனர். அதற்கிசைந்து நாவின் மன்னர் திருப்பதிகம் பாடினர். அவர் பாடிய பாடல் பத்தும் முடிநதபின்னரும், திருக்காப்பு நீங்காமை கண்டு அவர் சிந்தைநொந்து திருக்கடைக்காப்பில் 'இரக்கமொன்றிலீர்' என்று வேண்டியவுடன் திருக்காப்பு நீங்கியது. அடியார்களெல்லாரும் பெருமகிழ்ச்சியினால் முழக்கஞ் செய்தனர். பேரன்பரிருவரும், கோயிலுட்புகுந்து, உச்சிமேற் குவித்த செங்கைகளோடு இன்பக் கண்ணீர் பொழிந்து அளவற்ற அன்பினுடன் என்பு நெக்குருக இறைவரைப் பணிந்து திருப்பதிகங்கள் பாடினர். புறம் போந்தபோது ஞானசம்பந்தர், திறந்த கதவுகளை அடைக்கும்வண்ணம் "சதுரமென்று" தொடங்குந் திருப்பதிகம் பாடினர். உடனே திருக்கதவங்கள் காப்பு நிரம்பின. அன்றுதொடங்கி அவ்வாயில் வழியாக யாவரும் போக்கு வரவு செய்வாராயினர். பெருந்தகையாரிருவரும் திருமடங்களிற் றங்கினர். சொல்வேந்தர், சண்பைமன்னர் மெய்த்தொண்டரென்றும், தமக்கு மவர்க்கும் இடையீடு பெரிதென்றுமெண்ணி, தாந் திறக்கப் பாடத்தொடங்கியது தவறென்றும் நினைந்து வருந்தித் தூங்கும்பொழுது, சிவபெருமான் தமது சிவவேடத்தை அவர்க்குக் கனவிற் காட்டி, யாம் திருவாய்மூரிலிருக்கின்றோம் அங்கே வாவென்றுகூறி மறைந்தனர். அப்பொழுதே கைகளைக் குவித்துக்கொண்டு அவர்பின் விரைந்துசென்றும், அவர் நெருங்குவார்போலத் தோன்றி, நெருங்காமை கண்டு, அவர் பிறகே சென்றனர். அதனைக்கேட்ட புகலிமன்னர் தாமும் வாய்மூருக்கு எழுந்தருளினர். அப்பொழுது அவர்க்கு உமையம்மையாருடன் சிவபெருமான் தம்முடைய திருக்கூத்துக்காட்ட, அவர் 'தளிரிளவளர்' என்னுந் திருப்பதிகம் பாடினர். பின்னர், திருநாவுக்கரசரோடு

நம் நாயனார் வாய்மூர் புகுந்து கடவுளைத் தொழுது, திருமறைக்காட்டிற்கு மீண்டனர்.

அங்கே தங்கியிருக்குங் காலத்தே, பாண்டிநாட்டிலே, சமணரால் விளைந்த தீமையைக் கேள்வியுற்றனர். பாண்டியவரசன், தான் முன்செய்த தீவினைப்பயனால், சமணசமயத்தை மெய்ச்சமயமென்று கருதி அச்சமயம் புக்கு, அச்சமயத் தலைவர்க்குத் துணையாய் நின்றதனாலே அவர் நாட்டிலே சிவநெறியும் வேதநெறியும் வலிகுன்றின. ஆண்டுள்ள ஊர்களிலெல்லாஞ் சமணர்களுடைய பள்ளிகளே மிகுந்தன. பீலியுங் கமண்டலமுந் தாங்கிப் பாயுடுத்து, முக்குடை யெடுத்துத் தலைமயிரைப் பறித்துக்கொண்டு, சமண முனிவர்கள் எங்குஞ் சென்று தமது சமயத்தைப் பரப்பினர். பாண்டிமாதேவியாரும், அமைச்சராகிய குலச்சிறை நாயனாரும் ஆகிய இருவருமே சைவசமயத்தைப் பாதுகாத்தனர். அவர்களுந் தங்கள் நிலையை அரசனுக்குப் புலப்படுத்தவில்லை. புகலிவேந்தர் வைதிகநெறியையும் சைவநெறியையும் நிலைநாட்டி வருவதையுந் திருமறைக் காட்டில் அவர் தங்கியிருப்பதையும் அவர்கள் கேள்விப் பட்டனர். கேட்டவுடனே மிகவும் ஊக்கமும் மகிழ்ச்சியு முடையவர்களாய், அவரது திருவடியைப் பணிந்தவர்கள் போல் முகமலர்ச்சியெய்தித் தம் ஏவலாளரைப் புகலி மன்னர் திருவடியைப்பணியுமாறு திருமறைக்காட்டிற்கு அனுப்பினர். அவர்கள், நாடுங்காடும் நதிகளுங்கடந்து போய்த் திருமறைக்காடு சேர்ந்து, ஞானசம்பந்தப்பெருமான் வைகும் பெருமடத்தை யடைந்து, தாங்கள் வந்தசெய்தியை வாயில்காப்பார்க்குக் கூறினர். அவர்கள், அதனை உட்சென்று தெரிவிக்கவும், அவர்களை அழைக்கும்படி நம் நாயனார் விடைகொடுத்தனர். அவர்கள் அவ்வாறே சம்பந்தமூர்த்தி பக்கஞ்சென்று வணங்கித் தாழ்ந்திறைஞ்சி நின்றனர். அவர்களை நோக்கிப் பிள்ளையார் பாண்டிமாதேவியாருங் குலச்சிறையாரும் நலமுற வாழ்வதைப்பற்றி வினவ, அவர்கள் கன்னிநாடு சமணரால் நிலையழிந்து பாண்டிய மன்னன் சமணர் வசப்பட்டிருப்பதை அரசியும்

அமைச்சரும் புகலிமன்னர்க்கு விண்ணப்பஞ் செய்யும்படி தங்களை அனுப்பினதாகக் கூறினர். சமணரை வென்று மறைநெறியை நிலைநாட்டி வேந்தனையுந் திருநீறணிவித்துச் சிவனடியார் திருப்பணியோங்குமபடியாகச் சுவாமிகள் திருவருள்சுரக்கவேண்டுமென்று அன்னோர் குறையிரந்தனர். அப்பொழுது பிள்ளையாரும் சொல்வேந்தரோடு, சிவபெருமானைத்தொழுது, திருக்கோபுரத்துள் இருந்து, அவருக்குப் பாண்டிநாட்டுச் செய்தியுரைத்து அவண் தாம் செல்வதாகச் சொன்னபொழுது, ஆளுடையவரசர் பிள்ளையாரை நோக்கி, 'சமணருடைய கபடத்திற்கோர் எல்லையில்லை; இப்பொழுது கோள்களுந், தீயனவாயுள்ளன; நீர் போவதற்கு யான் உடம்படேன்' என்றூர். அப்போது பிள்ளையார், சிவபெருமானது திருவடியைத் தொழுந் தங்கட்குத் தீங்கொன்றும் வராதென்று கூறி, "வேயுறு தோளி பங்கன்" என்னுந் திருப்பதிகத்தை இயம்பியருளினர். அதனைக்கேட்ட நாவின் மன்னரும புறப்படுவதற்கிசைந்து தாம் அவர்க்கு முன்பாக எழுந்தருளப் பிள்ளையார் அவரை நோக்கி, 'நீர் இந்த நாட்டிலேயே இருப்பீராக'வென்று கைகுவித்துத் தொழுது தடுத்தனர். திருநாவுக்கரசருந் தொழுது அரிதிற் பிரிந்திருந்தனர்.

பின்னர், ஞானசம்பந்தப்பெருமான் மறைக்காட்டு முதல்வரை மீண்டும் பணிந்தெழுந்து பாடிப் போற்றி விடைபெற்றுக்கொண்டு, வாகீசரோடு அளவளாவி அவர்க்கு விடைகொடுத்துவிட்டு, முத்துச்சிவிகை மருங்கணைந்தனர். சிவிகையின்மீதேறிச் சிவபெருமான் திருவடிகளைச் சென்னிமேற்கொண்ட உள்ளத்தினராய் அஞ்செழுத்தையும் ஓதிக்கொண்டு, வெண்ணீற்றெளி விளங்கும் இறைவர் திருமேனியை நெஞ்சினிற்றொழுது புறப்பட்டனர். அன்பின் கடல்முழக்கம்போலத் தொண்டரது திருநாம முழக்கம் உலகெங்கும் நிறைந்தது.

திருப்புகலூரிலே முருகநாயனர், பேரன்போடு திருத்தொண்டியற்றிஞரென்பது நம் பரமாசிரியர் அவரது சிறப்பைத் திருப்பதிகத்துள் அமைத்தமையால் இனிது விளங்

கும். திருநாவுக்கரசருந் திருஞானசம்பந்தரும் பெரு நட்பினரென்பது அவர்கள் தமமுள் அளவளாவி, ஒருவர் சென்ற பதிக்கு மற்றவரும்போய்த் தொழக்கருதி ஒருங்கு தலயாத்திரை செய்தமையாலுந் தெளியப்படும். அன்புடைய நண்பர் வாயிலாகத் தலைவர் பெருமையைக் கேட்குந் தோறும் அன்பர்களுக்கு அன்பு மிகுந்து வளர்தல் இயல்பு. நல்லுணவை விருமபுபவன் அதன் நயத்தை உண்டவனிடங் கேட்டவுடனே, தானுமதனை உண்ணவேண்டுமென்று விரைந்தெழுவதுபோலத் திருவாரூரிலுள்ள இறைவரது திருவருட்காட்சியைச் சொல்வேந்தர் வாயிலாகக் கேட்ட வளவிலேயே தாமும், அக்காட்சிப் பேரின்பத்தை நுகர வேண்டுமென்று விரைந்து, ஞானவள்ளலார் திருவாரூருக்குச் செல்வாராயினர். நண்பர் நண்பரையே காமுறுதலால் புகலிப்பிரான் திருவாரூரினின்று மீண்டு வந்து வாக்கின் மன்னவரோடு மேவுவதாகக் கூறியதும், அப்பமூர்த்தி வருகின்றாரென்று கேட்டவுடன் அப்பரை இங்கு அணையப் பெறும் பேரருள் உடையோம் என்று மொழிந்ததுமா மென்க. அப்பமூர்த்தியும், தாம் சம்பந்தரைப் பிரிந்து புகலூருக்குச் சென்றகாலை, தம்முடைய காதலைச் சம்பந்தரோடு செல்ல வைத்தாரென்பது "சொற்பெரு வேந்தரும், தோணிபுரத்தார் தோன்றல் பின் காதல் தொடரத் தாமும் பொற்புகலூர் தொழச் சென்றணைந்தார்" என்பதினாலே விளங்கும். அக்காலத்திலே, திருவாரூரானது தொண்டர் குழாங்கள் நிறைந்ததாய் அழகிய மதில்களை யுடையதாய்க் கொடிமிடைந்த மாடமாளிகைகளோடு திகழ்ந்ததாய்த் தெரிகிறது. ஆதியில் அது சோழரது அரசநகராயிருந்தது. தேவாசிரியன் என்னும் மண்டபம், திருக்கோயிலுக்கு எதிரேயுள்ளதாய்ப் பேரன்பர் யாவர்க்கும் உறைவிடமாக மதிக்கப்பட்டது போலும். ஆதலினால் திருக்கோயிலிற் புகுவதற்கு முன்னேயே, புகலிபபிரான் அதனைத் தொழு தனரென்க. 'எந்தைதான் என்னை ஏன்று கொள்ளுங் கொல்' என்று சண்பை மன்னர் இசைத்தமையால், அவரது அடிமைத்திறம் இனிது புலனாதல் காண்க. மெய்யடியார்பாற் காணப்படுந் தாழ்வெனுஞ் சீரிய தன்மை

அடியார் தலைவராகிய ஞானசம்பந்தப்பெருமானிடம் விளங்குகின்றதுபோலப் பிறர்பாற் காண்பதரிது. திருவாரூரைப் பிரியுங்காலத்திலேயும், நெஞ்சமானது அத் திருப்பதியை மறவாது தொழவேண்டுமென்று நம் நாயனார் கருதினார். மறவாது தொழுமியல்பு தமக்கிருந்தும் இவ்வாறு நெஞ்சிற்குக் கூறியது பேரன்பினால் விளைந்த பாதுகாபபுக் கவலை பற்றியாமென்க நல்லதோர் பொருள் நமது நினைவிலிருப்பினும், மறதி நமக்கியற்கையாமாதலின் அம்மறதிபற்றி நன்னினைவு மாறக்கூடாதென்று அதனைக் குறிக்கொண்டு போற்றுவது நன்மக்கள் இயல்பு. உயிரின் தன்மை ஈதென உணர்ந்து, உயிரைப்பற்றிய பாசத்தின் தன்மையினையும் நம் பரமாசிரியர் அனுபவத்திற் கண்டாராதலின் பாசம் ஒழிந்த பின்னும் உயிர் நன்னிலையில் ஒரு சிறிதும் வழுவுதல் கூடாதே யென்ற பாதுகாப்பச்சத்தால் இப்பதிகம திருவாய் மலர்ந்தருளுவராயினர். இதனாலும், தாம் மன்னுயிர் வகையினரென்பது விளக்கியதாகும்; அறுபத்துமூன்று நாயன்மார்களுள் சம்பந்தர், அப்பர், முருகனார், நீலநக்கர், சிறுத்தொண்டர் என்னும் ஐவரும் திருப்புகலூரிலே ஒருங்கிருந்தமையால் அவர்கள் ஒரே காலத்தினரென்பது தெளிவு. அதே காலத்திலே திருக்கடவூரிற் குங்கிலியக்கலய நாயனாருந் திகழ்ந்தனர்.

அப்பமூர்த்தியுஞ் சம்பந்தமூர்த்தியும் திருப்புகலூரினின்றும் பிற திருப்பதிகளுக்குச செல்ல முயன்றகாலை ஞானசம்பந்தர் சிவிகையினின்று இழிநது அபபர் பெருமானோடு உடன் சென்றமை, புகலிப்பிரான் பேரடியவராகிய அப்பர் பெருமான்மாட்டு வைத்த பெருங்காதலைக் காட்டும். இருவரும் முத்துச்சிவிகையிலிருப்பதற்கு அது போதிய அளவினதாக இருந்ததாய்த் தோன்றவில்லை. ஞானசம்பந்தர் ஒருவரே அதன்கண் வீற்றிருத்தற்குத் தக்கவளவினதாய் அது சிவபெருமானால் நல்கபபெற்றது போலும். அவ்வாறன்றெனின், புகலிபபிரான் தம் நண்பராகிய அப்பரையும் உடன் இருக்கும் வண்ணம் வேண்டியிருப்பர். சிவபெருமானாலே கொடுக்கப் பெற்ற முத்துச்சிவிகையில்

அப்பமூர்த்தியும் இருத்தற்கு அவரிடத்தில் விடைபெற்றிருத்தலுங் கூடும்.

திருவருட் குறிப்பினாலே தம் முன்னை நல்வினைக் கேற்பத் தமக்கே பயன்படும்பொருட்டு அஃது அளிக்கப் பட்டதென்று தாமும் அப்பமூர்த்தியும், இனிது உணர்ந்தாராகலின், 'எண்ணில்சீர் திருநாவுக்கரச நாயனார் உமக்களித் தருள்செய்த தூய யானத்தின்மிசை யெழுந்தருளுவீர்' என்றதும், புகலி மன்னரும், 'சுடர்த் திங்கள் மேய வேணியார் அருளும் இவ்வாறெனில்' என்றதும் நிகழ்ந்தன. திருநாவுக்கரசரைப் பெரியவராகக் கருதி அவர் யாண்டுச் சென்றாரோ, ஆண்டுத் தாமும் பின்செல்வதை நம் நாயனார் கடைப்பிடித்தனர். திருமறைக்காடெய்தும்வரை அவ்வாறே அப்பமூர்த்தி பின்சென்று திருப்பதிகளைச் சேர்வாராயினர். பாண்டிநாட்டிற்குத் தாம் சமணரை வெல்வதற்குச் செல்லுங்காலையிலும், அப்பமூர்த்தி, தாம் முன்செலவதாகவே விரைந்தனர். ஆனால் சமணரால் இடுக்கண் பல முன்னமே அப்பர் பெருமானுக்கு விளைந்திருந்தமையால், அவ்விடுக்கணின் தோற்றமும், அவர்க்கு நிகழ்தல் கூடாதென்ற கருத்தால் அவரைப் பாண்டிநாட்டிற்கு நம நாயனார் அழைத்துச் செல்லவில்லை. சமணர்களால் விளையும் இடையூறுகளைத் தாமே பொறுத்துச் சைவத்தை நிலைநாட்டக் கருதினார். ஞானசம்பந்தப் பெருமானுக்கு முன்செல்வான் அப்பமூர்த்தி இயைந்ததற்குக் காரணம், தாம் வசதியாயுள்ள இடங்களுக்கு முன் சென்று, சம்பந்தமூர்த்தி வரவினைத் தெரிவித்து அவருக்கு வேண்டிய பணிவிடை செய்யக் கருதினமையாலென்க. சம்பந்தரது திருக்கூட்டத்துள் ஒருவராகவே அப்பமூர்த்தி தம்மைக் கருதினரென்பது, மேற்சரித்திரத்தில் சம்பந்த மூர்த்தியின் சிவிகையைத் தாங்குவார்களுள் ஒருவராகத் தாமும் அதைத் தாங்கினமையால் நன்கு விளங்கும். இவையெல்லாம் இருவருக்கும் இருந்த பெருநட்பின் பெருநயத்தை விளக்குவனவாகும். திருக்கடவூரில் இரண்டு தலங்கள் இருந்தனவாக அறிகின்றோம். அவை திருக்கடவூர்த் திருக்கோயிலும், திருமயானமுமாம்.

பிள்ளையார் திருவீழிமிழலையில் தங்கியபோது, சீர்காழி அந்தணர்கள் அவரை அழைத்தும், அவரைப் போகவொட்டாதபடி கடவுள் அப்பதியிலேயே சீர்காழியிலுள்ள தமது திருவடிவக் காட்சியை அருளியது அப்பதியினில் அவர் சிலநாள் வீற்றிருந்து பஞ்சத்திலடியார்களுக்கு அன்னமிடுதற் பொருட்டென்க. பேரன்பரிருவரும் ஒருவரை யொருவர் தொடர்ந்து தலந்தோறுஞ் சென்றமையாற் பஞ்சத்திற்குமுன், திருஞானசம்பந்தர் தோணிபுரஞ் செல்வாராயின், திருநாவுக்கரசருந் திருவீழிமிழலை விட்டுப் போதல் கூடும். அவ்வாறாயின் எண்ணிறந்த அடியார்கட்கு மாகேசுர பூசை திருவீழிமிழலையில் நடைபெற்றிராது. பஞ்சத்தின் கொடுமை திருவீழிமிழலையில் மிகுதியாய் இருந்திருத்தல் கூடும். பேரன்பரிருவரும் அவ்விடத்தில் அடியார்க் கமுதளிக்கும் பணிவிடையை நடத்துவதற்கு அவர்களது முன்னை நல்வினைப் பயனும் ஒரு காரணமாக இருந்திருக்கலாம். சிவனடியார் செய்யற்பாலதைச் சிவனே செய்விப்பன் என்னும் முறைபற்றிச் சிவபெருமானே நேரில் வந்து அவர்களுக்குப் படிக்காசு நல்குவதாக மொழிந்தருளினர். இவர்கள் தாமாகப் படிக்காசினை இறைவர்பால் வேண்டவில்லை. எத்தகைய கருப்பு வந்தாலும் சிவஞானிகட்கு அதனால் யாதுமோர் துன்பமில்லையென்பது 'உலகியல்பு நிகழ்ச்சியி னமைந்த தீய உறுபசிநோய் உமையடையாதெனினும்' என்று சிவபிரானே ஆளுடைய அரசர்க்கும் பிள்ளையார்க்கும் எடுத்துரைத்தமையால் இனிது விளங்கும். இடையறாது சாக்கிரத்தே அதீதநிலையில் நிற்கும் ஞானிகட்குப் பாச நீக்கத்தினாலே துன்பம் ஒழிதல் போல, அப்பாச நீக்கம்பெறாத ஏனைச் சிவநெறியினர்க்குப் பசி முதலியவற்றால் வருந்துன்பங்கள் நீங்காவென்பது,

> "உம்பால் நிலவுசிவநெறி சார்ந்தோர்
> தம்மை வாட்டம் நீக்குதற்கு"

என்றெழுந்த திருவாக்கினாற் போதரும். தொகுதியாகச் சிவபெருமான் நிதியினைப் பஞ்சகால முழுவதற்கும் பயன்

படும்படி கொடுத்து விடாமல், நாடோறும் வேண்டிய செலவிற்குத் தக்கவாறு ஒவ்வொரு காசு நல்கியது எக் காரணத்தினாலோவெனில், சிவஞானிகள் ஓடும் செம் பொன்னும் ஒக்கவே நோக்குவரென்ற வண்ணம், அவர்கள் அப்பெருநிதியினைப் பாதுகாத்தற்றொழிலை மேற்கொள்ள விரும்பார். எப்போதுஞ் சிவநினைவே மேற்கொண்ட அவர்களுக்கு, அத்தகைய கவலையினையும் இறைவர் கொடுக்க மாட்டார் போலும். தொகை நிதியினைப் பஞ்சகாலத்திற் கள்வர் முதலாயினோர் அபகரித்தலும் கூடும். அதனால் அடியார் திருப்பணி முட்டுப்படுதலுங்கூடும்.

இனித் திருஞான சம்பந்தருக்கு வாசி தீராக்காசினை யும், அப்பமூர்த்திக்கு வாசி தீர்ந்த காசினையும் இறைவர் நல்கியது, திருநாவுக்கரசர் இருவகைத் தொண்டும் (பாடற்றொண்டும் உழவாரத் தொண்டும்) நடத்தின மையாலும், அவரது முன்னை நல்வினைப் பயனுக்கேற்ப, நற்காசு பெறும்பான்மை யிருந்தமையாலும் என்க. திருஞானசம்பந்தர் முதலிலே வாசி தீர்ந்த காசுபெறும் பான்மையிலாமையினாலுமென்க. சிவஞானம் பெற்ற பிறகும் முன்னை வினைபபயன் வந்தடைதலின், அதற்குத் தக்கவாறு, பொருள்களைப் பெறுதல் நிகழும்; அதனால், சிவஞானிகட்குத் தம்மளவில் யாதொரு குறைவுமில்லை. பொற்றாளம் முத்துச்சிவிகை முதலியன, ஆளுடைய பிள்ளை யார்க்கு அமைந்தனபோல, அப்பமூர்த்திக்கு அமையாமை யும் அவரவர் முன்னை வினைப்பயன்களுக்குள்ள இடையீடு பற்றியே யென்க. சிவஞானம் பெற்ற பின்னர் முன்னை வினைப்பயனால் யாதும் விளைவதைப் பற்றிப் பேரன்பர்கள் கவலை எய்துவதில்லை. அப்பமூர்த்திகள் பெருந்துறவில் நின்றமையால் தம்பொருட்டு யாதொரு வாகனத்தையும் சிவபிரான்பால் வேண்டிற்றிலர். ஞானசம்பந்தப் பெரு மானும்,

"வாசி தீரவே காசு நல்குவீர்"

என்று பாடியருளியது, தம்பொருட்டன்று; பிற அடியார் பொருட்டேயாம், அதனாற் போந்த இழுக்கு யாதுமின்மை யுணர்க.

திருமறைக்காட்டிலே அருமறைகள் திருக்காப்பிட்ட கதவங்களைப் பிறர் திறக்க இயலாமை சுட்டப்பட்டது. அருமறைகள் தாமாகப் பூசனைபுரிதல் இயலாததோர் காரியம் அதற்குப் பொருளென்னையோவெனின், அருமறைகளில் வல்லவர்கள் பூசனைபுரிந்து, திருக்கோயிலின் வைகும் இறைவரது பேரொளியை நேரிற்றாங்குதல் பிறர்க்கரிதாதல்பற்றி, அத்திருக் கதவங்களை அடைத்திருத்தல் கூடுமென்பதே அவ்வாறன்றெனின், இறைவரது திருவடிவப் பேரொளி புறத்துப் புலனாதல் தக்கதன்றென்னும் கருத்துப்பற்றித் திருக்கதவங்கள் அடைக்கப்பட்டிருக்கலாம். விலைமிக்க அருமணியின் அருமை யறிந்தோர் அதனை அறியாத பிறர் கைப்படில், அம் மணி பாழ்படுமென்று கருதிப் பட்டுப்பெட்டியில் மூடிவைத்தல்போல, பேரறிஞர் வணங்கத்தக்க திருவடிவப் பேரொளி அதன் பெருமையறியாத பொதுமக்களாற் பழக்கம்பற்றிப் போற்றப்படாமை நேர்முகத்து நிகழாமைப் பொருட்டுத் திருக்கதவங்களைப் பண்டை மறைவாணர் அடைத்து வைத்தனர் போலும். அத் திருக்கதவங்களைத் திறத்தல் மக்களுக்கு இயல்வதாயுமிருந்திருக்கலாம், இயலாதாயுமிருந்திருக்கலாம் திருக்கதவங்கள் மந்திர வலியினாற் பிணிக்கப்பட்டிருப்பின், கருவிகள் கொண்டு, அவற்றைத் திறக்க முயன்றும், அது கைவருதல் அரிதென்பது மந்திரநூல் தெரிந்தார் யாவர்க்கு முடன்பாடாம். சிலர் திருமதில்களை இடித்துக் கதவைத் திறக்க முயன்றாலும், மந்திர வலிக்குப் பயந்த மக்கள் அதனைச் செய்யத் துணியார். அக்காலத்திலே சிவனடியார்கள் திருக்கோயிலைக் குறிக்கொண்டு பாதுகாத்தனராகலின், பத்தியில்லாதார் அக் கதவங்களைத் தவறாகத் திறப்பதற்கு அவர்கள் இடங்கொடுத்திருக்க மாட்டார்கள்.

இனி, அக்கதவங்கள் எளிதில் திறக்கத்தக்கனவாக விருந்தாலும், பண்டைப் பெரியார் யாதானும் ஒரு காரணம்பற்றி அடைத்து வைத்ததை அவர்கள் அநுமதியின்றித் திறத்தல் முறையன்றென்று பிறர் திறக்க முயலா

மலும் இருந்திருத்தல் கூடும். அருமறைகள் யாவையென்ருயுங்கால், அவை இப்பொழுது கூறப்படும் வடமொழி வேதங்களல்ல வென்பது,

"அம்மறைகளோதும் பெருகிய அன்புடை அடியார்"

என்ற சொற்ருெடர் அக் கதவங்களைத் திருவருளினல் திறந்தடைத்த செந்தமிழ்த்தொண்ட ரிருவரையும் அடக்கி நிற்பதாகலானும், அவ்விரு பேரன்பரும் வடமொழி வேதத்தைப் பாராயணஞ் செய்திற்றிலராதலாலும், தெளியப்படுமென்க. தமிழின் கண்ணே பண்டை நிறைமொழி மாந்தர் மறைகள் இயற்றினரென்பது,

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப"

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்திற்குப் பேராசிரியர் அல்லது நச்சினுர்க்கினியருரையால் இனிது விளங்கும். அச்சூத்திரத்து உரையில் 'ஈண்டு மறைமொழியென்றது தமிழ் மந்திரங்களை, அவற்றை வல்லார்வாய்க் கேட்டுணர்க' என்றது காண்க. இதனல் தமிழிலே மறையியற்றும் பெருந்திறல் வாய்ந்த மூதறிவாளரால் திருமறைக்காட்டிலுள்ள திருக்கதவங்கள் பண்டு அடைக்கப்பட்டன என்பதும், அவ்வாறே தமிழ் மறைகளோதும் சம்பந்தமூர்த்தியும் அப்பமூர்த்தியுமே, அக்கதவங்களைத் திறந்தடைக்கும் ஆற்றலுடையராய்த் திகழ்ந்தனரென்பதும் உய்த்துணர்ந்து கொள்க.

இனி அப்பமூர்த்திகள் திருப்பதிகம் பாடி முடியும் வரை, திருக்கதவங்கள் திருக்காப்பு நீங்காதிருந்தமை, ஒரு திருவிளையாட்டாகும். அது திருநாவுக்கரசு நாயனர் புராணத்துளே, 'பண்ணினேர் மொழியாளென் றெடுத்துப் பாடப் பயன் றுய்ப்பான், தெண்ணீரணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்க' என்று ஆசிரியர் சேக்கிழார் மொழிந்தருளினமையால் இனிது விளங்கும். கழறிற்றறிவார் நாயனருக்குத் திருச்சிலம்பொலி காட்டத் தாழ்த்தது அந்நாயனரது பூசைக்குற்றம் பற்றியன்றுதல்போல ஈண்டுந்

கொள்க. உயிர்களின் தன்மைகள், வெவ்வேறுதல் முடிந்த நூற்றுணிபு. சில மக்கட்குத் தாஞ்செய்யு முயற்சிக்குப் பயன் கிடைப்பது திண்ணமென்றிருந்த காலையும், பயன் பெறும்வரை அது தனக்குக் கிட்டுமோவென்று ஐயுற்று எதிர்பார்த்து நிற்றலியல்பு. அதனையறிந்த நண்பர் அவ் வையப்பாடு மிகும்பொருட்டு இகலிப் பொருதலும் உலக வழக்கிற் கண்டாம். அதுபோல அப்பமூர்த்திகள் பாடிய அளவில், திருக்கதவங்கள் திறப்பது திண்ணமேயாயினும், திறக்கும்பேறு பெறுதற்குத் தமக்குத் தகுதியுண்டோ இன்றோ என்னும் ஐயப்பாடு அந்நாயனார் திருவுள்ளத்தில் நிகழ்ந்திருத்தல்கூடும். அவ்வையப்பாடு அத்துவிதக் கலப் பிற்குச் சிறிது இடையூறுதல்பற்றி அதனை நீக்கக் கருதும் பிரானார் கதவந் திறகக்ச் சிறிதுகாலந் தாழ்த்ததும் ஒரு திருவிளையாட்டேயெனக் கொள்க. எவ்வாறாயினும் சிவ பெருமானைச் சுந்தரமூர்த்திகள்,

"தாரீரேல் உம்மை யடியெடுக்க வொட்டோம்"

என்றதுபோல அப்பமூர்த்தியும், சிவபெருமான்பால் எதனையும் வலிந்துகோடற்குப் பெரிதும் உரிமைவாய்ந்தோ ராதலின் கதவு திறக்கக் காலந் தாழ்த்தலைப் பார்த்துக் கடவுளைக் கடிவார போன்று,

"இரக்க மொன்றிலீர சரக்க விக்கதவந் திறப்பிம்மினே"

என்றருளியதும் உற்று நோக்கத்தக்கது. அங்ஙனங் கூறிய நிலை தற்போதந் காரணமாக எழுந்த ஐயப்பாடு ஒழிந்து அத்துவித உணர்ச்சியால் வரும் உறுதியைத் தலைப்பட்ட நிலையாமெனக் கொள்க. இவ்வாறே அத்துவித உறுதி நிலைக்கண் அப்பமூாத்தியை நிறுவுதற்கே திருவாய்மூரில் திருவடிவங் காட்டுதுமென்று சென்று முதற்கண் சம்பந்த மூர்த்திக்கும், பின் அப்பமூர்த்திக்குந் திருக்கூத்துக் காட்டியதூஉமாமென்க. இதனை யறியாதார், சம்பந்த மூர்த்திக்கும் அப்பமூர்த்திக்கும், இடையீடு கூறித் தவ றிழைப்பர். வாசி தீர்ந்த காசு அப்பமூர்த்திக்குக் கிடைத்த தற்காக இரு பேரன்பர்க்கும் இடையீடு கூறுவாரும் பிழை

படுபவரேயாவர். சைவச் செந்நெறிக்கு இரு கண்போன்ற சிவஞானிகளிருவர்க்கும் பேதந்தெரித்தல் சிவத்திற்குஞ் சத்திக்கும் பேதம் பாராட்டுதல் போலாமென்க. ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள் பெருந்தகையார் இருவரையும், சிவனாரது திருவருளுக்கும், அம்பிகையினது திருவருளுக்கும் ஒப்பிட்டமை காண்க.

"இருட்கடு உண்டவ ரருளும் அகிலமெல்லாம்
ஈன்றாள்தன் திருவருளு மெனவுங் கூடித்
தெருட்கலை ஞானக்கன்றும் அரசுஞ்சென்று
செஞ்சடை வானவர் கோயில் சேர்ந்தாரன்றே."

என்று மொழிந்தமை கருதத்தக்கது.

திருமறைக்காட்டிலே திருஞானசம்பந்தப் பெருமான் சமய அரசாக வீற்றிருந்தனரென்பது மிகுதியாய அடியார் குழாங்களுடன், பெரியதொரு மடத்தில், வாயில்காவலர் முதலிய பரிசனங்கள் திருத்தொண்டுசெய்ய வீற்றிருந்தமையால் இனிது விளங்கும். எதனையுஞ் சிவபெருமானது திருவருட் குறிப்பினையுணர்ந்தே நடத்துவது சிவஞானிகளின் இயல்பாமாதலின், ஆளுடைய பிள்ளையார் பாண்டிநாட்டுச் செய்தி கேட்டவுடன் திருக்கோயிலுக்குச்சென்று இறைவரைத் தொழுது மீள்வாராயினர். ஆளுடைய பிள்ளையார்க்கு ஆளுடைய அரசர், பிறர் யாவரினும் நெருங்கிய கேண்மையுடையாராதலின், பாண்டிநாட்டிற்குச் செல்வதைப்பற்றி அவருடன் கலந்துரையாடினரென்க. சிவபெருமானது திருவருளினாலே பிள்ளையார்க்குத் துன்பநுகர்ச்சி யாதும் நிகழாதென்பதே ஆளுடைய அரசர்க்குங் கருத்து. பிள்ளையார்பாற் கழிபேரன்புடையாராதலின் இடையூற்றின் தோற்றமும் அவர்க்கு இருத்தல் கூடாதென்பதே அவர் கருதுவாராயினர். அப்பொழுதைக் கோள்கள் தீயனவென்ற அப்பமூர்த்திக்கு, அவை யடியார்க்கு நல்ல நல்லவென்று தெரிக்குங் கோளறு பதிகத்தைப் பிள்ளையார் தெரித்தபின்னர் வாக்கின்மன்னர் பிள்ளையார்க்கு முற்பட்டுச்செல்ல முயன்றபோது பிள்ளை

யார் அவரைக் கும்பிட்டுத் தடுத்ததும் கழிபெரு நட்புப் பற்றியேயாமென்றுணர்க. இக் காரணம்பற்றியே, ஆசிரியர் சிவஞான முனிவர் நட்புக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இவ்விரு பேரன்பரையும் எடுத்துக்கூறியது காண்க.

"சம்பந்தர் நாவரசுபாற் கண்டோஞ் சார்ந்துவப்ப
தும்பிரிவி னுள்ளுவதுஞ் சோமேசா"

பிள்ளையார் சிவனுருடைய திருவடிகளையே தினைப்போதும் மறவாத மனமொழி மெய்களையுடையாராதலின் முத்துச்சிவிகைமீதேறிப் பாண்டிநாட்டுக்குச் சென்றகாலே, திருவுள்ளத்தில் இறைவர் திருத்தாளும், திருநாவில் ஐந்தெழுத்தும், திருமேனியில் திருவெண்ணீற்றொளியும் உடையராய் எழுந்தருளினரென்க.

---

## அ. பாண்டியநாட்டில் சமணரை வென்று சைவத்தை நிலைநாட்டுதல்

திருஞானசம்பந்தப்பெருமான், பாண்டிநாட்டிற்கு எழுந்தருளியகாலை, திருத்தொண்டர்களெல்லாரும் நாற்றிசையிலுந் துதிமுழக்கஞ் செய்தனர். மங்கல வாத்தியங்கள் பலவும் ஒலித்தன. ஆகாயத்தைத் தூர்க்கும்படி கொடிகள் எடுக்கப்பட்டன. அடியார்கள் ஒவ்வொரு தலத்திலும் மிகவுஞ் சிறப்பாக நம் பரமாசிரியரை எதிர்கொண்டனர். திரு அகத்தியான்பள்ளி, கோடிக்கரை, கடிக்குளம், திரு இடும்பாவனம், திருஉசாத்தானம் முதலிய திருப்பதிகளைப் பணிந்துசென்று, பாலைநிலத்தினையும் நெய்தல் நிலத்தினையுங் கடந்து, சோழநாட்டிற்குத் தென்மேற்குத்திசை நோக்கிப்போய், வயல்களுங் கமுகுந் தெங்கும்நிறைந்த மருதநிலவழிக்குட் புகுந்தனர்.

பின்னர் முல்லைநிலங் கடந்தருளித் தென்பாண்டி நன்னாட்டை யடைந்தனர். திருக்கொடுங்குன்றம் என்னும் பதியினைவணங்கி அருந்தமிழ்பாடி, மதுரைமூதூர் மருங்கணைந்தார். அப்போது, எட்டுமலைகளிலிருந்த சமணர்கட்குத் தீநிமித்தங்கள் தோன்றின. அமண் பள்ளிகள் மேலும் அசோகமரத்தின்மேலும் உணவுகொள்ளும் மண்டபங்கள்மேலும், ஆந்தையுங் கூகையும் பூசலிட்டு அழிவு சாற்றின. பீலியுந் தடுக்கும் பாயும் வழுவி விழுந்தமையாலும் கால்கள் தடுமாறி இடக்கண்கள் துடித்தமையாலும் மயக்கங்கொண்டு சமணர்களெல்லாரும் அச்சமுற்றார்கள். இங்ஙனந் தீக்குறிகள்கண்ட சமணர்களெல்லாரும் ஒருங்குகூடி மதுரைப்பதியினை வந்தணைந்து, அரசனிடம் தமக்கு நிகழ்ந்த தீக்கனவுகளையும் நிமித்தங்களையும் எடுத்துக்கூறினர். சிவபெருமானுடைய தொண்டர்கள் மதுரையிற் கூடியதாகவும், அரசன் தழலின்மூழ்கி எழுந்ததாகவும், இளங்கன்றொன்று தங்களை குழுவினரைச் சிதறியோடச்செய்தும், ஒருவரும் அதனைத் தடைசெய்யாது இருந்தமையும், அவர்கள் நிழலில்லாத மரங்களில் ஏறிநின்றிட்டதையுங் கனவிற் கண்டதாகக்கூறி இவைகள்

சமணமுனிவர்க்குத் தீங்குவிளைப்பது திடமே என்றுரைத்து, நொந்தமனத்தராய் உணவுங்கொள்ளாது யாது செய்வோமென்றெண்ணி இடர்ப்பட்டனர்.

அவர்கள் அவ்வாறிருக்கப் பாண்டிமாதேவியாரும் அமைச்சரும் நன்னிமித்தங்கள் கண்டு மகிழ்வெய்தினர். அப்போது அவர்கள் ஞானசம்பந்தர் வந்தணையுஞ் செய்தி கேட்டனர். அச் செய்தியை இயம்பினோர்க்கு விரும்பிய யாவுங்கொடுத்து, அளவற்ற மெய்க்காதலுடையரானார். பாண்டிமாதேவியார், குலச்சிறையாரைப் புகலிமன்னரை எதிர்கொள்ளும்படி பணித்தார். அவர் அவ்வாறே எதிர்கொள்ள விரைந்தகாலை அரசியார் திருவாலவாயமர்ந்தருளும் அண்ணலாரைத் தொழுவதாக அரசனுக்குக்கூறித் தாமுந் திருக்கோயிலுக்குச்சென்று இறைவரைத்தொழுது, ஞானபோனகரது வரவை எதிர்பார்த்து நின்றார். அந்தணர்களாகிய பெருந்தவத்தினர்கள் பல்லாயிர மறைமொழிகளை எடுத்தியம்ப, அடியவர்களது திருநாமமுழக்கம் ஆகாயத்தையும் அடக்கி மேற்செல்லச் செந்தமிழ்த் தென்றலானது எதிர்கொண்டு எவ்விடத்தும் சேவிப்ப, மண்ணுலகமும் வானுலகமுஞ்செய்த பெரும் புண்ணியத்தின் படைபோலத் தொண்டர் குழாங்கள் மிகுந்துசெல்ல அமணரால் நேர்ந்த குறையினை நீக்குதற்குத் தூய வெண்புனற் கங்கை பாண்டிநாட்டிடைப் பரந்து வந்ததுபோல அடியார் குழாத்தின் தூயவெண்ணீற்றின் பொலிவு தோன்ற, அண்டமெலாம் ஒளிபரப்பும் ஞானமணிவிளக்கு எழுந்துவந்தாற்போல நம் பரமாசாரியர் வரவுதோன்ற அவர் எழுந்தருளியகாலை, குலச்சிறையாரது செவியில் எக்காளத்தின் ஓசை அமுதம்போலப் புகுந்து நிறைந்தது. அப்போது அவர் நிலமுறப்பணிந்து அளவற்ற மகிழ்ச்சியெய்தினர். சென்னிமேற் குவித்தகரங்களோடும், நெஞ்சில் நிறைந்த ஆர்வத்தோடும் மந்திரியார் திருத்தொண்டர் குழாத்தினைக் கண்டவுடன் மீண்டும் நிலமிசைப் பணிந்து கிடந்தனர். அவர் குலச்சிறையாரென்பதை ஞானசம்பந்தப்பெருமான் கேட்டுச் சிவிகையினின்றுமிறங்கி அவர்

பால் விரைந்துசென்று தம்முடைய செங்கை மலர்களால் அவரைப் பற்றியெடுப்ப, அவரும் எழுந்து தொழுது முன் னின்றனர். அப்போது ஞானவள்ளலார் சோழமன்னரின் குலமகளாகிய பாண்டிமாதேவியார்க்குந் திருந்திய சிந்தை யுடைய உமக்கும் நம் பெருமானது திருவருள் பெருகும். சிறந்த நன்மையுங் கைவரும் என்றனர். மந்திரியார் இதனைக்கேட்டுத் தாழ்ந்திறைஞ்சிப் பின்வருமாறு விண் ணப்பித்தனர்.

சென்றகா லத்தின் பழுதிலாத் திறமும்
இனியெதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனால்
எற்றைக்குந் திருவரு ளுடையோம்
நன்றியில் நெறியில் அழுந்திய நாடு ம
நற்றமிழ் வேந்தனும் உய்ந்து
வென்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும்
மேன்மையும் படைத்தனம் என்றார்.

மங்கையர்க்கரசியார் தம்மை எதிர்கொள்ளும்படி பணித்ததை மந்திரியார் பிள்ளையார்க்குத் தெரிவித்தனர். அப்பொழுது அவர்களிருவரும் அளவளாவிச் சென்ற காலை மதுரைமூதூர் தோன்றுதலும் அங்கே திருவாலவாய் எவ்விடத்திலுள்ளதென்று மந்திரியாரைப் புகலிமன்னர் வினவினர். அவர் வணங்கிச் சோலைசூழ்ந்து வானளாவிய கொடியையுடையதாய் மேலெழுந்து தோன்றுந் திருக் கோபுரத்தினைக் காட்டித் திருவாலவாய் அது என்று இசைத்தனர். உடனே காழிவேந்தர் இருகைமலர்களையுங் குவித்துப் பேரன்போடு நிலமிசைப் பணிந்து "மங்கையர்க் கரசி" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினர். பின் னர்த் திருவாலவாயினையணைந்து திருக்கோபுரத்தினைத் தொழுது மந்திரியாருடன் திருக்கோயிலுட் சென்றனர். அங்கே சிவபெருமானைப் பன்முறைபணிந்து எட்டுறுப்பும், ஐந்துறுப்பும், நிலந்தோய வணங்கிக் கண்ணீர் ததும்ப மயிர்க்கூச்செறிப்பக் கடவுளைத் தொழுது துதித்தனர்.

"நீல மாமிடற், றால வாயிலான்"

என்னுந் திரு இருக்குக் குறளினை மொழிந்து தொண்டர்களோடு ஆனந்தக்கடலிற் றிளைத்தனர். பின்னர்ப் பெருமானுக்குத் தண்டமிழ்மாலை சாத்தித் திருமுன்றிலை அணையும்போது இறைவரைத் தொழும் விருப்போடுவந்த பாண்டிமாதேவியார், காழிமன்னர்க்கெதிர்செல்லாது ஒருபுடை ஒதுங்கிநிற்ப, மந்திரியார் ஆளுடையபிள்ளையாரின் கழல்களைவணங்கிச் சென்னிமேற் கைகுவித்துநிற்கும் பாண்டிமாதேவியாரைக் காட்டினர். அப்போது பிள்ளையார் அவர்பால் விரைந்துசென்றனர். அப்போது மங்கையர்க்கரசியார் ஞானபோனகரின் திருவடிக்கமலங்களில் வீழ்ந்து வணங்கினார். அப்போது தமது திருக்கையினால் அவரையெடுத்தருளவும், பாண்டிமாதேவியார் தமது கருத்து முற்றியதாகக் கருதிக் கண்களில் ஆநந்தக்கண்ணீர் பெருக, மொழிதடுமாற, 'யானும், என் பதியும் செய்த தவம் என்கொல்' என்றார். நம் நாயனார் அவரை நோக்கி, 'புறச் சமயத்தாராற் சுற்றப்பட்டும் திருத்தொண்டினை மேற்கொண்டுவாழும் உம்மைக் காணவந்தனம்' என்றார். அது கேட்டவுடன் மீண்டும் அரசியார் வணங்க, அவர்க்கு அருள்செய்து விடைகொடுத்துத் தொண்டரோடு மேற்சென்றகாலை, திருவாலவாயிற் பணிசெய்கின்ற அடியவர்கள், பிள்ளையாரை இறைஞ்சிச் 'சமண இருள்கெட இங்கு அடிகள் எழுந்தருளுவதற்கு எல்லையற்ற தவத்தை யாங்கள் செய்தோம் என்றிசைத்தனர். அவர்களுக்கும் அருள்செய்து புறம்போந்து அமைச்சர்காட்டிய திருமடத்திற் பரிசனத்தோடு தங்கி அரசியார் ஆணைப்படி மந்திரியார்செய்த விருந்தினை ஏற்றிருந்தனர்.

மதுரைநகரத்திலே புகலிமன்னர் அடியாருடன் வரக் கண்ட சமணர்கள் ஒருங்குகூடிப் பிள்ளையாரது திருமடத்திலே ஓதுந் திருப்பதிகத்தின் இசையைக்கேட்கப் பொறாராய் அரசனைக் காண்பான் சென்று, வாயில்காவலரை நோக்கி மன்னனிடம் தங்கள்வரவினைத் தெரிவிக்கும்படி சொல்ல, அரசன்கேட்டு அவர்களை வரும்படி அழைப்ப, அவர்களும் உட்சென்று தங்கள் மனத்துயரத்தை வேந்தன்

அறியும்படி இருந்த அளவில், நீங்கள் யாவரும் ஒருங்கு திரண்டு இங்கு வருவதற்குக் காரணமென்னையென்று வினவினன். உன்னுடைய மதுரைக்குச் சைவவேதியர் வந்தமையால் நாங்கள் 'கண்டு முட்டு' என்றனர். அரசனும் 'யான் கேட்டுமுட்டு' என்றுகூறி மனம்நொந்து அச்சிவனடியார் இந்த நகரத்திற்குவந்த காரணமென்ன? அவர்கள் யார்? என்று வினவினன்.

சோழநாட்டிலே சீர்காழிப்பதியிலே சூலபாணிபால் ஞானம் பெற்றவனென்று சொல்லப்படும் வேதியச் சிறுவன் தம்முடைய அன்பர் குழாத்தோடும் முத்துச்சிவிகையின்மீதேறி, எங்களை வாதில்வெல்ல வந்தனன் என்றுரைத்தார். அரசன்கேட்டுச் சினங்கொண்டு, யாம் யாதுசெய்வோமென்று வினவச் சினமிக்க அமணர், அம்மறைச் சிறுவன் உறைகின்ற இடத்தில் விஞ்சை மந்திரத்தினலே தீப்பற்றும்படி செய்தால் இந்த நகரத்திலே அவன் இரான் என்று கூறினர். செய்யக்கூடியது இதுவேயானல் அதனை விரைந்து செய்யுமென்று விடைகொடுத்தனுப்பிவிட்டுப் பொய்யினை மெய்யாகக்கொண்ட மன்னன் யாதும் பேசாது மனக்கவலையோடு தனது பூம்படுக்கையிற் படுத்திருந்தான். அப்போது பாண்டிமாதேவி அவண்செல்ல, அவன் யாதும் உரையாடாதிருப்ப 'என்னுயிர்க் குயிராயுள்ள தலைவ, உமக்கு நேர்ந்ததென்ன? முன்னுள்ள மகிழ்ச்சியில்லாமல், இன்று முகம் வாடியிருப்பதனல் உமது மனத்திலுள்ள துன்பம் யாது' என்று வினவினர். அதற்குத் தேவியாரை நோக்கிச், 'சீர்காழிக்கண் சிவபிரான் அருள்பெற்றவன் சமணமுனிவர்களை வாதினில்வெல்ல இங்கு வந்தனன்; திருநீறணிந்த தொண்டர்களுடம உடன்வந்தனர்; அவரையெல்லாம் பார்த்து அடிகண்மார்களெல்லாங் கண்டுமுட்டு; யானுங் கேட்டுமுட்டு; இதுதவிர வேறொன்றுமில்லை' யென்ருன். இதனைக்கேட்ட மங்கையர்க்கரசியார், 'செய்தி இதுவானல், வாதில் வென்றவர்பக்கஞ் சேர்ந்து உண்மை தெரிவதே உறுதியாகும். இதனல் மனவருத்தப்படவேண்டா' என்றனர்.

பின்னர் குலச்சிறையாரிடம் மங்கையர்க்கரசியார் அரசன் மொழிந்ததை உரைத்தனர். அமைச்சனார் பிள்ளையா ரிங்கெழுந்தருளப் பெற்றபேறு பெரிதென்று வியந்து இன்று ஈசனடியார்களைக் கண்டு வணங்கப்பெற்றேம். ஆனால் சமணர் செய்யும் வஞ்சனை யாதோ அறியோம் என்றனர். தேவியாரும் அதனைக்கேட்டு அஞ்சி அவ்வஞ்சகர் தீமையே செய்ய வல்லவர்கள்; நாம் செய்வது யாது? ஞானசம்பந்தப் பெருமான்பால் நலமலாதது நேர்வதானால் யாமும் உயிர்துறக்க வேண்டுமென்றனர். தவத்தை ஒழித்துத் தீமைசெய்யுஞ் சமணர்கள் தங்கள் மந்திரத்தினாலே திருமடத்தில் தீக்கொளுவ முயன்றனர். எல்லாவற்றிற்கும் மூலமந்திரமாகிய திருவைந்தெழுத்தினை ஓதுகின்றவர்கள் பார்க்கின்ற திசையிலும் மற்ற மந்திரங்களின் வலி செல்லாதாகலின், சிவனடியார் மடத்தில் தங்கள் திறமைகள் பயன்படாவகை கண்டு அமணர் தளர்ந்தனர். இதனை அரசன் உணர்ந்தால் நம்மை மேன்மையாகக் கருதமாட்டான். நம்முடைய விருத்தியையும் ஒழிப்பன் என்றெண்ணி மந்திரம் வாயாமையால் தீயினைக் கொடுபோய்த் திருமடத்திற் கொளுவினர். இதனையறிந்த பரிசனங்கள் கலக்கமுற்று அத்தீயினைச் சிதைத்தொழித்து அருகர் இவ்வாறு செய்தமையை உணர்ந்து கவுணியர் தலைவர்பால் மாதவர் துயிலுந் திருமடத்தின் புறத்தே இக்குற்றஞ் செய்தார்கள் பாவிகள் என்று தெரிவித்தனர். அப்போது புகலி மன்னர் அவர்கள் என்பொருட்டுச் செய்த தீங்கு இஃதாயினும் சிவனடியார்களுக்கு இத்தீங்கு நேருமோவென்று அச்சமும் முனிவுங்கொண்டு அரசனது நீதி வழுவென்று அதனைக் கருதினவராய்,

"செய்யனே திருவாலவாய்"

என்னுந் திருப்பதிகம் பாடிச் 'சைவர் வாழுகின்ற மடத்தில் அமணர்கள் இட்ட தழல்போய்ப் பாண்டியற்குப் பையவேயாக' என்று பணித்தனர். 'பையவே சென்று பாண்டியற்காக' என்றதற்குக் காரணத்தை ஆசிரியர் சேக்கிழார் பெருமான் ஒரு திருப்பாட்டினால் விளக்கியுள்ளார்.

"பாண்டிமா தேவியார் தமது பொற்பிற்
பயிலுநெடு மங்கலநாண் பாது காத்தும்
ஆண்டகையார் குலச்சிறையா ரன்பி னாலும்
அரசன்பா லபராத முறுத லாலும்
மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும்
வெண்ணீறு வெப்பகலப் புகலி வேந்தர்
தீண்டியிடப் பேறுடையா னாத லாலுந்
தீப்பிணியைப் பையவே செல்க வென்றார்."

திருப்பதிகத்துட் குறித்தவாறே தீப்பிணி அரசனை அடைந்து தழலின் மிகுந்தெழும் வெப்பம்போல அவனை வருத்திற்று. திருமடத்தில் தீப்பற்றியதைக் குலச்சிறையாரும், பாண்டிமாதேவியாருங் கேட்டுப் பிள்ளையாரை இவண் அழைத்த நாம் மாய்வதே தகுதி என எண்ணி மிகுந்த அச்சத்துடன் பதைப்புற்றிருந்தபோது, திருமடத்தில் தீதின்மை தெளிந்து, அமணரது இத் தீச்செய்தியின் விளைவு என்னுமோவென்று நினைந்திருந்தபொழுது அரசனது மெய்காப்பார்கள் அரசனுக்கு வெப்புநோய் கண்டதென்று தெரிவிக்கத் தேவியாரும், மந்திரியாரும், விரைந்து அச்சத்தோடு மன்னவன் மருங்கு சேர்ந்தனர். அரசனுக்கு நேரிட்ட வெப்பு நோயானது வெம்மை வீசுவதாய், அரண்மனைக்குப் புறத்தே நின்றவர்களும் வாடி வெதும்பும்படி எழுந்தது. அளவற்ற சூட்டினால் அறிவும் உயிரும் நீங்கி விடுவதற்கு ஒருபுடை ஒதுங்கி நின்றன. பக்கத்தில் வந்தவர் தூரத்தே விலகிப்போயினர். இளவாழைத் தண்டையும் இலையையும், வெப்புத் தீரும்படி சேர்த்த போது, அவையும் வெப்பினாற் கருங்கி நுண் துகளாயின. மருத்துவம் வல்லவர்கள் தம்மாலியன்றவளவு பரிகாரஞ் செய்தும், மேன்மேல் வெப்புநோய் அரசன் உயிரை வருத்துவதாயிற்று. இதைக்கேட்ட அமணர்களெல்லாரும் பெருமூச்சுவிட்டு நேற்றிரவு நிகழ்ந்ததன் பயனேவென்று கருதி, தங்கள் மானக்கேடு தோன்றுவகை அரசன்பால் அணைந்தனர். வெப்புநோயின் உண்மைக் காரணமறியாத அன்னார் தங்கள் சமய மந்திரங்களை ஓதி, பீலிகொண்டு

தடவியும், பீலிகள் பிரம்பினோடு தீந்துபோய்த் தழல் மேன் மேலும் எழுந்து பொறிசிதறக் கண்டு, வியப்பும் அச்சமும் உடையவராய்த் தங்கள் குண்டிகை நீரைத் தெளித்து 'அருகனே அருகனே' காக்கவென்று கூவியும் அவர்கள் தெளித்த நீர் எரியில் வார்த்த நெய்போலாயினமையால், அமணரைப் பார்த்து இங்கே நீவிர் ஒருவரும் இருக்க வேண்டாம் என்று அரசன் கட்டளையிட்டான். பாண்டிமா தேவியாரும் அச்சத்தோடு அமைச்சரைப் பார்த்துப் புகலி மன்னர்பால் அமணர் செய்த தீங்கு இவ்வாறு மூண்டதோ வென்றுகூற அமைச்சரும், அவர்கள் செய்த தீங்கினால் இது வந்ததாதலால் அவர்கள் தீர்க்க முயன்றால், இது அதிகப்படும்; இதனைத் தீர்ப்பதற்கு ஆளுடைய பிள்ளை யாரது அருளே வேண்டும். அவர் விரும்பி நோக்கினால் இந்தத் தீப்பிணியேயன்றிப் பிறவியுந் தீரும் என்று உறுதி கூறினார். ஞானசம்பந்தர் என்னுந் திருநாம மந்திரத்தைக் கேட்டவுடன் தளர்ச்சி நீங்குவதை யுணர்ந்து அரசன் தீய அமணரைக் குறித்து இவர்கள் செய்வனவெல்லாம் நோய் மிகுதற்கே ஏதுவாயின. அச் சைவத்தலைவர், இவண் வந்தால் அவருடைய அருளால் இந்நோய் அகலுமோ என்பதைத் தெரிவேன். எனக்கு நேர்ந்த இப்பிணியைத் தீர்த்து வென்றவர்களது பக்கஞ் சேர்வன்; அவரை அழையுமென்ன, மிக்க உவகையோடு மங்கையர்க்கரசி யாரும் அமைச்சனாருந் திருமடத்திற்குச் சென்று, பரிசனங்கள் வாயிலாகத் தமது வரவைப புகலி மன்னர்க் கறிவித்து அவரால் அழைக்கப்பெற்று உட்சென்று, கண்ணருவியோடு அவர் திருவடித் தாமரைகளில் தாழ்ந் திறைஞ்சிச் சமணர்கள் செய்த தீங்கினை நினைத்துப் பெரு மூச்சுவிட்டு, உரைகுழறி மெய்ந்நடுங்கி ஒன்றுங்கூற அறியா ராயினர். காழிவேந்தருடைய திருவடித் தாமரைகளைத் தமது கவலைக் கடலுக்கோர் எல்லையாகப் பற்றிக்கொண்டு, அவர்கள் எழாதிருந்தகாலை, புகலி அண்ணலார் அவர்களைத் தம் இரு கைகளால் எடுத்தருளித் தேற்றி அவர்களை நோக்கி, உங்களுக்கு ஏதாவது தீங்கு நிகழ்ந்ததோ என்று வினவ, அவர்கள் பின்வருமாறு இயம்பினர். சமணர்

செய்த வஞ்சனையை அறிந்து, திருமேனிக்கு யாதும் நிகழப் படாதென்று கவலையுற்றோம். அக்கவலை தீர்ந்தபின், அவர்கள் செய்த தீத்தொழில் போய் அளவற்ற கொடுமையுடைய வெப்புநோயாக மன்னவன்பாற் பற்றியது; அவ்வெப்பு நோய் அவர்கள் செய்த எத்திறப் பரிகாரங்களாலுந் தீர வில்லை. மன்னவன்முன் அடிகள் எழுந்தருளி அமணரை வென்று எங்களுடைய உயிர்களையும மன்னனது உயிரையும் உய்விக்கவேண்டுமென்று வேண்டினர். அப்போது புகலிவேந்தர் அவர்களை நோக்கி, 'நீங்கள் ஒன்றிற்கும் அஞ்சவேண்டாம். நீங்கள் மகிழும்படியாக யாவருங் காண அவ்வமணரை வாதில் வென்று மன்னவனைத் திருநீறு அணிவிப்பேன்' என்று உறுதி கூறினர். உடனே அவர்கள் முகமலர்ந்து 'துன்பக்கடலினின்ற அடியோங்களை எடுத் தருளுமவண்ணம முத்துச்சிவிகைமீது தென்னாடு செய்த தவத்தால் இங்குத் தேவரீர் எழுந்தருளப்பெற்ற நாங்கள் எப்பேறுதான் பெறமாட்டோம்' என்று சொல்லித்தொழு தனர். பின்னர் ஞானசம்பந்தப் பெருமான், ஆவதும் அழிவதும் எல்லாம இறைவர் செயலாதலின், சமணரை வெல்வதற்குக் கடவுளுடைய திருவுள்ளத்தை அறியும் பொருட்டுத தொண்டர்களோடு இருகைகளையும் தலைமேற் குவித்துக்கொண்டு திருவாலவாயிற் புகுந்து, பார்க்க விதி யில்லாத அமணரைப் பார்த்து வாதுசெய்வது நமது திருவுள்ளமே என்றுவினவுங் கருத்துடைய "வேத வேள்வி" என்னுஞ் செந்தமிழ் மாலையை இறைவற்குச் சாத்தி ஞால நின் புகழேயாக வேண்டுமென்று தொழுதனர். தொழுது சிவபெருமானது திருவருள்பெற்றுத் திருவாயிலுக்கு வந்து அரசன் முத்துச்சிவிகைமேற்கொண்டு அன்பரெல்லாரும் ஆர்ப்பெடுப்பத் தென்னவன் தேவியாரும் சிவிகை மீது பின்வர அமைச்சர் தொண்டர்குழாத்தோடு முன் செல்ல அரண்மனையை யடைந்தனர். மந்திரியார் முன் சென்று சண்பைமன்னர் வரவுகூற, அரசன் முன்னிருந்த துன்பஞ்சிறிதுநீங்கித் தனது முடியின்பக்கத்தில் அவர்க்கு முழுமணிப் பொற்பீடமொன்று இடும்படி கட்டளை யிட்டான். சமணர்கள் அரசன் செயலைப்பார்த்து, 'உன்னு

டைய சமயத்தை நீயே காக்கவேண்டுமாதலால், யாங்களுந் தீர்க்க முயல்கின்றேம்; அவரால் நோய் தீர்ந்தாலும், யாங்களுந் தீர்த்ததாக நீ இசைந்து கூறவேண்டு' மென்றனர். அதற்குப் பாண்டியமன்னன், 'இருவரும் தத்தமது தெய்வவலியால் நோயைத் தீர்க்கவேண்டியது. நான் ஒரஞ் சொல்லமாட்டேன்' என்றனன். இதனுற் சமணர் ஊக்கமின்றி யிருந்தகாலை தமிழ்நாடுசெய்த தவக் கொழுந்தாகிய ஞானசம்பந்தர் சிவிகையினின்றிழிந்து மந்திரியாரும் அரசியாரும் முன்செல்ல வருவதை மன்னன் பார்த்தனன். பார்த்தபொழுதே அவரைக் கையெடுத்து வணங்கித் தனது முடியின் பக்கத்திலுள்ள பொற்பீடத்தைக் காட்டினன். முத்தமிழ்விரகர் அதன்மிசை இருந்தனர். மயக்கங் கொண்ட சமணரெல்லாம், தம்முள் அச்சங்கொண்டனர். அப்போது மன்னன், பிள்ளையாரது திருக்கண் நோக்கத்தினலே, வெப்புநோய் சிறிதுநீங்கி, அவரை நோக்கி உமது திருப்பதி யாதென்று வினவினன். அப்போது நம் பரமாசாரியர் தமது திருப்பதி பன்னிரண்டு திருப்பெயருடைய கழுமலமென்று உணர்த்துவான், அப் பன்னிருபெயரையும் அமைத்துத் திருப்பதிகமொன்று அருளிச்செய்தனர். பிள்ளையார் செம்பொன்மணிப்பீடத்திலிருந்தபொழுது, பொறுமையிருந்த சமணர், தமது அச்சத்தை மறைத்துக் கோபத்தை மேற்கொண்டு இளஞ் செஞ்ஞாயிற்றினைக் கருமுகில்கள் சூழ்வதுபோலப் பிள்ளையாரைச் சூழ்ந்து நின்று வாதினல அவரை வெல்லக்கருதித் தமது கொள்கையைக்கூறும நூலினை எடுத்தோதிக் கூச்சலிட்டனர். பிள்ளையார் அதனைக்கேட்டு, 'உமமுடைய கொள்கையின் எல்லையினை உள்ளபடி பேசுக' என்று மொழியவும், அவர்களுட் பலர் துள்ளியெழுந்து கதறிப் பதறினர். அதனைக் கண்டு மன்னவன் தேவியார் மனம்பொறுது அரசனை நோக்கி, 'ஆளுடையபிள்ளையார் இளந் திருக்கோலத்தர், இவர்களோ எண்ணிலாதவர்கள்; உம்முடைய பிணியை அவர் தீர்த்தபின்னர், இவ்வமணர்கள் வாதாடுக' என்றனர். அரசனும் 'வேறு வாது எற்றிற்கு? என்மேல் உள்ள வெப்பினை யொழித்து, அருகராகிய நீங்களும்,

சிவபெருமானுக் கன்பராகிய இவரும் கண்ட தெய்வத் தன்மையைத் தெரிவிப்பீராக' என்றனன்.

அப்போது ஞானபோனகர், 'மானினேர் விழிமாத ராய்' என்னுந் திருப்பதிகத்தினைப் பாடி, அரசியாரை அஞ்சவேண்டாமென்று பணித்தனர். பிள்ளையாரைச் சுற்றிநின்ற சமணரைப்பார்த்துப் பாண்டியமன்னன், 'இன்று எனக்குற்ற பிணியை நீர் தீர்ப்பீராக, அதனைத் தீர்த்தவரே வாதில் வென்றாராவர்' என்றான். அதற்கு அவர்கள், உன்னுடைய உடம்பிலுள்ள வெப்பை உனது இடப்பாகத்திலே முதலில் மந்திரித்து எந்தெய்வ முயற்சி யினால் தீர்ப்போமென்றனர். அப்படியே அவர்கள் அரச னது வாமபாகத்தில் தமது பீலியைக்கொண்டு தடவ, மேன்மேல் வெப்பமெழுவதைப் பொறாது, மன்னன் காழி வேந்தரைப் பார்த்தான். அவனது குறிப்பினைக் கண்டு அவர் அவனது வலப்பக்கத்து வெப்பைத் திருநீற்றுப் பதிகம் பாடித் திருநீறுகொண்டு தமது திருக்கையாற் றடவ அப்பக்கம் வெப்புநீங்கிப் பொய்கைபோலக் குளிர்ந் தது. சமணர் பக்கத்து வெப்போ, வலப்பக்கத்து வெப்பை யும் ஒருங்குகொண்டு அவர்களது உடம்பையும் வெதும்பச் செய்ததனாலே, அவர்கள் சிறிதாவிலகி ஏறப்பார்த்து நின்ற னர். மன்னவனுக்கு உலகத்திலுள்ள குளிர்ச்சியெல்லாம் ஒருபுறமும் வெப்பமெல்லாம் ஒருபுறமுங்கூடி நின்றதுபோ லிருந்தது. அரசன் கூறுவான், 'இது என்ன அதிசயம்! ஒரே காலத்திலே வெவ்விய நரகத்துன்பம் ஒரு பக்கமும், வீட்டின்பம் மற்றொரு பக்கமும் இருப்பதுபோலவும், ஒரு பக்கம் நஞ்சும் ஒருபக்கம் சுவைமிக்க அமுதமும் இருப் பதுபோலவும் உள்ளநிலை எனது ஒரே உடம்பில் யான் பெற்றுள்ளேன், 'வெவ்விய தொழிலையுடைய அருகரே நீங்கள் தோற்றுவிட்டீர்கள்! என்னைவிட்டு அகன்று போங்கள்' என்று சொல்லிவிட்டுச் சம்பந்தரைப் பார்த்து 'யான் உய்யும்படிவந்த ஞானவள்ளலாரே! இந்தப் பக்கத்து வெப்பம் முழுவதும் நீங்கும்படி நீவிர் அருள்புரிவீராக' என்று மனத்தினால் வணங்கிக் கூறினன். ஆளுடையபிள்

ளையார் கருணைமலர்ந்த திருமுகத்தோடு திருக்கையாற் றிருநீற்றினை ஒருமுறை இடப்பாகத்திலுந் தடவ, வெப்பு நோய் முற்றிலும் நீங்கி அரசன் உய்ந்தான். அரசியாரும் மந்திரியாரும் ஞானபோனகரது செவ்விய திருவடிக்கமலங் களைத் தங்கள் சென்னிமேற் சேர்த்து 'இன்று பெருமை பெற்றனம், இன்று நற்பிறவி யுற்றனம், அரசனும் பிறவா மேன்மை எய்தினன்' என்றுகூறிப் பெருமகிழ்வடைந் தனர். அரசனும், வெப்பு முழுவதும் நீங்கப்பெற்று மிகுந்த பேரின்பமெய்திச் சென்னிமேற் கைகுவித்து ஞானசம்பந்தருடைய திருவடிகளைவணங்கி, யான் உய்ந்தே னென்று கூறினன்.

இதனைக்கேட்ட சமணர்கள் தங்கள் மந்திரம் பயனில் லாமை கண்டு பயந்து, மேற்செய்வது என்ன என்று தமக் குள் நினைத்து இனித் தர்க்கவாதங் கூடாது, தீயினில் அல்லது நீரில் உண்மையைக் காட்டி வெல்வதே தக்க தென்று கருதினர். ஆதலால், ஆளுடையபிள்ளையார் உங் கள் உண்மையைக் கூறுங்களென்று பணித்தபோது அவர் கள், பேச்சுவழக்கால் வெற்றியடைதலை விடுத்துக் காட்சி யிலே உண்மையை நாட்டுவதே தக்கதென்றனர். இவர்கள் வாது கூறுவதைக்கேட்ட மன்னன் சினந்து 'என் உடம்பை வெப்புநோய் கவர்ந்தபோது அதனை நீக்கமுடியாத உங்க ளுக்கு வாதென்ன இருக்கிறது?' என்றனன். அதற்கவர்கள், தமது கொள்கையை ஏட்டில் எழுதி எரியும் நெருப்பி லிட்டால் அது வேவாதிருப்பதே வெற்றியாகுமென்றனர். இதனைக் கேட்டவுடன் அரசன் ஏதாவது இயம்புதற்கு முன்னேயே பிள்ளையார் 'நீர் சொன்னது நல்லது; தீயிலே ஏட்டினை இடுவது நுங்கருத்தானால் அரசன் முன்னிலை யிலே அப்படிச்செய்ய வாரு' மென்றனர். உடனே அரசன் தழல் அமைக்கும்படி தன் ஏவலாளர்க்குக் கட்டளையிட் டான். அவ்வாறே அவர்களும் விறகுகளை அடுக்கித் தீயும் வைத்தனர். அப்போது சண்பைமன்னர் சிவபெருமானை பொருளென்று தாம் பாடிய திருப்பதிக ஏட்டினை வாங்கி அதிற் கயிறுசாத்திப் பார்த்தனர் அப்போது திருநள்

ளாற்றுப் பதிகமாகிய 'போகமார்த்த பூண்முலையாள்' என்னும் பதிகங்கிடைத்தது. உடனே நள்ளாற்றுப் பெருமானை வணங்கி அத் திருப்பதிகமுள்ள திருவேட்டினைத் தமது செங்கையகத்தே கொண்டார். அது, நன்மை தருமென்ற குறிப்பான் 'தளிர் இளவளரொளி' என்னுந் திருப்பதிகம் பாடியருளினர். பின்னர் யாவரும் காணும்படி அந்த ஏட்டினைத் தீயில் இட்டனர். அதில் எழுதிய திருப்பதிகம் எட்டுமூர்த்தமுடைய மாதொரு பாகனைப் பரம்பொருளென்று கூறுவதால் அது தீநடுவே பசுமையோடு விளங்கியது. சமணர்கள் தமது ஏடு அவ்வாறு கெடா திருக்குமோவென்று கவலையுற்று நடுக்கத்துடன் தமது ஏட்டினை இட்டார். அது தீயிடைப்பட்ட பஞ்சுபோல எரிந்தொழிந்தது. ஆளுடையபிள்ளையார் தாம இட்ட ஏட்டினை எடுத்துக்காட்டி யாவரும் அது பழுதின்றியிருப்பதைக் கண்டபின் திருமுறையில் அதனைக் கோத்தனர். அப்போது அரசன், சமணரை நோக்கி, 'நீங்கள் இட்ட ஏட்டினைக் காட்டுங்கள்' என்றான். அவர்கள் அதனை எடுக்கத் தீயருகே சென்றபோது அஃது அவர்களை வெதுப்பினமையால் விலகியோடினர். அதுகண்ட மன்னன் தண்ணீர் கொணர்வித்துத் தீயைத் தணிப்பித்தான். அபபோது அவர்கள் சாம்பலையுங் கரியையுந்தவிர வேறொன்றுங் காணவில்லை. ஒன்றுஞ்செய்ய அறியாத அவர்கள் சாம்பலைக் கையினாற் பிசைந்து தூற்றிப்பார்த்தனர். அதுகண்ட மன்னன் நகைத்து, 'இன்னும் ஏட்டை அரித்துப் பார்க்கின்றீரா? பொய்யை மெய்யாக்க முயல்கின்ற நீங்கள் போங்கள்' என்றான். 'வெப்புநோய் என்னுந் தீயில்நின்று யான் நீங்கிப் பிழைத்தபோது நீங்கள் அதனை நீக்கமாட்டாது தோற்றீர்கள். இப்போது நீஙகள் தீயிலிட்ட ஏடு கெடாது தப்பவில்லையென்றால் வலியுடைய நீங்கள் தோல்வியடையவில்லைபோலும்!' என்றான்.

அதற்கவர்கள் முன் இருமுறை முயன்றோம். இன்னுமொருமுறை முயன்று வெற்றியடைந்தால் யாங்கள் உண்மைக்கொள்கை யுடையவர்களே யாதலால் இன்னுமொரு

முறை சோதனை வேண்டுமென்றனர். அதனைக்கேட்ட மன்னன் இனி உங்களுக்கு என்ன சொல்லிருக்கிறதென்று மறுத்தபிற்பாடும் புகலிமன்னர், இன்னும் வேறு என்ன வாது செய்யவேண்டுமென்று அவர்களை வினவினர். அதற்கவர்கள், அவரவர்கள் உண்மையென்பதை ஏட்டில் எழுதி, அவ்வேட்டினை ஒடுகின்ற ஆற்றில் இட்டால் எவ்வேடு தண்ணீரோடு செல்லாது எதிரேறிச்சென்று தங்குமோ, அவ்வேடே நற்கருத்தினைத் தாங்குவதென்றனர். அதற்குப் பிள்ளையார் நல்லது அப்படியே செய்வோமென்று இசைந்தருளினபோது, மந்திரியார், இனிச்செய்யும் வாதிற் சமணர் தோற்றால் இன்னது செய்வதென்று உடன்படிக்கை செய்து வாது நிகழ்த்த வேண்டுமென்றனர். அதுகேட்ட அமணர் அவர்பாற்கொண்ட சினமும் பொறாமையுங் காரணமாக 'நாங்கள் இந்த வாதில் தோற்றோமாகில் எங்களை இவ் வேந்தனே கழுவேற்றுவானாக' என்றனர். அவ் வார்த்தைகேட்ட மன்னன், 'உங்கள் செய்கையை மறந்து செற்றத்தால் இவ்வாறு சொன்னீர்கள். வையை ஆற்றில் ஏட்டினை விடுவதற்குப் போவோமாக' என்றனன். அப்போது பிள்ளையார் முதலிற் பசும்பொன் பீடத்தினின்றும் இறங்கி முத்துச்சிவிகையின்மேல் ஏறிச் சென்றார். அவர்பின்னே அரசனுங் குதிரைமேலேறிச் சென்றான்; உண்மையறியாத சமணர் அறிவுமயக்க மேற்கொண்டு சென்றார்கள்.

பாண்டியமன்னது வெப்புநோயைத் தீர்த்துப் புகலிமன்னர் அரண்மனையினின்றும் வெளிப்போந்தபோது மதுரைப்பதியின் தெருவின்கண்ணே கூடிய ஆடவரும் பெண்டிரும் பலவாறு தத்தமக்குட் பேசலானார். 'அரசனது வெப்புநோயை நீக்கி நமது துன்பத்தைத் தீர்த்த ஞானசம்பந்தர் இந்தப் பெரியவர் பாரும்' என்பார்கள்; 'பால்மணம் வீசும் செம்பவளவாய்ப் பிள்ளையார் பாண்டிநாடு வாழும்படி வந்துசேர்ந்தார்; சமணர், தீயில் செய்த வாதில் இவர்க்குத் தோற்றுப்போனார்கள். சிவபெருமானது திருநீறே உண்மையெனக் கண்டோம்' என்பார்கள்; 'ஒளி

மிக்க அழகிய முத்துச்சிவிகையின்மீது பிள்ளையார் வரு கின்ற அழகுதான் என்னே! அதனைக்காணும் நம்கண்கள் சிறப்படைந்தன' என்பார்கள்; 'இந்தச் சமண முனிவர்க ளது செயலாற் குற்றமே விளைந்தது. ஆலவாயிலுறையும் அண்ணலே பாரும்' என்பார்கள்; 'அறிவென்பது சிவ பெருமானை யறிவதே' எனபார்கள்; 'மறையுந் திருநீறும் எங்கும் இனிப் பரவிவிடும்' என்பார்கள்; 'சமண முனிவர் கள் முகங்களெல்லாம் தளர்ச்சியுற்றன' என்பார்கள்; 'அவர்களுடைய கொடிய வஞ்சனைகளெல்லாம் சிதறிப் போயினபோலும்! அரசனுடைய விருப்பம் மாறினவிதம் என்னே! சமண சமயமாகிய இருள் ஒழிவதற்குக் காலம் வந்தது' என்பார்கள்.

'தீயிலே தோற்றவர்கள் நீரிலே வெல்லுவார்களோ, சமணமுனிவர் இருப்பு நெஞ்சமுடையராளுலும் பிள்ளையா ருக்கு நிகராவரோ?' என்பார்கள்; 'உண்மையுணராத சமணர் படுகின்றபாட்டைப் பாருங்க' ளென்பார்கள்; 'மந்திரியார் கழுக்கோலெல்லாந் தயார்செய்து வைத்தனர்' என்பார்கள்; 'வைகையில் ஏடு இட்டால் தண்ணீரோடு அது செல்லாது நிற்குமோ; உயர்ந்த ஞானம்பெற்றவர் நிறுத்தவுங்கூடும். இங்கே மக்களெல்லாரும் இதைக் காணு வதற்கு வந்துகூடுவார்கள், பார்ப்போம்' என்பார்கள்.

இப்படி இரண்டு பக்கத்திலும் நெருங்கினவர்கள் உரையாடிச்செல்ல, மின்னொளிவீசும் வெண்குடையின்கீழ் முத்துச்சிவிகையின்மேற் பாண்டிநாட்டி லுள்ளவர்களுக் குச் சிவநெறி போதிக்கவந்த நான்மறை வள்ளலார் வரவைப் பொற்சின்னம் ஊதி அறிவிப்ப, பலவகை வாத்தியங்கள் முழங்க, சமணர்களும் அரசனும் அரசியும் ஒருபக்கம் வர, எல்லாரும் வைகையாற்றின் கரையினை யடைந்தார்கள். கார்காலத்திலே காதன்மிகுந்த பெண்டிர் தம் கணவன்பால் விரைந்துசெல்வதுபோலக் கடலைநோக்கி ஆறுனது வரிசை வரிசையாக அலைகளை வீசிக்கொண்டு விரைந்துசென்றது. அப்போது அரசன்' 'பிள்ளையாருஞ் சமணராகிய நீங்களும் உங்கள் ஏடுகளை இடுக' என்றான்.

முன்னே தோற்றவர்கள் மறுபடியுந் தோல்வியடைய மாட்டார்களென்று துணிந்து தங்கள் உண்மையை 'அஸ்தி நாஸ்தி' என்றெழுதி, அங்ஙனமெழுதிய ஏட்டினை நீரில் விட்டவுடன், தண்ணீர் அதனை யடித்துக்கொண்டு கடல்நோக்கிச்சென்றது. அதனைத் தடுக்க முயன்றும் ஏடு கைக்கெட்டாமையால் அது தம்மை நட்டாற்றில் விட்டுப்போனது கண்டு தூரத்திலே விலகிநின்று வேறொரு செயலுமில்லாது தங்களுக்கு முடிவு வந்துவிட்டதே என்கிற அச்சங்கொண்டனர். அவ் வச்சத்தை மறைத்து மன்னன்பால் வந்து எதிர்வாதம் புரியும் பிள்ளையாருந் தமது ஏட்டை இட்டால் அது எதிர்செல்லுவதைப் பார்ப்போமென்றனர். அப்போது அரசன் பிள்ளையாரது திருக்குறிப்பை யறியும்வண்ணம் அவரைநோக்க, அவர் திருப்பாசுரம் பாடத் தொடங்கினார்.

பாண்டியமன்னன் ஆளுடையபிள்ளையாரால் தொட்டுத் திருநீறு பூசப்பெற்றுப் பழவினைநீங்கி இருவினை யொப்படைந்து கடவுளை அறியும் பக்குவநிலையுற்றானாகையால், வேதநூல் ஒழுக்கம் உலகியலின்பாற் படுமென்பதும், வீட்டிற்குரிய மெய்ந்நெறி சிவநெறியே என்பதுங், கலகஞ்செய்யும் அமணர்களறியாவிடினும் புகழ்ச்சிபெற்ற மன்னன் அறியும்வண்ணம் உணர்த்தலுற்றார்.

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே. க

அரிய காட்சிய ராய்த்தம தங்கைசே
ரெரிய ரேறுகந் தேறுவர் கண்டமுங்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே. உ

வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலோ. ௩

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதி மாண்புங்
கேட்பான் புகிலளவில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்க தக்கார். ௪

ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்குச
சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள் சோதி
மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கண் மிக்கீ ரிறையே வந்து சார்மின்களே. ௫

ஆடும் மெனவும் மருங்கூற்ற முதைத்து வேதம்
பாடும் மெனவும் புகழல்லது பாவ நீங்கக்
கேடும் பிறப்பும் மறுக்கும் மெனக் கேட்டீராகி
னாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்ட லாமே. ௬

கடிசேர்ந்த போது மலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதை பண்டு
முடிசேர்ந்த காலையற வெட்டிட முக்கண் மூர்த்தி
யடிசேர்ந்த வண்ணம் மறிவார் சொலக் கேட்டுமன்றே. ௭

வேத முதல்வன் முதலாக விளங்கி வையம்
ஏதப் படாமை யுலகத்தவ ரேத்தல் செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாப் பொலிந்த
சூத னொலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே. ௮

பாராழி வட்டம் பகையா னலிந்தாட்ட வாடிப்
பேராழி யானதிடர் கண்டருள் செய்தல் பேணி
நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்டவர்க்குப்
போராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே. ௯

மாலா யவனும் மறைவல்ல நான்மு கனும்
பாலாய தேவர்பக ரில்லமு தூட்டல் பேணிக்
காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதா யெழுந்த
ஆலால முண்டங்கம ரர்க்கருள் செய்த தாமே. ௰

அற்றன்றி யந்தண் மதுரைத் தொகையாக்கி னானுந்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர் வினூரவும் பண்பு நோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே. கக

நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்தனல்ல
எல்லார் களும்பரவு மீசனை யேத்து பாடல்
பல்லார் களும்மதிக்கப் பாசுரஞ் சொன்ன பத்தும்
வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்ல ரன்றே. கஉ

இங்ஙனம் பாடின பதிகத்தின் முதற்பாசுரத்துள் 'அந்தணரையும் விண்ணவரையும் பசுக்களையும் வாழ்க' என்றது, உலகமெல்லாம் நலனடையும்வண்ணம் நல்வேள்விகளுஞ் சிவவழிபாடும் நிலைத்தற்பொருட்டென்க. நல்வேள்வியின் நற்பயன் மழையாதலாலும், சிவபூசைக்கு வேண்டுஞ் சாதனமாகப் புனல் அமைதலாலும், நீரினையும், கடவுட்பூசனை செம்மையாக நடைபெறும்வண்ணம் குடிகளைப் பாதுகாக்கும் இயைபுபற்றி மன்னனையும் வாழ்த்தினரென்க. தீயன ஆழ்ந்துபோகவேண்டுமென்றது புறச்சமயங்கள் வீழ்ந்தொழிக என்பதற்கும், 'அரன் பெயர் எங்குஞ் சூழ்க' என்றது, எல்லா உயிர்களுந் திருவைந்தெழுத்தையே ஓதி உய்தற்பொருட்டுமென்க. 'வையகமுந் துயர்தீர்க' என்றது இகத்திலும் பரத்திலுந் துயருற்று வாழும் உலகத்தவர்க்கு அத் துன்பம் நீங்கும்படி யென்க.

இரண்டாவது பாசுரத்துள், 'அரிய காட்சியர்' என்றது பரம்பொருள் எளிதாக அறியமுடியாத உயர்நிலைத்து என்றறிவித்தற்கு. மிக்க மெய்யன்போடு காண்பவர்க்கு அவர் தோன்றி அருள்செய்வரென்பதை உணர்த்துமுகத்தால் அவருடைய திருவடையாளங்களை எடுத்துரைத்தார். பின்னுங் கடவுளைப் 'பெரியர்' என்றது, அன்பர்க்குத் தோன்றுந் திருவடிவத்தோடு ஐம்பூதங்களும் அவற்றாலுய அண்டங்கள் யாவும் பெருமானுடைய திருவடிவு என்று குறித்தவாறும். மேலும், 'அவர் பெற்றியை யாரறிவார்' என்றது, அது மக்கள் உணர்வினாற் சென்றெட்ட முடியாது என்றறிவித்த வாறும்.

மூன்றுவது பாசுரத்துள், 'வெந்த சாம்பல் விரை' என்றது, அவருடைய அருட்பேரொளியே நிலைபெற்றதென்னு முகத்தால், ஏனை ஒளிகளெல்லாம் மறைந்தொழிய அவற்றிற்கு ஆதாரமாக நின்றவற்றை எரித்து அவற்றுலாய சாம்பலைச் சாந்தாக அவர் கொண்டவண்ணங் கூறிய வாறும். 'தமக்குத் தந்தையார் தாயில'ரென்றது, எல்லாம் ஒடுங்கியபோது தாம் ஒன்றிலுமொடுங்காது எஞ்சிநின்று அவற்றைமீளவும் பிறப்பித்தலாலென்க. 'தம்மையே சிந்தியா'வென்றது, தம்மைச் சிறப்பாக வழிபடுவாரது இருவினையிருளைப் போக்குவரென்றதாம். 'எந்தையார் அவர் எவ்வகையார் கொலோ' வென்றது, எல்லாம் தோன்றுவதற்கு முன்னும் பின்னும் அவர் இருத்தலாற், றோன்றிமறையும் பொருள்களைக் குறிப்பதற்குரிய சொற்களைக்கொண்டு அவர் பெருமையைச்சொல்ல முடியாதென்று குறித்த வாறும்.

அடுத்த பாசுரம் சிவபெருமான் அடியார்களுக்கு அருளும்வகை எல்லையில் அடங்காததாகலின், அதனைப் பற்றி ஆராய்ச்சி வேண்டுவதில்லை என்றது. பின் அவரை வழிபடவே பழவினை முற்றிலுமொழியும், வேண்டுவதும் பெறலாம் என்றவாறும். ஐந்தாம பாசுரத்துள், கடவுளுடைய தன்மையைக் காரணம் உதாரணம் முதலியவற்றுல் அளக்கவேண்டியதில்லையென்று குறித்தவாறும். வெளியே வேள்வித்தழல் வடிவமாயும் உள்ளத்தேஎழுஞ் சோதியாயும் கடவுள் விளங்குதலால், 'சுடர்விட்டுளன்' என்றனர். 'மாதுக்கம் நீங்கலுறுவீர்' என்றது, கடவுளை உள்ளன்போடு தொழுது பிறவியை அறுப்பீராக என்று குறித்த வாறும். 'ஆடும்' என்று தொடங்கிய பாட்டின் கருத்து, புகழிற்கும் வீரத்திற்கும் இறை எதையுஞ் செய்வதில்லை. எல்லாங் கருணைத்திறனே என்றவாறும். 'கடிசேர்ந்த' என்ற பாட்டில் சிவவழிபாட்டைத் தடுத்தோர்க்குத் தண்டம் அமைதல் சண்டேசரது அருஞ்செயலால் அறிவுறுத்தியவாறும். 'வேத முதல்வன்' என்னுந் திருப்பாட்டிலே உலகவர்கள் துன்பம் நீங்கும்படி சிவபெருமான்

அருள்செய்த திறத்தைப் பதினெண் புராணங்களிற் சூத முனிவர் உரைத்தார் என்றவாறும்.

அடுத்த திருப்பாட்டிற் கண்ணன் சிவபூசைசெய்து ஆழிபெற்ற சரித்திரத்தைச் செப்பியுள்ளார். 'மாலா யவன்' என்னும் திருப்பாட்டில் சிவபெருமான் நஞ்சுண்டு தேவரைக் காத்த திறமை கூறப்பட்டது. 'அற்றன்றி' என்ற திருப்பாட்டில் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் சிறப் புக் கூறியவாறும். இவ்வாறு திருப்பாசுரத்தைப் பாடி முடித்து அஃதெழுதப்பெற்ற திருவேட்டினை எடுத்துத் தண்ணீரிலிட்டனர்.

அது பிறவியாற்றில் அருந்தவர் மனஞ்செல்வதுபோல வையையாற்றில் எதிர்த்துச்சென்று சிவநெறியின் உண் மையை நிலைநாட்டியது. திருப்பாசுரத்திலே வேந்தனைப் பாடி வாழ்த்தினமையால் அநபாய மன்னனது செங்கோல் போல அவனது கூன் நிமிர்ந்தது. திருப்பாசுரம் எழுதப் பெற்ற ஏடானது ஆற்றிலே எதிர்நோக்கிச் செல்லும் பொழுது வானவர்களெல்லாரும் வாழ்த்தி மலர்மாரி பொழிந்தார்கள். பாண்டியமன்னன் அதிசயப்பட்டே னென்றான். சமணர்கள் அஞ்சிப் பதைப்புடன் நின்றார்கள். விரைந்துசெல்லும் ஏட்டினை யெடுப்பதற்குக் குலச்சிறை யார் காற்றினும் வேகமாய்ச் செல்லுங் குதிரையின்மே லேறிக்கொண்டு பின்சென்றார். ஏடானது ஓர்இடத்திற் றங்கும்படி ஆளுடையபிள்ளையார் திருப்பதிகம் பாடத் திருவேடகம் என்னுமிடத்தில் அது நின்றது. அப்போது குலச்சிறையார் திருக்கோயிலுக்குப் பக்கம் நீர்நடுவே சென்று அங்கிருக்கும் ஏட்டையெடுத்துத் தலைமிசை வைத்துக்கொண்டு அளவற்ற மகிழ்ச்சியோடு சிவபெரு மானைப் பணிந்து ஞானபோனகர்பால் வந்தனர். வந்து அவருடைய திருவடியை வணங்கிப்போற்றி, அரசன் முதலியோர்க்குத் தான் கொணர்ந்த ஏட்டினை அன்போடு காட்டிடத் தொண்டர்களெல்லாரும் அரவென்னும் ஒலியை முழக்கினர். அரசன் மந்திரியை நோக்கி, 'வாதிற் சூளு ரைத்துத் தோற்ற சமணர்கள் முன்னமே, ஞானசம்பந்தர்

மாட்டுத் தகுதியற்ற செயல்களை முழுவதும் செய்தார்கள். ஆதலால் அவர்களைக் கழுவிலேற்றி முறைசெய்க' வென்றனன். புகலிமன்னர், அவர்கள்பால் யாதொரு பகைமையும் இல்லாதவரேயாயினுஞ் சிவனடியார்கள் இருந்த மடத்திலே தீவைத்த காரணத்தால், அத்தண்டனையை விலக்கிடாதிருந்தனர். அமைச்சர் கழுத்தறிகளை நாட்டியபின், திருமடத்துத் தீ நாடியிட்ட எட்டுமலையில் வசித்த எண்ணாயிரவரும் அத் தறிகளில் ஏறினர். அவை கடவுள் சிவபெருமானே யென்பதை நிலைநாட்டியதற்கு அறிகுறித் தம்பமாயின.

பின்னர் மன்னவனுக்கு ஆளுடையபிள்ளையார் திருநீறளிப்ப, அவன் அதனைப் பணிந்துபெற்றுத் தனது மேனி முழுவதும் அணிந்துகொண்டான். மன்னனைப் பார்த்து மதுரையிலுள்ள மற்றவர்களெல்லாருந் திருநீறு அணிந்து கொண்டார்கள். திருநீற்றின் ஒளி எங்கும் பரவிற்று. சமணமதம் மாய்ந்தது. சைவத் திருநெறியை யாவருங் கடைப்பிடித்தனர். நல்வேள்வியும் அதன் பயனாகிய மழையும்பரவத் துன்பத்தை நீக்குஞ் சிவநெறியும் நிலைபெற்றது. திருவாலவாயின்கண், அங்கயற்கண்ணியோடுறையும் அண்ணலாரைப் பணிவதற்குப் புகலிவேந்தர் சிவிகையேறிச் சென்றனர். பாண்டியமன்னனும், பாண்டிமாதேவியும் அவரை வழிபட்டு உடன்சென்றனர். ஞானசம்பந்தப் பெருமானைப் பாண்டியநாட்டார்கள் வணங்கிக் கண்பெற்ற பயன் அடைந்தார்கள். திருக்கோயில் தூரத்தே தோன்றினவுடனே தொழுதுசென்று திருக்கோயில் வாயிலில் திருச்சிவிகையினின்றும் இழிந்து, ஞானவள்ளலார் அரசனும் அரசியும் அமைச்சரும் பணிந்து உடன்செல்லத் திருக்கோயிலுட்புகுந்து சிவபெருமானை 'வீடலாலவாயிலாய்'' என்னும் பதிகத்தைப் பாடி இறைஞ்சினர்.

உயிர்களுய்யும்பொருட்டுத் திருமன்றினில் நடமாடுந் திருக்கூத்தினை நினைப்பதே நியமமென்று புகலிமன்னர் இனிய தமிழ்ப்பதிகம் பாடினர். அரசன் சிவபெருமானை வணங்கி, சமணர் மாயையால் மயங்கி உன்னை அறியா

திருந்த என்னை நோய்நீக்கி ஆட்கொள்ளும்வண்ணம் ஆளுடையபிள்ளையாரை ஈண்டுவர அருளினை என்று போற்றி வணங்கினன். பின்னர் ஞானசம்பந்தர் புறம் போந்து அடியாரோடு திருமடத்தினில் எழுந்தருளியிருந் தார். அரசனும் அரசியும் அவரைத் தொழுதிருந்தனர். நம் நாயனார் இயமகம் என்னுஞ் சொல்லணியுள்ள திருப் பதிகம் பாடிப் பாணர்க்கருளின திறத்தினைப் போற்றினர். மதுரையிலுள்ளவர்க ளெல்லாரும் சமண சமய சம்பந்த மான பள்ளி, பாழி என்னுமிடங்களை யொல்லாமொழித்து எவ்விடத்திலுஞ் சிவப்பொலிவு தோன்றும்படி செய்தனர்.

திருவாலவாயிலில் ஞானசம்பந்தர் தங்கியிருக்கும் நாளில், சிவபாதவிருதயர் தம் புண்ணியப் புதல்வரைக் காணும்பொருட்டு மதுரைக்குவந்து திருவாலவாயிலுறை யுங் கடவுளைத்தொழுது, திருமடத்தினையடைந்து, புதல்வ ரால் வரவேற்கப்பட்டிருந்தகாலைப் புகலிமன்னர், திருத் தோணிபுரப் பெருமான்றன் திருவடிகளை நினைவுற்று அறி யாப் பருவத்தே தன்னை யெடுத்தாண்ட பெருந்தகையாரை, 'மண்ணினல்ல' வென்னுந் திருப்பதிகத்தினால் துதித்தனர்.

சின்னாட்கழித்துப் பிள்ளையார் பிறபதிகளை வணங்குங் கருத்துடன், திருவாலவாய் அண்ணலைத்தொழுது விடை பெற்றுப் புறம்போந்தகாலை அரசனும் தேவியாரும் அமைச்சரும், பிரிவாற்றாமையினாற் கண்ணீர்பெருகி, உணர்வற்றிருந்ததைப் பார்த்துப் புகலிமன்னர், உமமைப் பிரியாதிருக்கும்வண்ணம் இந்நாட்டிலுள்ள திருப்பதிகள் அனைத்தையும் எம்மொடு பணிவீர்களென்றருள்செய்ய, அவர்களும் அவ்வாறே செய்யக்கருதி அவருடன் திருப் பரங்குன்றினை யடைந்தார்கள்.

அங்கே சிவபெருமானைவணங்கிப் பாடியபின், திரு ஆப்பனூர், திருப்புத்தூர், திருக்கானப்பேர், திருச்சுழி யல் முதலிய பலதலங்களையும் வணங்கித் திருக்குற்றாலம் திருக்குறும்பலா முதலிய பதிகளைத்தொழுது பாடித் திரு நெல்வேலி யடைந்தனர். அங்கே சிவபெருமானைப் பணிந்து பாடித் திருவிராமேச்சுவரத்தை யடைந்தனர்.

அங்கே இராமன் இலங்கைமன்னனைச் செற்ற பாதகத்தை நீக்கும்வண்ணம் சிவபெருமானைப் பூசனைபுரிந்த செய்தியை அமைத்துத் திருப்பதிகம் பாடினர். ஈழமண்டலத்தி லுள்ள திருக்கோணமலையையும், மாதோட்டத்திலுள்ள திருக்கேதீச்சுவரத்தையும் அங்கிருந்தே பணிந்தேத்தினர். பின்னர் வடதிசைக்குச் செல்லக்கருதித் திருவாடானை, திருப்புனவாயில் எனனுந் தலங்களை வணங்கி, மந்திரியா ரது பதியாகிய மணமேற்குடிக்கு வந்தனர். அங்கே மந் திரியாரோடு அரசனும், அரசியாரும் அடிபணிந்தனர். திருஞானசம்பந்தப்பெருமான் சோழநாட்டிற்குப் புறப் படக் கருதியபோது, அவர்கள் பிரிவாற்ருது உடன் போகக் கருதினர்கள். அப்போது நம் நாயனர், 'நீங்கள் இங்கிருநது சிவநெறிபோற்றி யிருப்பீராக, சொல்வதற்கு இசைவதே அவ்வாறு செய்வதறகு ஏதுவாகும்' என்று அவர்களுக்கு வற்புறுத்தித் தேறுதல் சொன்னர். அவர் கள் அவரது ஆணையை மறுப்பதற்கஞ்சிப் பிரிவாற்ருமை யோடு தொழுதுநின்ருர்கள். ஞானசம்பந்தர், அவர்களுக்கு விடைகொடுத்துப் பாண்டிநாட்டை அகன்று திருத்தொண் டர் குழாத்துடன், திருக்களர் திருப்பாதாளீச்சுவரம் என்னும் பதிகளைப்பணிந்து பாடித் திருமுள்ளிவாய்க்கரை சேர்ந்தனர்.

திருஞானசம்பந்தர் மதுரைக்குச் சென்றகாலை சமண முனிவர்கள் எட்டுமலைகளில் வாழ்ந்தனர் என்பது சரித் திரத்தால் விளங்குகின்றது. அவை இன்னவை என்று பெரிய புராணத்தில் தெளிவாகக் கூறப்படவில்லை. ஆனை மாமலை ஆதியாய இடங்கள் என்றதால் ஆனைமலை என்பது அவற்றுள ஒன்றென்று விளங்குகின்றது. திருவிளையாடற் புராணத்துள் குஞ்சரசையம் என்பது அம் மலைபோலுமம. எட்டுமலைகளின் பெயர்கள் திருவிளையாடற் புராணம் யானையெய்த படலத்தில் ஏழாம் பாட்டிற் கூறப்பட்டன.

அவையாவன :—அஞ்சனம், கவுஞ்சம், கோவர்த்த னம், திரிகூடம், காஞ்சி, குஞ்சரசையம், ஏமகூடம், விந் தம் என்பன. இப்பெயர்கள் பாண்டியநாட்டிலுள்ள எட்டு

மலைகளுக்கு வடநாட்டிலிருந்துவந்த சமணமுனிவராற் கொடுக்கப்பட்டனபோலும். அக்காலத்திலே, சமணமதத்தைப் பரப்புதற்கு எண்ணாயிரஞ் சமணமுனிவர்கள் அம்மலைகளில் வசித்தனர் என்பது தெரிகின்றது. இத்தனை சமண குரவரால் அம்மதக்கொள்கை போதிக்கப்பட்டமையாலே நாடுமுழுவதிலும் சமண சமயம் பரவித் தழைத்தோங்கிற்று. அவ் வெண்ணாயிரவரும் ஒற்றுமையுடையவர்களாய் ஒவ்வொரு காரியத்தையும் ஒருங்குசேர்ந்து ஆலோசித்து நடத்தினர் என்பது ஊகிக்கற்பாலது.

பள்ளி என்பது சமணர்கள் கோயில். பாழியென்பது சமணமுனிவர் தங்குமிடம். தீ நிமித்தங்களுந் தீய கனவுகளும் சமணருக்கும் உடன்பாடாயிருந்தனவென்பது தெரிகின்றது கூகை, ஆந்தை முதலியன அழிவு சாற்றுவதும் முதற்கண் கூறப்பட்டது. புட்களினாலே நன்னிமித்தங்கள், தீநிமித்தங்கள் உணர்வது பண்டைத் தமிழ் மக்களுள்ளும் வழக்கமாக இருந்தது. இடக்கண் துடித்தலும், ஒரு தீயநிமித்தமாகக் கூறப்பட்டது. உண்மையாகவே அவ்வமணர் தீக்குணந் தலைநின்றமையால், 'தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை வீயாது அடியுறைந்தற்று' என்ற திருக்குறளின் கருத்துப்படி அவர்கள் தமது தீச்செயலினாலேயே கெடுதி அடைந்தார்கள் என்பது யாவருக்கும் ஒப்பமுடிந்தது. அக்காலத்துச் சமணமுனிவர் பாயுடுத்துக் கமண்டலமும், மயிர்ப்பீலியுந், தடுக்கும் உடையராய்ச் சென்றனர் என்பதும், சைவர்களைக் காண்பதுங் கேட்பதும் தமக்குத் தீட்டு என்ற கொள்கையை யுடையராய் இருந்தனர் என்பதும், தீயன விளைக்கும் மந்திரங்களைப் பயின்றிருந்தனர் என்பதும், சமணரின் பெண்டிரும் துறவுபூண்டு ஒழுகினர் என்பதும், அவர்கள் நின்றுண்பவராய் இரவில் விளக்கொளியின்முன் உணவு கொள்ளாதவர்கள் என்பதும் அறியற்பாலன.

நன்னிமித்தங்களும், தீநிமித்தங்களும் வருங்காலத்தில் நிகழ்வனவற்றைத் தெரிவிப்பதற்குக் காரணம் என்னவென்று தெளிவாக விளங்கவில்லை. ஒரு கூட்டத்தார் சில

நிமித்தங்களைக் கண்டபோது தீமை விளைதலையும் நன்மை விளைதலையும் அநுபவத்தில் அறிந்து, எதிர்காலத்தில் நிக ழும் நன்மை தீமைகளுக்கு அவற்றை அறிகுறியாகக் கருது வது வழக்கமாக ஏற்பட்டது. பெரும்பான்மையும், அவ் வறிகுறிகள் மெய்யாகப் பலித்தலினாலேயே, அவைகள் வழக்கத்தில் நிலைநின்று வருகின்றன போலும். காரணம் அறியாது கைவிடப்படாதவற்றுள் நிமித்தமும் ஒன்றாகத் தெரிகின்றது. சோதிடமும் இவ்வாறே பயன் ஒன்றை மாத்திரங் கருதியே கைக்கொள்ளப்படுகின்றது. மனி தர்கள் தமது சிற்றறிவினாற் காரணந் தெரியக்கூடாத காலத்தும் பயன் கருதியாவது நம்பிக்கையுடையராதல் வேண்டும் என்பதற்குக் கடவுள் படைப்பில் இவைகள் அமைந்துள்ளனபோலும். இது நிற்க,

அக்காலத்தில் பாண்டிமாதேவியார்க்கு, அரசனுக்கு அடுத்தநிலையில் நாட்டிற்கு வேண்டுவனவற்றை நடத்தும் அதிகாரம் இருந்ததாகத் தெரிகின்றது. அரசனுக்கு மங்கையர்க்கரசியார் சிறந்ததொரு மந்திரியாராக விளங் கினர். குலச்சிறையார் அவர்க்குத் துணைநின்ற அமைச்ச ராவர். ஆதலின் மங்கையர்க்கரசியாரிடம் விடைபெற்றுக் கொண்டு குலச்சிறையார் ஞானசம்பந்தப்பெருமானை எதிர் கொள்ளச் சென்றனர். புகலிமன்னருடன் போந்த அந் தணராகிய மாதவர்கள் ஆயிரமாமறை எடுத்தார் என்றது ஆயிரக்கணக்கான சிவநாம மந்திரங்களை ஓதினமையால் என்க. தென்றற்காற்றானது தமிழ்முனிவர் வாழும் பொதி யின் மலையில்நின்று புறப்படுவதாதலின் அது 'செந்தமிழ் மாருதம்' எனப்பட்டது. குலச்சிறையார் சிவனன்பர் மாட்டு அளவிறந்த காதல் உடையவர் என்பது, அவர் திருச்சின்ன ஓசையைக் கேட்டவுடனே நிலத்தின்மேல் விழுந்து புகலிமன்னருடன் போந்த அடியார்கூட்டமானது வேண்டிக்கொண்டகாலையும், வணங்கிக்கிடந்த இடத்தி லிருந்து எழுந்திராது திருஞானசம்பந்தப்பெருமானது திருக்கரங்களாலேயே அவர் எடுக்கப்பெற்றமையாலும் அங்ஙனம் எடுக்கப்பெற்றகாலை, புகலிமன்னர் வருகையால்

தாமும் வேந்தனும் பிறரும் முக்காலத்திலும் திருவருள் உடையரானமை தெரிந்தமையாலும் இனிது விளங்கும். தம்மை எதிர்கொள்ளும்படி மங்கையர்க்கரசி பணித்தார் என்று அவர் புகலிமன்னருக்குத் தெரிவித்தது, அரசியாரின் பேரன்பை நாயனாருக்கு உணர்த்துங் கருத்தினாலென்க.

மதுரை தோன்றிய உடனேயே ஞானவள்ளலார், சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கோயில் எங்குள்ளதென்று வினவியது, சிவவடிவமான ஆலயத்தை அரனெனத் தொழும் பெரியோர் ஆர்வம்பொங்கி எழுந்தமையால் என்க. சிவனடியாரையுஞ் சிவாலயத்தையும் ஞானசமபந்தப்பெருமான் அரனெனத் தொழுதமை குலச்சிறையார் திருக்கோபுரத்தைக் காட்டியவுடன் இருகரங்களையுஞ் சென்னிமேற் குவித்து மண்மிசைப்பணிந்து, 'மங்கையர்க்கரசி' என்று தொடங்கும் திருப்பதிகம் பாடியருளினமையால் தெள்ளிதிற் புலனும். கூடன்மாநகரை அடைந்தவுடனே திருக்கோயிலுக்கே ஞானசம்பந்தப்பெருமான் மந்திரியாருடன் சென்று பேரன்பின் வடிவமாய் மெய்தானரும்பி விதிர்விதிர்த்து எவற்றையுஞ் சிவன் திருமேனியாகவே கண்டு எட்டங்கத்தினாலும் ஐந்தங்கத்தினாலும் நிலமுறப் பன்முறை விழுந்தெழுந்து திருப்பதிகம் பாடினமையாற், புகலிமன்னர் பொருவில அன்புருவரென்பது தெளியப்படும். அங்கெய்திய மங்கையர்க்கரசியாரும், மெய்த் தாயினும்மிக்க பேரன்புடையராய்ப் பேரானந்தக் கண்ணீருடன் சென்னிமேற் கைகுவித்து, மந்திரியார் பிள்ளையாரிடம் அவர் வரவைத் தெரிவித்தவுடன் பிள்ளையாரின் பொன்னடிக்கமலங்களில் விழுந்து அவரது திருக்கரங்களால் எடுக்கப்பெற்றமையாலும், வாய்குழறி 'யானும் என் பதியும் செய்த தவம் என்கொல்' என்று விளம்பினமையாலும் அவரது பேரன்பிற்கு அளவில்லை என்பது தெளியப்படும். திருக்களிற்றுப்படியாரிலே திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஞானப்பால் பருகினர் என்றுகேட்ட அளவிலேயே மங்கையர்க்கரசியார்க்குப் பால் சுரந்த

தென்று கூறப்பட்டது. பேரன்பினாலே பெண்டிர்க்குப் பால்சுரக்கும் என்பது 'இல்லா முலைப்பாலுங் கண்ணீரும்,' என்னுஞ் சிவஞானபோதம் எட்டாஞ் சூத்திரவெண்பாவினால் இனிது விளங்கும். உமை அம்மையாரினும் பாண்டிமாதேவியார் அன்பிற் சிறந்தவளென்று சிவப்பிரகாச சுவாமிகள் நால்வர் நான்மணிமாலையுள் உபசாரங் கூறியது காண்க.

"இலைபடர்ந்த பொய்கை இடத்தழுதல் கண்டு
முலைசுரந்த அன்னையோ முன்னின்—நிலை விளம்பக்
கொங்கை சுரந்தஅருட் கோமகளோ சம்பந்தா
இங்குயர்ந்தாள் யாரசொல் எனக்கு."

என்பது காண்க. சமணர் வைத்த தீயினால் ஏதாவது இடையூறு விளைந்தால் தாங்கள் உயிர் விட்டுவிடுவதே நலம் என்று மங்கையர்க்கரசியார் கூறியதும் அவரது பேரன்பை வற்புறுத்தும்.

திருஞானசம்பந்தப்பெருமான் தம் அடியாருடன் ஒரு திருமடத்தில் வீற்றிருப்பதைக் கூடக் காணப் பொறாதவராய், அவர்க்குப் பெருந்தீங்கு விளைக்கக் கருதிய சமண முனிவரது மனநிலை, எத்துணைக் கொடுமையுடையதாய் இருந்ததென்று கூறவேண்டியதில்லை. எவ்வுயிர்க்கும் இரக்கத்தைப் போதிக்கின்ற தமது சமயக்கொள்கையை முற்றிலும மறந்து சமயப் பகையினை மேற்கொண்டு சைவர்களைக் கண்டாலும் தீட்டு, கேட்டாலும் தீட்டென்னும் கொள்கையைக் கடைப்பிடித்து நின்ற சமணரது உள்ளமானது அறிவொளியற்று இருண்மயமாய் இருந்தமையால், அவர்களை இருட்குழாமாக ஆசிரியர் சேக்கிழார் வருணித்தனர் என்க. அரசனும் நியாயவரம்பில் நில்லாது திருமடத்தில் மந்திரத்தொழிலினாலே தீ வைப்பதற்கு இசைந்தனன். அங்ஙனம் இசைந்தமை தவறென்பது தோன்றினமையாலோ சமண சமயப் பெரும்பற்றினாலேயோ மனக்கவலை கொண்டு தனது படுக்கைவிட்டு அகலாதிருந்தான். மங்கையர்க்கரசியார் சிறந்ததொரு மனைவி என்பது, அவள் கவலை

யுற்ற கணவனை நோக்கி 'என்னுயிர்க்குயிராய் உள்ள இறைவா நீ ஏன் முகம்வாடி இருந்தனை' என்று வினவின மையாற் புலப்படும். கணவர்க்குத் தக்க நன்மந்திரியாத லால் அரசனை நோக்கி 'வாதில் வென்றவர்பக்கஞ் சேருதலே தகுதி' என்று அறிவுறுத்தினர்

மந்திரியாரும் பாண்டிமாதேவியாரும் சமணர் யாதாவது வஞ்சனை செய்வாரென்று அஞ்சினமையால், அன்னோர் மெய்வழியில் நில்லாது எதிரிகளைக் கபடத்தால் வெல்ல முயலுவதைத் தமது வழக்கமாகக் கொண்டார் என்பது போதரும். அரசன் தானும் சமணமுனிவர் தீ வைக்கக் கருதியதனை மாதேவியார்க்குக் கூறவில்லை. கூறி இருந்தால் அவரும் மந்திரியாரும் திருமடத்தில் தழற் படுப்பதைத் தடுத்திருப்பார்கள். மன்னனுக்கும் வெப்பு நோய் நேராதிருத்தலகூடும் அங்ஙனமாயின வெப்பு நோய் தீர்த்தற்கும் இடமில்லாதுபோகும் ஆதலின், சமணரது தீக்கருத்து இவர்களுக்கு முன்னதாகத் தெரியாதிருத்தலே விதியின்முடிபு என்று தெரிகின்றது.

இதற்குமுன்னே சமணர்கள், பலகாலத்திலும் சைவ மன்னர்க்குத் தீங்கிழைத்தனர் என்பது திருவிளையாடற் புராணத்தில் யானை எய்த படலம், மாயப்பசுவை வதைத்த படலம், நாகம் எய்த படலம் முதலியவற்றால் அறியக்கிடக்கின்றது. அப் படலங்களினாலே அவர்கள் பிறர்க்குத் தீயனகருதி இயற்றும் அபிசாரவேள்வி முதலியன வேட்பதற்கும் பின்னிடாதவர்கள் என்று அறிகின்றோம்.

மந்திர வலிமையால் தீப்பற்றச்செய்தல் கூடுமென்பதே அவர்கள் நம்பிக்கை ஒலியின் வலிமையால் ஒரு பொருளுக்குத் தட்பம் கொடுத்தலும், வெப்பங் கொடுத்தலும் கூடுமென்று மந்திரம் வல்லார் கூறுகின்றார்கள். பண்டைத் தமிழ்நூலிலே 'பறைபட வாழா அசுணமா' என்பதாலே பறையைக் கேட்டவுடன் அசுணமா என்னும் பிராணி உயிர் நீத்ததாக அறிகின்றோம். சிலவகை ஒலிகளின் தாக்கினாலே மணல்போன்ற நுண்டுகள்கள் ஒருங்கு

சேர்ந்து பலபல வடிவமெடுத்தலை மேலைநாட்டினரும் ஒப்புக்கொள்ளுகின்றார்கள். ஒலி எழுப்புவதினாலே காற்றின்வாயிலாகக் கம்பிஇல்லாத தந்திபோல ஒலியின் அதிர்ச்சியானது குறித்த பொருளினைச் சென்று தாக்கி வெப்பமுண்டாக்குதல் கூடுமென்று நம்பஇடமுண்டு.

நில இழுப்புச் சக்தியால் (Gravitation) மரத்தினின்று கீழேவிழக்கூடிய பழம் ஒன்றினை நமது கையிற் றாங்கித் தடுத்தல்போல, ஒருவனை மந்திரஒலியால் நேரிடக்கூடிய தீங்கினை அதற்கெதிரிடையான சிறந்த மந்திரஒலியால் தடுத்தல்கூடும். இக காரணம்பற்றியே, எல்லாவித மந்திரங்களிலும் சிறந்த திருவைந் தெழுத்தினாலே பிற மந்திரங்களால் விளையும் தீங்கினைத் தடுத்தொழிப்பது மிக எளிதென்பது கண்டுதெள்ளிதிற் புலனாகும். இனி மந்திரம் என்பது வேண்டுகோளாமாயின் பிறமந்திரங்களால் வேண்டப்படும் சிறு தெய்வங்களின் வலியினைப் பெருமந்திரமாகிய திருவைந்தெழுத்தின் தலைவராகிய சிவபெருமானது திருவருட்சத்தி அடக்கி ஒழித்துவிடும். அது, சமணர் தீ முயற்சி பலிக்காமையால் தெளிவாகியது.

அரசன் சமணமுனிவரது மந்திரவலியை நம்பி இருந்தானேஒழிய மந்திரவலியின்றி நேராகத் தீ வைப்பதற்கு ஒருப்படவில்லை. அவன் அங்ஙனம் ஒருப்படமாட்டானென்பதும், தமது மந்திரம் பலியாததை அறிந்தால் தமது சமயத்தில் அரசன் நம்பிக்கை இழந்து தம்மைப் போற்றமாட்டானென்பதும் அறிந்து, சமணர்கள் நேரில் தீக்கொளுவத் தொடங்கினர். அங்ஙனம் தன்னலத்தைத் தேடினமையாலே அவர்கள் எல்லாச் சமயங்களுக்கும் பொதுவாகிய நன்னெறியினின்றும் விலகிப் பெரும்பாதகத்துள் வீழ்ந்தனர். இங்ஙனம் பாதகச் செயல்புரியும் அமணரை அரசன் போற்றினது நீதிவழுவாமாதலின், "முத்தமிழ் விரகர் மன்புரக்கு மெய்முறை வழுவென மனங்கொண்டார்." இதனாலே அரசன் எச்சமயத்தார்க்கும் பொதுவான நீதியைக் கடைப்பிடிக்க வேண்டுமென்பதும், ஒரு சமயத்தார்பாற் சார்ந்து மற்றொரு சமயத்

தார்க்குத் தீமை விளைவித்தல் கூடாதென்பதும் அறியற்பாலன. முப்பத்திரண்டு அறத்துள்ளும், அறுசமயத்தார்க்கு உண்டி கொடுத்தல் ஓர் அறமாகக் கூறப்பட்டது.

அன்பு வைக்கப்பட்டவர்களுக்குத் துன்பம் நேரிடுவதாய் இருந்தால் அன்புவைப்பாற்கு அத்துன்பம் நேரிடக்கூடாதென்ற கவலையும் அச்சமும விளைதல் இயல்பு. தீய ஒழுக்கத்தைக் கண்டபொழுது ஞானிகள் சினங்கொள்ளுதல் இயல்பே. சிவனடியார்மாட்டு ஞானசம்பந்தப்பெருமான் பேரன்புடையராதலினாலும், சமணரது பாதகத்தொழிலைக் கண்டவுடன் அதனை வெறுத்தவராதலாலும், 'அச்ச முன்புறப் பின்பு முனிவுற' என்றபடி அவர் அச்சமுஞ் சினமும் உடையரானார். பிறரது நன்மையின் பொருட்டே இவை அவர்பால் நிகழ்ந்தன. அவர்கள்பால் உளதாய குற்றத்திற்கு அரசன் காரணன் ஆதலால், அரசனுக்கு வெப்புநோய் வரும்படி ஞானசம்பந்தப்பெருமான் பணித்தனர். இங்ஙனம் செய்தது, அரசன்மேற்கொண்ட கோபத்தினாலன்று. அரசனை நன்னெறிப்படுத்தி உய்விக்க வேண்டுமென்ற கருணையினாலேயே யென்க. பையவே என்பதன் பொருள் முன்னரே விளக்கப்பட்டது. மந்திரியாரும் பாண்டிமாதேவியாரும் திருஞானசம்பந்தப்பெருமானைப் பாண்டிநாட்டிற்கு வரவழைத்தமையால் இது நேர்ந்ததென்று நினைந்து, ஏதாவது அவர்க்குக் கெடுதி நேரிட்டால் தாங்கள் உயிர்விடுவதே, நலமென்று துணிந்து அச்சமும் பதைபதைப்பும் உடையராயினர். தூய உள்ளமும் பேரன்புமுடைய அவர்களது மனவருத்தமே சமணர்களுக்குச் சாவாக முடிந்தது. சமணர்களது தீயஎண்ணம் நிறைவேறியிருப்பின் அரசியாரும் அமைச்சரும் உயிர் துறந்திருப்பர். அவர்களது தவவலிமையினாலே சமணரே உயிர்துறக்க நேர்ந்தது. 'முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்' என்பது இதனால் அறிக. அரசன் சமண சமயத்தைச் சார்ந்திருத்தல் அவனது விதியினாலென்று அறிந்து அவன்பால் அரசியாரும் மந்திரியாரும் வெறுப்புக்கொண்டிலர். அரசன் மந்திரவலியால் தீக்கொளுவச் சொன்ன

தையும் அறிந்திலர். அவன்பால்வைத்த காதலால் அவ் விடுக்கணை நீக்குதற்கு விரைவுகொண்டனர்.

வெப்புநோயானது சமணர்கள் இட்ட தீயின்தன்மை உடையதாக, அவர்கள் பாதகத்திற்குத் துணைபுரிந்ததற் குத் தண்டனையாக, அரசன்பாற் றோன்றியதாகலின், அது மருத்துவர்களால் தீர்க்க முடியாதுபோயிற்று. சமணர் பாதகத்தின் பயனான வன்பிணி அவர்கள் செய்த மந்திரங் களால் மிகுதிப்பட்டு நெய் சொரிந்த தழல்போலாயிற்று. இதனால் அரசனும், அவர்கள் செய்த தீயசூழ்ச்சிக்குத் தான் உடன்பட்டதன் விளைவாகவே வெப்புநோய் தோன் றியதென்பதை உணர்ந்தே, அவர்கள் ஒருவரும் தான் இருக்கின்ற இடத்தில் இருக்கக்கூடாதென்ற கட்டளை இட்டனன்போலும். அரசியாரும் அமைச்சரும் அரசன் சமணரது தீயசூழ்ச்சிக்கு உடன்பட்டதை அறியாதே, அமணர் தீங்கே வெப்புநோயாக மூண்டதென்று கருதினர். அதற்குக் காரணம் பெரியோர்க்குச் செய்த தீங்கானது மிகப்பெரும் பாதகமாதலால் உடனே அதன் பயனைக் கெடுதி விளையும் என்று இருவரும் திண்ணமாக எண்ணி னமையேயாம். எவரால் நோய் ஏற்பட்டதோ அவரே அதனைத் தீர்க்கமுயன்றால் அது மிகுதிப்படும் என்பதை அரசனுக்கு இருவரும் அறிவித்தமையும் இதனை வற் புறுத்தும்.

எத்துணைத் தீமை புரிந்தாலும் மனந்திரும்பி மீள் வோரைப் பாதுகாத்தருளுஞ் சிவபெருமானது மெய்யன் பரிற் சிறந்த திருஞானசம்பந்தர் வெப்புநோயை அரசனுக் குரிய தண்டனையாகப் பணித்தும், அவன் திருந்துங்காலை அவனை உய்வித்து ஆட்கொள்ள வேண்டுமென்ற கருணை உடையராய்த் திகழ்ந்தார். அரசன் நோய்தீர்த்து வென் றவர்பக்கம் சேருதலே நலமென்ற நீதியைக் கடைப்பிடித்த அளவிலேயே, அவன் திருந்தியநிலையை அடைந்தான் என்பது தெளிவு. சமணர்பால், இருந்த மனச்சார்வு தீர்ந்தவுடனேயே, அரசன், தன்னைப் பந்தித்த பாசத்தி னின்றும் நீங்கினவன்போலானன்.

அக்காலத்தே, அரசியர் சிவிகைஏறிப் பெண்கள் புடைசூழ ஓரிடத்திற்குப் புறப்படுதல் வழக்கமென்று தெரிகிறது. மங்கையர்க்கரசியாரும் அமைச்சனாரும் முறையே சிவிகையிலும் குதிரைமேலும் திருஞானசம்பந்தர் திருமடத்திற்குச் சென்றனர் என்பது காண்க. அவ்விருவரும் விடைபெற்றுத் திருமடத்துட் சென்ற காலை, அவர்கள் திருவுள்ளத்திற் புகலிமன்னரை எவ்வாறு கருதினரோ, அவ்வாறே ஆசிரியர் சேக்கிழார் அவரது திருமேனி வனப்பை எடுத்துரைத்தார்.

> ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
> வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
> தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
> கானத்தி னெழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்.

பிள்ளையாரது திருநாமத்திற்குத் தக்கபடி அவரது திருமேனியும் ஞான மயமாகவே விளங்கிற்று. அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கினையும் தரவல்ல பெருமந்திரம் புகலும் திருநெறித்தலை நின்றாராதலின், அவா நான்மறையின் தனித்துணையாய் விளங்கினர். அரசனது வெப்புநோய்க்கும் யாவரது பிறவிநோய்க்கும் மருந்தாகிய அருளமுத இளந்திங்களாக அவர் தோன்றினமையால்,

> ‘வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தை’

என்றார். நாயனாருடைய திருவருட் பாடல்கள் பொருள் நயத்தோடு இசைநயமும் தலைசிறந்து விளங்கினமையால், அவர் கானத்தின் எழு பிறப்பாக விளங்கினர். இத்துணை மாண்புவாய்ந்த பரமாசாரியரைக் கண்டவுடன் சமணர் இழைத்த தீங்கு நினைவிற்குவர, இணையற்ற பேரன்பினராகிய அரசியாரும் அமைச்சரும் கழிவிரக்கக் கடலுள் ஆழ்ந்து நிலமுறவீழ்ந்து நெட்டுயிர்ப்புற்றுத் தமது கவலைக்கு ஒரு புணையாகப் புகலிமன்னரின் திருவடிகளைப் பற்றிக்கொண்டு ஒன்றுங் கூறாதுகிடந்தனர். அன்பின்

செயல்களை இவர்கள்பாற் கண்டதுபோலப் பிற சரித்திரங்களிற் காண்டல் அரிது. புகலிமன்னரும் அவர்கட்குத் தக்கவாறு ஆறுதல்கூறிச் சமணரை வாதிலே வென்று அரசனைச் சைவனாக்கக் கருதினர். அங்ஙனங் கருதிய காலைச், சமணர் கொள்கைகளை மறுத்து உண்மை நிறுவும் பேச்சுவாதத்தினையே அவர் வாதாகக் கருதினர் என்பது, பிள்ளையார் அரசன்பாற் சென்றகாலை ஆண்டுக் குழுமியிருந்த சமணரை நோக்கிப் 'பேசுக நம்பொருள் எல்லை உள்ளவாறு' என்று அருளினமையால் ஊகிக்கப்படும். ஞானிகள் வேண்டுவதை வேண்டியவாறே இறைவன் ஈவர் எனினும், இறைவரது திருவருட் குறிப்பின் வழியே நிற்பதனையே தமது கடனாக அவர்கள் கொள்வாராகலின், வாதில் வெல்லத் திருவருள் புரியவேண்டுமென்று இறைவனை வேண்டாது 'ஆவதும் அழிவதும் எல்லாம் அவர் செயல்' ஆதலின், இறைவரின் திருவுள்ளம் அறிவேனென்று சண்பை மன்னர் திருவாலவாயிற் புகுவாராயினர். எப்பொழுதும் சிவஞானிகள் முழுமுதற் கடவுளையே அறிவின்கட் கண்டு இன்புறுவாராய்த் தமது உயர் நெறிக்கு மாறுபட்ட எதனையும் யாவரையும் நோக்க விரும்பாராதலின் சிவனது திருவருளை மறுக்குஞ் சமணரைப் பார்த்தற்கும் இசையாத உள்ளத்தவராய்,

"நோக்கிட விதியிலாரை நோக்கியான் வாதுசெய்யத்
தீக்கனல் மேனியானே திருவுளமே"

என்று வினவினர்போலும். சமணர் சைவரைக் காண்டல் தீட்டு என்பது பற்றியும் இவ்வாறு கூறினரென்க. அமணரும் உயிர் வகுப்பினராதலின் அவர்பால் நம் நாயனார் பகைமை யில்லாதவரே. அவர்கள் கொள்கையின் இழிவை எடுத்துரைத்தல், சைவரும் பிறரும் உண்மை உணர்ந்து உய்தற்பொருட்டேயா மென்க. இது பற்றியே, ஆசிரியர் சேக்கிழாரும் புகலிமன்னரை, 'இகலிலவர்' என்றனர். ஆதலின், அமணரை வாதில் வென்றழிக்க என்றவிடத்து வென்றடக்குதலே கருதப்பட்டதாகக் கொள்க. அழித்தல் என்பது துணைவினையாக அடக்குவதை உணர்த்தி நின்

றதே யன்றிக் கொன்றழிப்பனதைக் குறித்ததாகக் கருதுதல் தவறு. புகலிமன்னர் சமணரொடு வாதினை மேற்கொண் டதும் உலகமெங்குஞ் சிவநெறி பரவவேண்டு மென்னும் பொதுநன்னோக்கத்தாலேயா மென்றுணர்க. 'ஞால நின் புகழே ஆகவேண்டும்' என்றது காண்க. ஞானசம்பந்தப் பெருமான் தழுவிக்கொண்ட வேதநெறி ஊன் பயிலாத சிவ வேள்வி என்பது, "ஊனமில்வேத வேள்வி' என்ற ஆசிரியர் சேக்கிழார் திருவாக்கினால் அறியற்பாலது.

சைவக்கொள்கைகளை மறுப்பான் எழுந்த சமணக் கொள்கை விடம் போலவும், சமணமதத்தை நிலைநாட்ட வந்தவர்கள் காலன் தூதுவர் போலவும் விளங்கினமையால், அம் மதத்தினரையும் அம்மதத்தினர் எதிர்ப்பையும் ஒழிக்க வேண்டுமென்பர்.

'ஆலமே அமுதமாக உண்டு வானவர்க்கு அளித்து'

என்றும்,

'காலனை மார்க்கண்டற்காகக் காய்ந்தனை'

என்றும் இறைவனை நம் ஆசிரியர் வழுத்தினர் என்க. இறைவரது திருவுள்ளக் குறிப்புச் சமண சமயத்தை வெல்ல வேண்டுமென்பதே என்று நம் பரமாசாரியர் எவ் வாறு அறிந்தனர் என்று விளங்கவில்லை. சிவஞானிகள் கடவுளுடைய திருவுள்ளத்தினை அறியும முறை நம்மாற் காணற்பால தன்று. இறைவரது திருவுள்ளக் குறிப்பு வேறாயிருக்குமாயின் அக்குறிப்பின் வழியே நம் ஆசிரிய ரும் நின்றிடுவர். பிள்ளையார் பாண்டியனது வெப்பு நோய் தீர்த்தற் பொருட்டு அரண்மனைக்குச் சென்றபோது அரசனைச் சூழ்ந்திருந்த சமணர்களுக்குத் தாங்கள் தோற் றுப் போவோமோ என்ற அச்சம் ஏற்பட்டதாகத் தெரி கின்றது. அரசன் தங்கள் சமயத்தைச் சார்ந்திருத்தலால் இருதிறத்தாரையும் ஒரே காலத்தில் நோயைத் தீர்க்கும் படி ஏவவேண்டுமென்றும், சைவத்தலைவர் அதனைத் தீர்த் தாலும் தாங்களே தீர்த்ததாகக் கூறவேண்டுமென்றும்

அரசனை வேண்டினது காண்க. அரசன் நடுவுநிலைமையி னின்றமையால், அதற்கிணங்காமல் மறுத்துவிட்டான்.

சிவநெறி சேருதற்கு முன் அடையாளமாகப் புகலி மன்னரைக் கண்ட அப்பொழுதே பாண்டிய மன்னன் தன்னை யறியாது கையெடுக்கலானான். அக்கணத்திலே பிள்ளையாரது திரு நோக்கினாலே அரசனும் வெம்மை நோய் சிறிது நீங்கப் பெற்றான். முன்னடையாளமாக ஒருவன்பால் தன்னறியாது செய்கை தோன்றுவது அவ னது உள்ளறிவின் செயலாகும். மனிதர் யாவர்க்கும் தமக்கே விளங்கும் வெளியறிவும் (Consciousness) அங்ஙனம் விளங்காத உள்ளறிவும் (Sub-consciousness) உள்ளனவே. உள்ளறிவில் நிகழ்வது சொப்பனத்திலும், அறிதுயிற்படுத்தல் (Hypnotism) என்னும் முயற்சியால் ஒருவனைத் தூக்கம் ஏற்பட்ட காலையிலும் நன்கு வெளிப் படும். கனவு, சுழுத்தி என்னும் நிலைகளில் இயலும் அறி வினை உள்ளறிவென்று நம்மவர் செப்புவார்கள். உள் ளறிவை அறிதுயிற்படுப்பதால் (Hypnotism) வசப்படுத் தியபொழுது அதற்கிட்ட கட்டளையை அம்முயற்சி நீங்கிய பின்னும் தானாகவே நிறைவேற்றும். உள்ளறிவு வசப்பட்ட ஒருவனை அரைமணிநேரம் கழித்துப் பத்துவரி ஒரு கடி தத்தில் எழுதச் சொன்னால், வசப்பட்ட நிலை நீங்கி அரை மணி நேரம் ஆனபின்னர் அவன் தன்னை யறியாதே அங் ஙனம் எழுதுவதைக் காணலாம். வினை வசப்பட்டவர்க் கும் இது போன்ற தன்மை உண்டு. மங்கையர்க்கரசியார் முதலியோர்கள் திருஞானசம்பந்தப் பெருமானது பெரு மையைப்பற்றி மன்னவனுக்குரைத்து அவர் அவனால் வழிபடுந் தகையர் என்றதைக் கேள்விப்பட்ட அவனது உள்ளறிவு, அவரைக் கண்டபோது வணக்கமாக வெளிப் பட்டது.

பெரியவர்கள் தமது திருக்கண் பார்வையினாலே நோய் தீர்த்தல் கூடுமென்பது பார்வையினாலும் பரிசத் தினாலும் தீக்கை செய்வதின் உண்மை அறிந்தோர்களுக் குத் தெள்ளிதின் விளங்கும். காந்தத்தைக் கண்டவுடன்

இரும்பு அதன்பால் இழுக்கப்படுதலும் ரசக் குளிகையின் முன்பாகச் செம்பு முதலியன பொன்னாதலும் அஃறிணைப் பொருளுள்ளுங் காட்சியால் நிகழ்வனவாம். கயல் மீனானது பார்வையினாலேயே தன் முட்டைகளைக் குஞ்சு பொறிக்கச் செய்யு மென்பர். வெயிலைப் பார்த்தவுடன் வெப்பமும் பசுமை நிறைந்த செடி கொடிகளைப் பார்த்தவுடன் தண்மையும் நாம் உணர்தல் கண்கூடா மன்றோ. அருள் நிறைந்த பார்வையினாலே தண்மையே விளையும். கோபங்கொண்டகாலை உடம்பிலும் வெப்பந் தோன்றுதல் யாவரும் அனுபவமாக அறியலாம். அவ்வாறே மனங் குளிர்ந்தபோது உடம்புங் குளிரும். சாந்த மனமுடையோரது குளிர்ந்த பார்வை பார்க்கப்பட்டவருக்குந் தட்பத்தைத் தரும். ஆதலின் திருஞானசம்பந்தரது குளிர்ந்த பார்வையினாலே அரசனது மிகுந்த வெப்புநோய் ஒரு சிறிது நீங்கியிருத்தல் இயல்பே.

அக் காலத்திலே, முன் அறியாத பெரியோரைக் கண்டவுடன் அவரது ஊரை வினாவுதல் வழக்கம் போலும். திருஞானசம்பந்தப் பெருமான் தம்முடைய ஊர் யாதென்று மன்னவனுக்குக் கூறியபோது தம்முடைய ஊரின் ஒரு பேரைக் கூறாது பன்னிரண்டு திருப்பேரையுங் கூறியது எதனாலெனின், தம்மூரில் வைத்த அபிமானத்தினாலன்று. தமக்கு இறைவன் பேரருள் புரிந்த திருப்பதியை நினைந்த வளவில் அப்பதியின் அருட்பெருமை முழுவதும் தமது திருவுள்ளத்தே ஒருங்கு புலனாயதின் பயனாக, அத்தகைய பெருமையினை விளக்குந் திருப்பேர்கள் அனைத்தையும் அமைத்துப் பதிகம் பாடினார் என்க. தமது விடையைத் திருப்பதிகமாகக் கூறியதால் அப்பதிகம் முழுவதிலும் அப் பன்னிரண்டு பெயரையும் அமைத்துக் கூறினார். திருப்பதி வணக்கம் திருவருட் சத்தி வணக்கமாகவுங் கொள்ளப்படும்.

'குறைகுடம் கூத்தாடும்' என்றபடி சமணர்கள் பிள்ளையாரைக் கண்டபொழுது அவரைச் சூழ்ந்து வீண் ஆரவாரஞ் செய்தனர். வெப்புநோய் தீர்த்தல் தங்களால்

இயலுமோ இயலாதோ என்றஞ்சிப், பேச்சுவாதிற் பிள்ளை யாரை வெல்லலாம் என்றெண்ணினர் போலும். அதனாலே அவர்கள் அளவிற்கு மிஞ்சிக் கூக்குரல் விளைத்தார்கள் போலும். 'மங்கையர்க்கரசியார்' அஞ்சினமையாலும் அது தெள்ளிதிற் புலப்படும். 'சித்தாந்தத்தே சிவன் திருக் கடைக்கண் சேர்த்தி' என்றவண்ணம் சிவனது பேரருள் பொங்கி விளங்கும் மெய்ச் சைவத்திற்கும் திருவருள் விளக்கமில்லாத சமண சமயத்திற்கும் உள்ள வேறுபாட் டைப் பாண்டிய மன்னன் தமது உடலிலேயே வலப்புறம் இன்பமயமாயும் இடப்புறம் துன்பமயமாயும் இருந்ததின் வைத்து உணர்ந்தமையால் அநுபவ ஞானம் உடையவ னானான். இங்ஙனம் உண்மையைத் தனது அநுபவத்திற் கண்ட பின்னர் அரசன் சைவனாதற்கு யாது தடை இருத் தல் கூடும்? எத்துணை காலம் போதனை செய்தாலும் திருந்ாதவர்கள் ஒரு நொடிப்பொழுதில் நிகழும் அநு பவத்தின் பயனாகப் பெரிதுந் திருந்திவிடுவர் என்பதை இம்மன்னன் சரித்திரத்தால் நன்கு அறியலாம.

திருஞானசம்பந்தர் வெப்பு நோயைத்தீர்த்த பின்னும் அரசன் வேறு வாது வேண்டாமென்று குறிப்பித்த பின் னும் மயக்கமிக்க அமணர் அனல் வாதினால் தாம் வெல்லலா மென்றெண்ணியது தமது சமயத்திற் காரணமில்லாது வைத்த கழிபெரும் பற்றினாலென்க. தாம் திறமற்றவர்க ளாக விருந்தாலும தமது சமயக்கொள்கை உயர்ந்ததாக லின் அக்கொள்கையை எழுதிய ஏடு அனலில் நிலைபெறும் என்று கருதிய நம்பிக்கையே அவர்கள் மேலும் வாது செய்தற்குக் காரணமாயிற் றென்பாரும் உளர். திருவருள் வசப்பட்டு நின்று நம் நாயனார் திருப்பதிகங்களைப் பாடி யருளினமையால் அவர் உரை திருவருள் உரையாகும்; ஆதலால் தமிழ்த் தேவாரத்திலேயே கயிறு சாத்திப் பார்த்து அனலிலிடுதற்குரிய திருப்பாட்டினைத் தெரிந் தெடுப்பாராயினர். நம நாயனார் பாடுந் திருப்பதிகங்களை அடியார்கள் அவ்வப்போது எழுதிச் சேர்த்து வைத்தனர் என்பதும் இதனால் விளங்கும். எடுத்த திருப்பதிகமானது

அனலின்கண் நிலைபெறுதலைத் திண்ணமாக எண்ணுவார் 'தளிர் இளவளர் ஒளி' என்னும் திருப்பதிகம் பாடியருளினார். எண்ணிய எண்ணியாங்கெய்தும் பிள்ளையார் தம்மைச் சார்ந்தவருக்கு உறுதி யுரைத்தற்பொருட்டு இப்பதிகம் அருளிச்செய்தனர் போலும். செந்தீயானது கடவுளது பூதத் திருமேனிகளுளொன்றாமாதலின் திருவருள் வடிவமாகிய திருப்பதிக ஏட்டினைப் பசுமையொடு விளங்கும்படி செய்தது. அனலானது இறைவர் போலவும் திருவேடானது உமையம்மைபோலவும் இருந்தமையால் இறைவரைத் தழுவிய இறைவிபோலத் திருவேடு தழைத்து மிளிர்ந்தது. சமணர் இட்ட ஏடானது எப்பொருளும் ஆக்கும் இறைவரைப் போற்றாது, இருப்பதாம் அழிந்துபோம் என்னும் நிலையாமையைக் கூறினமையால் அது குறித்தவண்ணமே அதுவும் நெருப்பிலே நிலையில்லாது அழிந்துபோயிற்று.

அனல் வாதினில் தோற்றபின்னுஞ் சமணர் புனல் வாது செய்யக் கருதினமை ஆசைமிகுதியால் வந்த அவரது அறியாமையை விளக்கும் மன்னவன் தடுத்தும் அமணர் அடங்காமை அவரது தீவினை முதிர்ச்சியையே நன்கு விளக்கும். தம் பெருமை பாராட்டுவோர் இருமுறை வாது நிகழ்ந்த பின்னர் எதிரிகள் தம்மை மேலும் இகழ்கின்றார்கள் என்று சினந்து மூன்றாவது வாதுசெய்ய உடன்படமாட்டார். அங்ஙனம் உடன்படாமை பிற சமயத்தலைவர்கள் சரித்திரங்களிற் காணப்படும் திருஞானசம்பந்தப் பெருமானே மூன்றாவது வாது நிகழ்த்துவதற்கும் யாதொரு தடையுங் கூறாது முன்வந்தமை அவரது அருட்பெருந்தன்மையை விளக்கும். உண்மையை நிலைநாட்ட வேண்டுமென்பதே நம் பரமாசாரியரின் திருவுள்ளக் குறிப்பு. இதனால் நம் நாயனார் ஆணவமற்ற அருள்நிலையில் நின்றவர் என்பது போதரும்.

சமணரை வீண்வாதஞ் செய்யாது தடுத்தற்பொருட்டும், வீண்வாதஞ் செய்யின் அவரை ஒறுத்தற்பொருட்டும் மந்திரியார் அவர்கள் சபதஞ்செய்தே வாது நிகழ்த்த வேண்டுமென்று கட்டளையிட்டார். அங்ஙனம் அவர் தங்

கடமையைச் செய்தார். அமணர்கள் உண்மை உணரும் ஆர்வம் உடையராயின், மேல் வாது செய்வதைத் தவிர்ந்திருப்பர். அல்லது வாதில் தோற்றால் தாங்கள் எல்லாரும் சைவர்களாவதாகக் கூறியிருப்பர். அப்படிக் கூறாது தாங்கள் தோல்வியடைந்தால் இவ்வேந்தனே எங்களைக் கழுவேற்றுவானாக என்று கூறியது தமது சமயத்தில் அவர்கள் வைத்திருந்த அளவற்ற குருட்டுப் பத்தியினாலென்க. 'அளவிற்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு' என்றபடி உண்மையைக் கைவிட்டு மதாபிமானத்தையே விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டமையாலே, தோற்று உயிர்வாழ்வதினுங் கழுவேறுதல் நல்லதென்று அவர்கள் கருதினார்கள் என்று தெரிகிறது. கைக்கழு முதலியவற்றால் தமக்கு ஊறுசெய்து துன்பத்தைப் பொறுக்கும் வன்மையை அவர்கள் பழகி இருந்தனர் போலும்.

அக்காலத்தில் கொலைத்தண்டம் கழுவேற்று முறையினாலேயே நடைபெற்றிருத்தல் கூடும். எங்களை அரசன் வாளால் வெட்டிவிடுக என்று கூறாது கழுவேற்றுவானாக என்று கூறியதால் கழுவேற்றுதல் அக்காலத்து வழக்கம் என்று யூகிக்க இடமுண்டு. நீற்றறையிலிடுதலும் அக்காலத்து வழக்கம் போலும் விவிலிய நூல் வழங்கும் மேலை ஆசிய தேசத்திற் சிலுவையிலறைதல் வழக்கமாக இருந்ததுபோல, இங்கும் கழுவேற்றுதல் அக்காலத்து வழக்கமாயிருந்தது. பண்டைக்காலத்திலே பல தேசங்களிலும் மிகக் கொடிய தண்டனைகள் வழக்கத்திலிருந்தன. அக்காலத்து மக்களும் இக்காலத்தவரைப் பார்க்கிலுந் துன்பம் பொறுப்பதில் மிக்க ஆற்றலும், போர் புரிவதில் மிக்க வீரமும், உயிரைத் துரும்பாக எண்ணும் மனநிலையும் உடையவராய் இருந்தனரென்று கருத இடமுண்டு. சமணர் கழுவேற்றுவானாக என்று கூறியதை மன்னன் கேட்டு அவர்களை மீட்டும் எச்சரிக்கற்பொருட்டுச், 'செற்றத்தால் உரைத்தீர் உங்கள் செய்கையும் மறந்தீர்' என்று கழறவும், சமணர் தாங்கள் செப்பிய பந்தயத்தை மாற்றாதிருந்தனர். 'கேடுவரும் பின்னே மதிகெட்டு வரும்

முன்னே' என்றபடி ஒருங்கே அழிவெய்தாம் ஊழினாற் பிணிக்கப்பட்ட சமணர் அவ்வாறு பிடிவாதமுற்றனர். அந் நாளிலே மதுரை மூதூரிலேயிருந்த குடிகள் பலரும் சைவ சமயத்தின் உண்மையை உணர்ந்தனர் என்பது,

'புரிசடை அண்ணல் நீரே
பொருளெனக் கண்டோமென்பார்'

என்பதால் தெள்ளிதிற் புலனாகின்றது. சமண முனிவர் கொடிய வஞ்சனை பயின்றவரென்றும், இரும்பு நெஞ்சின ரென்றும், அவர்கள் தங்களுக்கு இறுதியைத் தேடிக் கொண்டார்களென்றுந், தோற்றவர்கள் கழுவிலேறுவதே நியாயமென்றும், அற்றைநாண் மக்கள் கருதினரென் பதுஞ் சரித்திரத்தால் அறியக்கிடப்பன. சமணர்கள் அளவிற்கு மிஞ்சிய ஆத்திரத்தினால் அறிவு மழுங்கி முன் தோற்றவர் பின் தோலார் என்று பிழைபடத் துணிய லாயினர். காரணமின்றி இங்ஙனம் எண்ணியது இவரது அறியாமையினாலன்றோ? அவர்களது 'அத்தி நாத்தி' என்ற மந்திரம் 'இருப்பது இல்லை' என்ற பொருள்படுத லால், ஆசிரியர் சேக்கிழார் அவர்களை 'மெய் அடுபவர்' என்றார். ஒரு முழுமுதற் கடவுளின் கருணையை நாடாது உலகப்பொருளின் நிலையாமை ஒன்றினையே கடைப்பிடித்து நின்றாராதலின், திருவருள் பெற்ற பிள்ளையாரின் முன்னே சமணர் நட்டாற்றிற் கைவிடப்பட்டவரானார். தாங்கள் தோல்வியடைந்ததோடு நில்லாது, பிள்ளையாருந் தம் முடைய ஏட்டை ஆற்றிலே இடவேண்டுமென்றனர். இதனால் அங்குக் குழுமிய மக்கள் தம்பாற் சிறிதும் இரக் கங் கொள்ளாததற்குங் காரணமாயினர். பிள்ளையார் இடுந் திருவேடு சைவருக்குஞ் சமணருக்கும் நிகழ்ந்த வாதின் முடிவினைக் குறிக்குமாதலின் சைவக்கொள்கைகளை இனி துணர்த்துதற்பொருட்டும் அம் முடிவினைச் சிறப்பித்தற் பொருட்டும் பழைய பதிகங்களுள் ஒன்றினை எடுத்திடாமற் புதிதாக அரிய திருமுகப்பாசுரம் பாடுவாராயினர். மேலும் பாண்டிய மன்னனுக்கு உண்மைப்பொருளை உபதேசித்தற் குரிய பக்குவம் வந்துற்றமையால் அங்ஙனம் உபதேசித்தற் பொருட்டுந் திருப்பாசுரம் பாடியருளினார். சைவசித்தாந்தக்

கொள்கைப்படி உயிர்கள் பெருந்தவத்தினாலே இருவினை யொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் உடையராய காலத்துச் சிவபெருமான் குருவாக எழுந்தருளி உண்மை உணர்த்துவார் என்பது அறியற்பாலது விடியுமுன் குமரி இருட்டுப் பரவியிருத்தல்போல, பாண்டிய மன்னன் திருவருள் பெறுதற்குமுன் சிறிது காலம் சமண சமயத்தில் கிடந்து உழன்றனன். அது, அவன் செய்த பழவினையின் பயனே. அப் பழவினை நீங்கிய காலம், திருஞான சம்பந்தர் அவனது வெப்பு நோயைத் தீர்த்தபோதென் றுணர்க. கதிரவன் உதயமாங் காலைக் குமரி இருட்டு நீங்குதல்போலத் திருஞானசம்பந்தப் பெருமானைக் கண்ட வுடன் அரசனது அமண் சமயப்பற்று ஒழிந்தது. நடு நிலையில் நின்று வென்ற பக்கஞ் சேரக் கருதிய அவனது மனநிலை அவனது இருவினை ஒப்பிற்கு அடையாளமாகும். இருவினை ஒப்பென்பது நல்வினைப் பயனையும் தீவினைப் பயனையும் விரும்பாது இரண்டினையும் உயிர்க்குக் கட்டாகக் கருதும உள்ள நிலையைக் குறிக்கும். அந்நிலையிலே உயிரானது கடவுளுடைய திருவடியை அடையக் கருதி அவனது திருவருளை மிக ஆவலோடு எதிர்பார்த்து நிற்கும். அப்போது அவனது உணர்ச்சியில் திருவருட்சத்தி பதிதலே சத்திநிபாதம் எனப்படும். திருஞானசம்பந்தரால் திருவருட் சத்தியின் வடிவமான திருநீறு பூசப்பெற்ற வுடன் பாண்டிய மன்னன் சத்திநிபாதம் உடையவனானன். தன்னைப்பற்றிய அறியாமை நீங்கினமையான் மலபரிபாக முற்றவனானன். திருவருட்சத்தி பதியப்பெற்றவுடன் முதல்வனை அறியுந் தகுதியை அவன் அடைந்தான்.

"திருநீறு பூசப்பெற்று முன்னை வல்வினையின் நீங்கி முதல்வனை அறியும் தன்மை துன்னினன், வினைகளொத்துத் தலையென நிற்றலாலே" என்றார் ஆசிரியர் சேக்கிழாரும் திருமுகப்பாசுரத்தின் கருத்துக்களைப் புராண ஆசிரியர் தெளிவாகக் கூறியுள்ளார்.

அந்தணரையும், வானவரையும், ஆக்களையும், அரசனையும், மழையையும், உலகத்தையும், வாழ்த்துதல் பண்டைத்

தமிழர் மரபென்று 'அமரர்கண் முடியும் அறுவகையானும்' என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற் குறிக்கப்பட்டுள்ளது. ஆசிரியர் திருவள்ளுவனாரும் வான்சிறப்பென்னும் அதிகாரத்துள் மழையையும் 'பசும்புற்றலை காண்பதரிது' என்ற விடத்துக் குறிப்பாகப் பசுவையும் 'சிறப்பொடு பூசனை செல்லாது' என்றவிடத்து வானவரையும் 'யார்யார்க்கும் வானின்றமையாது ஒழுக்கு' என்றவிடத்து உலகத்தையும், நீத்தார் பெருமையுள் அந்தணரையும, அரசதிகாரத்துள் 'முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும்' என்றவிடத்து அரசரையும் வாழ்த்தியது காண்க. வைதிக நெறியிலே அத்தகைய உலக நன்மையின்பொருட்டு நெருப்பில் இறைவனையும் அவன் பரிவார தேவதைகளையும் வழிபட்டு வேள்வி செய்யவும், சைவநெறியிலே சிவபெருமானுக்குரிய பரிவார தேவதைகட்குப் பூசனை இயற்றவும் கடமைப்பட்டவர்களாதலின் அவர்கள் வாழ்த்தப்பட்டனர். உலகத்தை ஆளுகின்ற எவனும் மன்னவன் ஆதல்போல அழகிய தண்ணருளுடன் பிறர் நன்மையின்பொருட்டு இருநெறியிலுங் கடவுள் வழிபாடு செய்யும் எம்மரபினரும் அந்தணரே ஆவர். பிறப்பினால் அந்தணர் என்பவரைப்பற்றி யாதுந் தேவாரத்துட் கூறப்பட்டதாக எண்ண இடமில்லை. தேவாரம் முழுவதிலும் சாதி வேற்றுமையைப் பற்றிய விவகாரம் யாதுமில்லை. 'ஞால நின்புகழே' என்பது நோக்கத்தக்கது. இனி விண்ணவரை வாழ்த்தியது, விண்ணவர்கள் இறைவனது கட்டளைப்படி வழிநின்று உலகினர் வழிபாடேற்று அவர்கட்கு நன்மை செய்யுங் கடப்பாடுடையராதலாலென்க. தூய வழிபாடியற்றும் மக்களுக்குப் பசுவினில் தோன்றும் ஐந்து பொருளும் வழிபாட்டிற்குப் பயன்படுதலாற் பசுக்கூட்டத்தினைப் பிள்ளையார் வாழ்த்தினரென்க. உயிர்களைக் கடவுளுடைய திருவருட்கு உரிமை பெறுவண்ணந் தடுக்குந் தீயனயாவும் மேற்படாதொழிக என்பார், 'ஆழ்க தீயதெல்லாம்' என்றார். உலகமெங்குஞ் சிவநாமமே பரவவேண்டுமென்றது திருவைந்தெழுத்தின் உண்மைக் கருத்தாகிய முப்பொருள் உண்மையை யாவரும்

அறிந்துய்யவேண்டுமென்ற கருத்தாலென்க. அதுவே துயர் தீர்க்கவல்லதாகலின் 'வையகமுந் துயர் தீர்க' என்று முதற்றிருப்பாட்டினை முடித்தருளினார்

இரண்டாம் பாட்டினுள், கடவுள் காண்பதற்கு அரியவராயினும் அன்பர்களுக்குத் தோன்றியருளுவரென்பது குறிக்கப்பட்டது. உலகத்தோற்ற ஒடுக்கத்திற்குக் காரணமாகிய நெருப்பினை அடையாளமாக உடையரென்பார் அங்கை பெரியரென்றும், அறத்தையே நிலைக்களமாக உடையரென்பார், அதற்கறிகுறியாகிய ஏறுகந் தேறுவரென்றும், அடைக்கலம் புகுந்தோரைக் காப்பவர் என்பார், நஞ்சடக்கிய கண்டமுங் கரியரென்றும், எல்லாம் ஒடுங்கிய காலத்துத் தாமே தனித்து நிற்றலின் 'காடுறைவாழ்க்கையர்' என்றும் அருளிச்செய்தார். இனிப் பெரியரென்றது கருணையினாலே இவற்றையெல்லாம் ஆன்மாக்களின் பொருட்டுச் செய்தாலும் தம்பொருட்டு ஒன்றையும் வேண்டாத பெருந்தகையார் என்பதைக் குறிப்பதற்கே. உலகத்தின் வேறாகநிற்கும் அவர் நிலையை ஒருவரும் அறிகிலாராதலின் 'ஆரறிவார் அவர் பெற்றியே' என்றனர்.

இனி, அன்பர்கட்கு அருள்செய்தற்பொருட்டு அங்கையில் அனலேந்தியும் திருமால் விடையாகத் தோன்றிய காலை அவர்மீது எழுந்தருளியும் விண்ணவரைக் காத்தற்பொருட்டு ஆலம் அமுதாகக்கொண்டும், திருநடனம் அன்பர்க்குக் காட்டற்பொருட்டுத் தில்லைவனத்தில் ஆடியும் அன்பர்கட்குப் புலனாவதோர் திருமேனி கொண்டபோதிலும் அவர்க்குப் பூதங்கள் யாவும், அண்டங்கள் யாவும், பல்லுயிரும் வடிவங்களாதலின், பிறரால் அளவிட்டறியப்படாததோர் பெருவடிவினர் என்பார் 'பெரியர் யார் அறிவார் அவர் பெற்றியே' என்றாரென்றலுமொன்று.

மூன்றாவது பாசுரத்துள், பராசத்தியின் பெருமையை விளக்குவதாய் மலநீக்கத்தில் விளங்குந் திருவருட் பேற்றிற்கு அறிகுறியாகிய திருநீற்றினை நறுமணப்பொருளாகத் திருமேனியில் அணிவார் என்றமையானும், 'தந்தை தாய் இலர்' என்றமையானும், எவற்றையும் தம்

மகத்தடக்கித் தாம் ஒன்றிலும் அடங்காது தோற்றக் கேடுகளில்லாதவராய் இருப்பரென்பது பெறப்பட்டு வீட்டின்பத்தைக் கொடுக்க வல்லவர் அவரே என்பதை அறிவுறுத்தியவாறு காண்க. இதனால் 'அந்தமும் ஆதியும் அவரே' என்பது விளக்கப்பட்டது. முன்னைச் செய்யுளுட் போகமருளுவதும் ஈண்டு முத்தி யளிப்பதும் சுட்டப்பட்டது. வீடடைவார்க்கும் அவர் தன்மை முற்றிலும் அறிய வொண்ணாததாகலின், 'எந்தையார் அவர் எவ்வகையார் கொலோ' என்றனர்.

இறைவன் போகமும், வீடும, உயிர்கட்கு அளிக்குமுறையும் வெவ்வேறு நிலையினர்க்கு அவரவர் கருதிய பொருளாய்த் தோன்றும் அவன் மாட்சிமையும் அளவிலடங்கா; ஆகலின் அவற்றைப்பற்றிச் சிற்றுயிர்கள் ஆராய்ச்சிசெய்யுந் தகையரல்லர். அவன் பெருந்தன்மையும் அவன் அருளும்வண்ணமும் அவனுடைய திருவடிக் கமலங்களை வழிபட்டு அவன் அருளாலும் அறிஞர் வாயிலாகவும் உணரப்பெறின் வினைநீக்கமும் எண்ணிய கருத்து நிறைவேற்றமும் மக்களடைவார் என்பதை நான்காவது திருப்பாசுரத்துட் குறிப்பித்தார்.

சிற்றுயிர்கள் அனுமான வாயிலாகவும் உதாரணவாயிலாகவும் இறைவனை அறிய முயலவேண்டுவதில்லை. அங்ஙனம் அறிதலும் இயலாதகாரியம். அவன் உண்மை அன்பருக்கு அனுபவப்பொருளாய் அண்டத்திலும் பிண்டத்திலுங் கலந்து பேரொளியாய் விளங்குதலின் அவனே யாவற்றிற்கும் ஆதாரமென்று மனம்பற்றி மெய்யன்பு செய்தவிடத்து எத்துன்பமும் நீங்கி வேண்டுவனவெல்லாம் பெறுதல் திண்ணமென்பதை ஐந்தாவது திருப்பாசுரத்துட் குறிப்பித்தார் உயிர்களை உய்வித்தற்பொருட்டே ஐந்தொழிலாகிய திருநடனம் ஆடியும், கூற்றத்தை உதைத்து அழியா வாழ்வளித்தும், அருள்நூல்கள் ஈந்தும் இறைவன் கருணை காட்டினரென்பதை அறிவுறுத்தற்கு முகத்தான் தம்புகழ்நாட்ட அவற்றைச் செய்திலனென்று ஆறுவது திருப்பாசுரத்துட் குறிப்பித்தார்.

கழிபேரன்பிற்கு எடுத்துக்காட்டாகச் சண்டேசுர நாயனார் திருவருள்பெற்ற விதத்தை ஏழாவது திருப்பாசுரத்துட் குறிப்பித்தார். அவர் அருஞ்செயல் வல்வினையாதலின், மெல்வினைவழி நடக்கும் உலகத்தினரும் அவனை வணங்கி உய்யலாம் என்பதை உணர்த்துவான் சூதமுனிவர் கூறிய புராண வரலாற்றினை எட்டாந் திருபபாசுரத்துள் தழுவிக்கொண்டனர். இனி, தேவர்களுட் சிறந்த திருமாலுஞ் சிவபெருமானை வழிபட்டுச் சக்கரம் பெற்றதை எடுத்துரைத்து விண்ணவர்க்குப் போகம் அருளுபவனும் இறைவனே என்று ஒன்பதாந் திருப்பாசுரத்துட் குறிப்பித்தார் விண்ணவர்க்கும் நிலையாமையை யுணர்த்தி ஆட்கொள்ளும் முழுமுதலென்பார் பத்தாந் திருப்பாசுரத்தினுள் மாலயன் முதலிய தேவர் அமுதுண்பான் இறைவன் ஆலமுண்டமை எடுத்து இயம்பினார். பதினோராந் திருப்பாட்டினுட் செந்தமிழ்க்கலைக் கழகத்தினை முன்னாள் இறைவன் மதுரையில் நிலைநாட்டிக் கல்வியின்பயன் கடவுள் வழிபாடென்று அறிவுறுத்தியதூஉம், திருப்பாசுரம் பாடியகாலத்திலே சமணர்விட்ட ஏடு நீரோடு கழியவிடுத்து, சிவனடிப் பேரன்பே யாவருங் கடைப்பிடிக்க வேண்டுமென்று வற்புறுத்தி யருளினமையுங் குறிப்பித்தனர். பன்னிரண்டாந் திருப்பாசுரத்துட் பாசுரம் வல்லார்கள் வானோருலகாளவும் வல்லரேயென்று பதிகப்பயன் கூறியருளினர்.

திருமுகப் பாசுரம் சிவஞானபோதச் சூத்திரம்போலப் பன்னிரண்டு திருப்பாட்டுடைமை காண்க.

திருமுகப்பாசுரத்தின் முதற்பாட்டில் 'வேந்தன் ஓங்குக' என்று பாடியருளினமையால் பாண்டியனது கூன் நிமிர்ந்ததை ஆசிரியர் சேக்கிழார் தன்னைப்போற்றிய மன்னவனாகிய அநபாயனது செங்கோலுக்கு உவமை கூறினார்.

எம்பிரான் சிவனே யெல்லாப்
பொருளுமென் றெழுது மேட்டில்
தம்பிரா னருளால் வேந்தன்
றன்னைமுன் னோங்கப் பாட

அம்புய மலராள் மார்பன்
அநபாய னென்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோ லென்னத்
தென்னன் கூன்நிமிர்ந்த தன்றே.

அநபாய மன்னன் சமணர் நூலின் சார்பினீங்கிச் சேக்கிழாரது மதிநிரம்பிய உரையால் சைவப் பெருமக்கள் சரித்திரங் கேட்கத்தொடங்கும் மனநேர்மை பெற்றது ஈண்டு நினைவிற்கு வருகிறது. சமணர் ஏடு எவ்வாறு கடலைநோக்கி யோடியதோ அவ்வாறே பிள்ளையாரது திருவேடு நதியின்மூலத்தைநோக்கி விரைந்துசென்று பின்னுமோர் திருப்பதிகத்தால் நிலைபெற்றெடுக்கப்பட்டமை யாவர்க்குந் திருவருளின்மையின் இழிபும் திருவருளுண்மையின் உயர்வும் உள்ளங்கை நெல்லிபோல் விளக்கினமை காண்க. முழுமுதற்கடவுள் சிவபெருமானே என்பதையும் அவரே ஒப்பற்ற பேரருட்டலைவர் என்பதையும் இவ்வருஞ்செயல் விளக்கிற்று.

அரசன் சமணரைக் கழுவிலிடும்படி கட்டளையிட்டது அவர்களது தீயஒழுக்கத்திற்குத் தண்டனையாக அதனைக் கருதியமையாலேயன்றி அன்னோர் தோல்வி எய்தியதற்காக அன்று. 'முன்னமே பிள்ளையார்பால் அநுசிதமுற்றச் செய்தார்............முறைசெய்க' என்றமையால் அஃது அறியற்பாலது. சமணமுனிவர் நீதிநெறிநின்று வாது இயற்றுதலைவிட்டுப் பிள்ளையாரையும் அவரது அடியாரையுந் திருமடத்தில் தீக்கொளுவுதலாலே அச்சுறுத்தி ஓட்டக் கருதியதும் அரசனை வஞ்சித்து மந்திரத்தாலன்றி நேராகத் தீக்கொளுவியதும், வெப்புநோய் நீக்க முயன்றகாலை இருதிறத்தாரையுந் தீர்க்கச்சொல்லிப் பிள்ளையார் தீர்த்தாலும் தாங்களுந் தீர்த்ததாக அரசன் பொய்புகலவேண்டுமென்று விருமபியதும், பிள்ளையாரோடு இருமுறை வாதுசெய்து தோற்றபின்னுஞ் செற்றமிகுந்து கழுவேறுவதாக ஒட்டி வீணுக மூன்றும் வாதிற்கு அழைத்ததும், அரசன் எச்சரிக்கை கூறியும் அதனைப் பொருட்படுத்தாது மூன்றுவது புனல்வாது செய்ததும், உண்மை உணர்ந்த

காலையுஞ் சைவநெறியினைக் கடைப்பிடிக்க முயலாது உயிர் விடக் கருதியதும், பிறவும், அவர்கள் சிற்றுயிர்க்கும் அணுவளவுந் தீங்குசெய்தல் கூடாதென்ற தஞ் சமயக் கொள்கையும் மறந்து ஒரு சமயத்தையும் கைப்பற்ருது நல்லொழுக்கமும் இழந்து தீநெறியிற் றலைநின்றனரென்று காட்டுகின்றன. ஆதலால், பாதகத்தன்மை எய்திய அவர்கள் மேலுந் தீங்கிழையாமற்பொருட்டுக் கொலைத்தண்டத் திற்கு உரியோராயினர்கள். 'கொலையிற்கொடியாரை வேந் தொறுத்தல் பைங்கூழ் களை கட்டதனோடு நேர்' என்றபடி பயிர்கட்குக் கெடுதியில்லாதபடி களையெடுத்தல்போலக் குடிகட்குத் தீங்கு விளைக்காவண்ணம் அவர்களை அரசன் அக்காலத்து முறைப்படி தண்டித்தனன். சிவனடிப் பேரன்பர்கள் எக்குற்றத்தைப் பொறுப்பினும் இறைவ னடியார்க்கு இழைத்த தீங்கினைப் பொறுக்கமாட்டாராத லின் பிள்ளையாரும் அவர்களுக்கு விதித்த தண்டனையை விலக்காதொழிந்தனர். பிள்ளையார் சிவபெருமானது திரு வுள்ளக் குறிப்பின்வழியே நிற்பவர். சமணரோடு வாது புரிய முயன்றகாலைத் திருவாலவாயுட்சென்று இறைவரது திருவுள்ளக்குறிப்பினை அறிந்தே வாதுசெய்யத் தொடங் கினர். பிள்ளையார் மதுரைக்கு வருவதற்கு முன்னும் பின்னும் சமணர்கள் இழைத்த பலவகையான வஞ்சனை கட்கு அவர்கள் வாயினலேயே தமக்குரிய தண்டத்தை விதித்துக்கொள்ளும்படி நேர்ந்தமையால், அச் சமணர் தமது கொடிய மனநிலைமாறி இன்னொரு பிறவியிலாவது அறநெறி கடைப்பிடித்தற்குக் கொலைத்தண்டம் ஒருதலை யாக வேண்டுமென்பது இறைவரது திருவுள்ளக்குறிப்புப் போலும். அளவிறந்த மானத்தையே பற்றுக்கோடாகக் கொண்ட சமணர், தாமே கழுவேறினரென்று கேட்கப் படுதலால், உயிரோடிருப்பின் தம் மதப்பற்று என்னும் பித்தங்கொண்டு தோல்வியுற்றகாலையும் தம்மதம் நிறுவு தற்குச் சூழ்ச்சிகள்செய்து தீங்கிழைத்தல் கூடுமென்றே தெரிகின்றது. அந்நிலையில் உள்ள உயிர்களின் மனநிலை கடுந்தண்டத்தினலேதான் மாறுதல் அடையும். அங்ஙனம் மாறுதலடைந்தாற்றன் அவ்வுயிர்கள் மற்றொரு பிறவியி

லாவது அறநெறிக்கு மீளும். ஆதலின் இறைவர் அனைய தண்டனையை அச் சமணருக்கு விதித்தனர்போலும். உலகத்திலே மக்கள் பெருநோயினாலும், இடி விழுதல் முதலிய எதிர்பாராத இடையூறுகளாலுங் கழிபெருந் துன்பம் எய்துவதும், மரக்கலத்திற் சென்றோர் பலர் ஒருங்கு மாய்தலும், எரிமலைகளிலிருந்து கற்களுருகிக் கரைந்தோடும் வெள்ளத்திலே பலவூர்கள் அமிழ்ந்து மாய்வதும் ஆங்காங்குள்ள மன்பதைப் பகுதிகளின் வினைப்பயனே என்பது உண்மைநூலார் கொள்கை. அவரவர் செய்த வினைக்குத் தக்க பயனை இறைவன் கொடுப்பது குற்றமாகாது; ஓருயிரையும் வருத்துவது கடவுளுக்கு விருப்பமில்லையென்பது தெளிவு. உலகத்தில் நிகழும் யாவும் கடவுளது ஆணையின் படியே நடக்கின்றனவென்பதுந் தெளிவு. ஆதலால் நேரிடும் இடும்பைகள் உயிர்களது தீவினையின் பயன்களே. வினைக்குத்தக்க பயன்கொடுக்கும் அதிகாரம் இறைவனுக்குரித்தாதலால், மக்கள் ஒருவர்க்கொருவர் தீங்குவிளைத்தல் ஆகாது. மக்களுள் அரசர் முதலாயினோர் குற்றவாளிகட்குத் தண்டம் விதித்தல் பொதுநன்மையைக் கருதுங் கடமை அவருக்கு உண்மையினாலென்க. இச் சரித்திரத்தில், அரசன் முறை செய்தமையாலும், இறைவர் திருவுள்ளக் குறிப்பும் அஃது ஆதலாலும், அடியார்க்கிழைத்த பெருந்தீங்கைச் சிவஞானிகள் பொறுக்கமாட்டாராதலாலுந் திருஞானசம்பந்தர் அவனைத் தடுத்திலர்.

கழுவேற்றுதல் கொடிய முறையோ, நன்முறையோ என்ற ஆராய்ச்சியைத் திருஞானசம்பந்தர் மேற்கொள்ளவில்லை. அத்தகைய அரசியல் முறைகளை ஆய்தற்கு எப்பொழுதும் பரமே பார்த்திருக்கும் பேரன்பர் தமது கருத்தினைச் செலுத்தமாட்டார். திருஞானசம்பந்தப்பெருமான் அரசியன் முறையை உலகத்திற்குப் போதிக்க வரவில்லை. பிறநாட்டிலும், சமயத்தலைவர்கள் அரசாங்கச் செய்திகளில் தமது கவனத்தைச் செலுத்தவில்லையென்பது தெளிவு. உதாரணமாகச் சிலுவையிலறைதல் கொடுந் தண்டம் என்று கிறித்துநாதர் அவர்காலத்து மக்களுக்குப்

போதிக்கவில்லை. திருஞானசம்பந்தப்பெருமானும் சைவத் திருநெறியை உலகெங்கும் பரவச்செய்வதிலும், பேரன் பினால் கடவுளை நினைந்துருகிப் பேரின்பம் நுகர்வதிலும், இறைவன் திருவருட்டிறத்தைப் பாராட்டுவதிலும் தமது திருவுள்ளம் செல்லும் இயல்பினராயிருந்தமையால் அரசி யன்முறை முதலிய உலகச் செய்திகளில் தமது கருத்தைச் செலுத்தி இது தக்க தண்டமென்றும் தகாத தண்டமென் றும் ஆராய்ந்துரைத்திலர் என்க. இது நிற்க,

பாண்டியமன்னன் திருநீறணியவே 'மன்னனெப்படி மன்னுயிரப்படி' என்றபடி அவன் குடிகள் யாவரும் திருநீ றணிந்து சைவர்களாயினர். ஆசிரியர் சேக்கிழார் எங்கும் வேத நீதியாயிற்று என்றது, சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக்கொண்டு அவரையும் அவர் பரிவார தேவர்களை யும் பயன்கருதி வேள்வியினால் வழிபடும் பொதுமுறை நாடெங்கும் பரவியதென்பதையே குறிக்கும். அவ்வாறன் றெனின், 'அரன் நாமமே சூழ்க' என்றதற்கு முரணாகும். யாவற்றையும் படைத்தழிக்கும் முதல்வனது உண்மை யைச் சமண்சமயம் மறைத்திருந்தமையால் அதனை அம ணிருள் என்றார் ஆசிரியர் சேக்கிழார். எல்லாம் திருவருட் செயலினாலே நிகழ்ந்தமையால் யாவரும் திருவாலவாயிற் சென்று இறைவனை வழிபட்டார்கள். தமக்கு ஒரு புகழை யுங் கருதாது திருவருள்வழி நின்றாராதலின், இறைவனது திருவிளையாட்டினை நினைப்பதே நியமமென்று புகலிமன் னர் இன்றமிழ்ப் பதிகம் பாடினார். சமணர்களால் வந்த இடையூற்றிற்கு அஞ்சவேண்டாமென்று முன்னேயே இறைவன் குறிப்பித்ததாகப் புகலிமன்னர் கருதினமை 'ஐயனே அடியனேனை அஞ்சலென்றருளவல்ல மெய்யனே' என்றமையால் இனிது விளங்கும். திருஞானசம்பந்தப் பெருமான் மதுரைக்கு எழுந்தருளினமையால், பிறவிப் பிணியும் வெப்புநோயும் ஒழியப்பெற்றுண்மை கண்ட மன்னன் கடவுளை நோக்கி, 'இன்னருட் பிள்ளையாரைத் தந்தனை' என்று வழுத்துவதும் இயல்பே. திருவாலவாயிற் பாடிய திருவியமகத்திற் பாணபத்திரற்கு அருள்புரிந்தமை

பிள்ளையார் குறித்தருளினதாகச் சுவாமி வேதாசலம் முதலிய அறிஞர் செய்த தற்கால ஆராய்ச்சியாற் புலனாதலின்,

திருவிய மகத்தி னுள்ளுந்
திருநீல கண்டப் பாணர்க்
கருளிய திறமும் போற்றி
யவரொடு மளவ ளாவித்
தெருளுடைத் தொண்டர் சூழ்ந்த
திருத்தொண்டி னுண்மை நோக்கி
யிருள்கெட மண்ணில் வந்தா
ரினிதமர்ந் திருந்தா ரன்றே.

என்பாருமுளர். என்னை? பாட்டின்கண் திருநீலகண்டப் பாணர்க்கருளிய திறமும் போற்றி என்ற வாக்கியங் காணப்படுதலால், விரிவஞ்சி அவ்வாராய்ச்சியை ஈண்டு விரித்திலம்.

சமண சமயம் நிலைபெறுமையால் சமணரது பாழி, பள்ளி முதலியனவும் நிலைபெறுமலொழிந்தன. அக்காலத்தில், இக்காலம்போலத் தந்தி, தபால் முதலியன இல்லாமை சிவபாதவிருதயர் மதுரைக்கு வந்தே தமது அருட்புதல்வர் செய்தியை அறிந்தனர் என்பதால் இனிது விளங்கும்.

திருவிராமேச்சுரத்திலே இராமன் இராவணனைக் கொன்ற பெரும் பாதகத்தை நீக்கவேண்டிச் சிவபெருமானை வழிபட்டனன் என்றமையால், போரில் நிகழ்ந்த கொலையும் பாதகமாமென்பதும், தற்காப்பின் பொருட்டுச் செய்த கொலைப்பாதகம் நீங்கச் சிவபெருமானை வழிபடுதல் இன்றியமையாததென்பதும் அக்காலத்திலேயே கருதப்பட்டனவென்று அறிகின்றோம். இந்திரன் விருத்திராசுரனைக் கொன்ற பாதகம் போகும்வண்ணந் திருவாலவாயிற் சிவபெருமானை வணங்கிய சரித்திரமுங் காண்க. சேதுவின் கடற்கரையிலிருந்தே திருக்கோணமலை, திருக்கேதீச்சரம் என்னும் ஈழமண்டலத் தலங்களைப் பாடியதாகத் தோன்றுகிறது. பாண்டிய நாட்டினைவிட்டுச் சோழ

நாட்டிற்குப் புறப்படுங்காலைத் தமது பிரிவாற்றாத மன்னர், அரசியார், மந்திரியார் மூவரையுந் தேற்றுதற்குப் புகலி மன்னர் தக்க காரணம் உரைத்தமை காண்க. அம் மூவருஞ் சிவநெறியை இடையூறு நிகழாவண்ணம் பாது காத்துப் பாண்டி நாட்டிலே அதனை வளரச்செய்வது அவர் கடமையாதலை எடுத்துரைத்தனர். அதனால், பொது நிலையில் நிற்பவர்கள் எக்காலத்துந் தம் கடமைகளை எக் காரணம் பற்றியும் கைவிடப்படாது என்றறியற்பாலது.

---

## ௬௦. புத்தரை வாதில் வென்றது

திருஞானசம்பந்தப்பெருமான் பாண்டிய நாட்டினை விட்டகன்று முள்ளிவாய்க்கரையை அடைந்தபின் கொள்ளம்பூதூர்க்குச் செல்லக் கருதியபோது இடையிலுள்ள ஆற்றில் வெள்ளம் பெருகவும், ஓடஞ்செலுத்துவோன் இல்லாமல் ஓடங்கள் மாத்திரங் கரையில் கட்டப்பட்டிருப்பவற்றைப் பார்த்து விரைந்து ஞானவள்ளலார் இறைவர் திருவடி தொழக் கருதி ஓடங்களை அவிழ்க்கச்செய்து அவற்றில் அடியார்களை ஏற்றிக் 'கொட்டமே கமழும் கொள்ளம்பூதூர்' என்னுந் திருப்பதிகம் பாடி ஓடத்தை அக்கரைக்குச் செலுத்திக் கரையேறி அடியாருடன் திருக்கோயில் வாயிலடைந்து மகிழ்ச்சியோடு இறைவனை வணங்கிப் பணிந்து பாடினார். பின்னர்ப் பல பதிகளையும் வணங்கி, 'எரியில் வேவாது நின்ற' திருப்பதிகம் பாடப்பெற்ற திருப்பதியாகிய திருநள்ளாற்றினை யடைந்து, 'பாடகமெல்லடி' என்னுந் திருப்பதிகம் பாடியருளினர். அங்கு நின்றும் புறப்பட்டுத் திருத்தெளிச்சேரியை வணங்கிச் சென்று திருப்போதிமங்கையை யடைந்து சைவர்களால் மிகவும் மங்கலமாக எதிர்கொள்ளப்பெற்றார்.

சைவர்களது முழக்கத்தைக் கண்டு பொறாமை கொண்டு சாக்கியர்கள் தங்கள் தலைவராகிய புத்தநந்தி என்பானுக்கு அதனை அறிவித்தனர். புத்தநந்தி தஞ் சமயத்தாருடன் சென்று பிள்ளையாருடைய தொண்டர்களை வாதிற்கழைத்துச் சின்னங்கள் ஊதப்படுவனவற்றைத் தடுத்தான். இதனைப் பிள்ளையார்க்கு அறிவித்தபொழுது பிள்ளையார் அவருடன் வாதுசெய்து அவர்கள் கொள்கை பொய்யென்பதை நிறுவுவதாகக் கூறியருளினர். வாது நிகழ்வதன்முன் திருப்பதிகம் எழுதும் அன்பர் ஒருவர் பிள்ளையார் திருவாக்கினாலே இடிவிழுந்து புத்தன் தலை உருண்டு விழும்படி சபித்தனர். அப்போது புத்தன் தலையும் உடலும் வேறாகப் போய்விடவே, புத்தர்கூட்டம் அஞ்சிச் சிதறுண்டு ஓடி ஒழிந்தது. இதனைப் பிள்ளையார்க்கு

விண்ணப்பஞ் செய்தகாலை அவரும் இறைவன் செயல் அவ்வாறமைந்ததென்று அரகர முழக்கஞ் செய்யும்படி பணித்தனர். அப்பொழுது அடியார்கள் செய்த திருநாம முழக்கம் வானளவும் எட்டியது.

மீண்டும் புத்தர்களெல்லாருங் கூடிச் சாரிபுத்தன் என்பவனைத் தலைமையாகக்கொண்டு மந்திரவாதமின்றி மொழிவாதஞ் செய்யவேண்டுமென்றனர். அதற்குப் பிள்ளையார் இசைந்து சத்திரமண்டபத்தில் வீற்றிருந்து சாரிபுத்தனை வரவழைத்தனர். அப்போது சாரிபுத்தனும் வந்து வாதஞ்செய்யத் தொடங்கினான். அப்போது புத்தர் சிரம் வீழ்வித்த அன்பர், சாரிபுத்தனை நோக்கி உங்கள் தலைவனையுங் கொள்கையையும் உரைக்க என்றார். அப் போது சாரிபுத்தன், பல கற்பங்களிலும் பிறந்திறந்து, மக்கள், தேவர், நரகர், விலங்கென்னும் நாற்கதிகளிலும் மாறிமாறிக் கணந்தோறும் பங்கப்பட்டுத் தோன்றும் அறிவுநிலையில், சிறந்த தானம், தவம், நன்மை, யோகம் இவற்றைச் செய்தலாற் பிறத்தலை ஒழித்தற்கிடமில்லாமல் ஞானத்தில் நின்று ஒழியாத பேரின்ப முத்திபெற்றவனாய் யாவரும் உய்யும்படி அறத்தைச் சொன்னவன் நாங்கள் தொழுகின்ற கடவுள் என்றான்.

அதற்குப் பிள்ளையாரின் அன்பர் 'நும் தலைவன் பெற்ற முத்திதான் யாது?' என்றார். உருவம், வேதனை, குறிப்பு, செய்கை, ஞானம் என்னும் ஐவகைக் கூட்டமும் அழிந்து போதலே முத்தியாமென்று பிடகத்தில் எங்கள் தலைவன் உரைசெய்தான் என்றனன். அப்போது அன்பர் ஞானம் முதலான ஐந்துகந்தமுங் கெட்டொழிந்த பின்னர்த் தலை வன் உளன் என்று அவனுக்குத் திருவடிவம் அமைத்துத் திருவிழாச் செய்தால் அப்பூசையை ஏற்றுக்கொள்வார் யார் என்று வினவலும், கந்தமாகிய வினையுடம்பு நீங்கி, எங்கோன் முத்தியிற் கலந்து இருக்கின்றான் என்றனன். இந்திரியங்கள் முதலான கருவியில்லாவிடத்து உணர்ச்சியு மில்லையே என்றார். உறங்கினவரை வைது தாக்கினவர் களுக்கு வினைப்பயன் வருதல்போல எங்கள் தலைவனை வழி

பட்டவர்களுக்கும் நன்மைவருமென்று மறுமொழி கூறி ஞன். வழிபாடு பெறுகின்றவனுக்கு ஏற்றுக்கொள்ளுத லும், ஏற்றுக்கொள்ளாமையுஞ் செய்ய இயலாதபோது அவன் வழிபாடு பெறுதல் இல்லை என்று அன்பர் கழறினர். அதற்கும் ஏற்றுக்கொள்ளவும் எதிர்த்து நீக்கவும் இய லாது துயில்வோனைக் கொன்றவிடத்து அவன் உயிர் போய்க் கொலைப்பாவம் வருதல்போல எங்கள் தலைவனுக் கும் வழிபாடு சேருமென்றான். அதற்கு அன்பர் தூங்கு கின்றவனுக்கு அவன் உடம்பிலுள்ள கருவிகள் மாய்ந்து போகா. உயிர் நிலைத்தற் பொருட்டு உடம்பகத்தே உள் ளன. அதுபோல ஐந்துவகைக் கந்தமும் ஒழிந்துபோகா. உமது கடவுளுக்கு நிலைத்திருத்தல்வேண்டும். அங்ஙனமா யின் ஐவகைக் கந்தத்தின் தொடர்பு அற்று முத்தியடைந் தானென்பது இல்லை. ஐவகைக் கந்தத்தாலெழும் அறிவு கெட்டுப்போனால், முத்தியில் இன்பம் நுகர்தல் கூடாது என்று கூறவும், எதிர்மாற்றங் கூற இயலாது நின்ற புத் தனை நோக்கி, உங்கள் தலைவன் முத்தியடைந்தானென்பது பொய்யாய் முடிந்தது என்றார்.

இனி அவன் எல்லாவற்றையும் அறிந்து உரைத்துப் போனானென்று கூறினையே, அவன் எப்படி எல்லாம் அறிந் தது அதனையுங் கூறுக, பொய்யுரைத்தாலும் அதனையு மேற்றுக் கொள்ளுவோமென்று அன்பர் வினவ, அதற்குப் புத்தன், உணர்வென்பது பொது சிறப்பு என்னும் இரண்டு வகைப்படும். எல்லா மரங்களையும் மரமென்று பொது மையில் அறிவது பொதுஉணர்ச்சி, ஒவ்வொரு மரமும் இன்ன இன்ன மரமென்று அறிவது சிறப்புணர்ச்சி. விற குக்கட்டினைத் தொகுதியாக இட்டாலும் தனித்தனியே ஒவ்வொரு கட்டையாக இட்டாலும் அதனைத் தீச்சென்று பற்றி எரித்தல்போல, அறிவும், பொதுவாகவும் சிறப்பாக வும் பொருள்களைப் பற்றி அறியும், இவ்வாறே எல்லாப் பொருள்களையும் தொகுத்தும் விரித்தும் எங்கள் தலைவன் உரைத்துள்ளான் என்றனர். அதற்கு, அன்பர், உணர் வுக்குத் தீயினை உவமையாகக் காட்டினை, அறிவுக்குவடிவம்

கிடையாது; தீயினுக்கு வடிவம் உண்டு; தீ நிகழ்காலத்திலே உள்ள பொருளைப் பற்றுமேயன்றி இறந்த காலத்திலும் எதிர் காலத்திலுமுள்ள பொருள்களைப் பற்றாது. அறிவு, மூன்று காலத்திலுள்ளவற்றை அறியுமாகில் அது தீயைப்போல்வதன்று. தீயினைப்போன்ற அறிவினையுடைய உங்கள் தலைவன் முக்காலத்தில் நடக்கும் எல்லாப் பொருள்களையும் அறிந்தானென்பது, நீ கூறிய முத்திபோலப் பொய்யாயிற்று, குறைவுபட்ட அறிவாலுரைத்த அவன் நூலும் குறைவுடையதே என்றனர்.

இதனைக் கேட்ட புத்தர்கள் தமது கொள்கை தவறென் றுணர்ந்து புகலி மன்னர் திருப்பாதம் பணிந்து சைவரானார்கள். உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் சிவ சம்பந்தமுடையன வென்பதைத் தெரிந்துய்ந்தனர்.

பின்னர்ச், சண்பைவேந்தர், பிற திருப்பதிகளை வணங்கக் கருதித் திருக்கடவூரின் பாங்கர் வந்தனர். அவ்வூரிலுள்ள அடியார்களா லெதிர்கொள்ளப் பெற்றுக் கூற்றுதைத்தபெருமானுடைய திருவடிகளை வணங்கி அங்குறையும் நாளில் திருநாவுக்கரசர் எவ்வூரி லெழுந்தருளி இருக்கின்றாரென்று அடியார்களை வினவினர். அவர் திருப்பூந்துருத்தியிலிருக்கின்றார் என்று கேள்விப்பட்டு அவரைக் காணும் பெருவிருப்புடன் பல பதிகளையும் வணங்கிக் கொண்டு காவிரியின் தென்கரையை யடைந்து திருப்பூந்துருத்திக்குச் செல்வாராயினர். ஆண்டிருந்த அப்பர்பெருமான் அவரை யெதிர்கொள்ளப் புறப்பட்டுச் சென்று அவரது திருத்தொண்டர் குழாத்துடன் கலந்து அவரது முத்துச் சிவிகையைத் தாங்கி வந்தனர். அப்போது, அப்பர் எங்குற்றார் என்று திருஞானசம்பந்தர் வினவியருள அவர், அடியேன் செய்த தவத்தினால் நமது சிவிகையைத் தாங்கும் வரம்பெற்றேன் என்றனர். அம்மொழியைக் கேட்டவுடன் ஞானசம்பந்தர் அச்சங்கொண்டு கீழிறங்கி, நீர் இவ்வாறு செய்தருளுவதேன் என்றுரைத்து வணங்கவும், திருநாவுக்கரசர், உமக்கு இது செய்யாது வேறு எது செய்யத்தகுவது என்று கூறி அவரை வழிபட்

டார். இதனைக் கண்ட அன்பர் கூட்டத்தினர் யாவரும் பெருமுழக்கஞ் செய்தனர். பின்னர்த் திருஞானசம்பந்தர், திருப்பூந்துருத்திக்குச் சென்று அங்கு வீற்றிருக்கும் பெருமானை வணங்கிப் பாடி, அப்பமூர்த்தியுடன் தங்கியிருந்தபோது அவர்க்கு, அவரைப் பிரிந்தபின் நிகழ்ந்த யாவும் எடுத்து இயம்பினர். திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தரை வணங்கித் திருத்தொண்டென்னும் பெரிய பயிர் தழைத்தோங்குதற்கு அதனைச் சூழ்ந்த பெருவேலி யானீர் என்று துதித்தனர். பிள்ளையார், அவரைத் தாமும் தொழுது, மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் என்னுமிவரது தொண்டின் சிறப்பினை எடுத்து மொழிந்தார். பாண்டிய மன்னனுக்கு உயிர்கொடுத்துத் திருநீறளித்து அரசியார்க்கும் அமைச்சர்க்கும் அவர்கள் அன்பிற்கேற்ப அருள் புரிந்து தூயமறை நெறியை நாட்டியது கேள்விப் பட்டுச் சொல்வேந்தர் மன மகிழ்ந்தார். அவர் தொண்டை நாட்டிற்குச் சென்று திருக்காஞ்சியிலே ஏகாம்பரநாதர் கழல் பணிந்ததும் பிறவுஞ் செப்பினர். அவண் சென்று இறைவனை வணங்கப் புகலி மன்னர் விரும்பினர். பின்னர், வாகீசர் திருவாலவாய்க்குச் சென்றனர்.

திருஞானசம்பந்தர் அடியார்களோடு புறப்பட்டுக் காவிரியின் வடகரையை அடைந்து, திருநெய்த்தானம், திருவையாறு, திருப்பழனம் முதலிய தலங்களை வணங்கிப் பாடி வேதிய ரெல்லாரும் எதிர்கொள்ளச் சீர்காழியை அடைந்து, முத்துச் சிவிகையினின்றும் இறங்கித் திருக் கோபுரத்தைத் தூரத்தே தொழுது, திருக்கோயில் வாயிலை யடைந்து எட்டங்கத்தினாலும் வணங்கி எழுந்து சென்னி மேற் கைகுவித்துப் பேரன்போடு வலம் வந்து, திருத் தோணியில் வீற்றிருக்கும் மாதொருபாகனுரது மலர்க் கழல்களைப் பணிந்தனர். பணிந்து தமது திருமேனியெல்லாம் புளகங்கொள்ள, ஆனந்தக்கண்ணீர்பொழிந்து உள்ளத்தெழுகின்ற பேரானந்தவெள்ளத்தில் திளைத்து 'உற்றுமைசேர்வது' என்னுந் திருஇயமகம் பாடி, அதனுள் மதுரையில் நீரின்மேலே ஏடு எதிர்ந்துசென்றதை விதந்

துரைத்தார். பின், திருப்பதிகம்பாடித் திருக்கடைக்காப்புச் சாத்தித் தோணியப்பர் திருவருள்பெற்றுத் திருக்கோயில் வாயிலையடைந்து, தந்தையாரும் மற்றோரும் பணிந்துடன் செல்ல, பெண்டிர் பலரும் இருபுறமும் வாழ்த்திசைப்பத் திருவீதிவழியே சென்று தமது திருமாளிகையை அடைந்தனர். பின்னர், திருநீலகண்டப் பெரும்பாணர்க்கும் அவர் வீட்டிற்குச்செல்ல விடை கொடுத்துத் தமது மாளிகையினுட் புகுந்தகாலை தம் தாயார் மணிவிளக்கெடுத்து எதிர்கொள்ளப்பெற்றார். அங்குச் சிலநாள் தங்கிக் காலங்கள்தோறுந் தோணியப்பரை அன்பர் குழாத்தோடுசென்று பணிந்து பாடி வைகினர். பின்னர்த் திருஏகம்பநாதரைச் சென்றுதொழக் கருதினார்.

ஓடக்கோன் இல்லாமல் திருவருளே துணையாக ஓடங்களைச் செல்லும்படி திருப்பதிகத்தினாலேயே பணித்தருளிய சிறப்பு மிகவும் வியக்கற்பாலது. இந்த அற்புதத்தைத் திருஞானசம்பந்தர் தம் பெருமை காட்டுதற்பொருட்டுச் செய்யவில்லை. திருக்கொள்ளம்பூதூரில் வீற்றிருக்கும் சிவபெருமானை வழிபடக்கருதிய பேரன்பினாலே அவ்வூர்க்கு விரைந்துசெல்ல விரும்பினமையால் இவ்வருஞ் செயல் இயற்ற நேர்ந்தது. சிவபெருமானே ஓடங்களைச் செலுத்துமபடி பிள்ளையார் திருப்பதிகத்துள் வேண்டிக் கொண்டனர். திருக்கொள்ளம்பூதூரை அடைந்த பின்னும் சிவபெருமானை இவ்வருஞ்செயல் தம்பொருட்டு நிகழ்த்தியதற்காக மிகவும் தாழ்ந்திறைஞ்சிப் போற்றினர். இதனாலும், நம் பரமாசிரியர் தற்போதமிழந்து சிவனடியே சிந்திக்குந் திருஞானமுடையார் என்பது தெளியப்படும். 'தானுமே ஆற்றின்கண் ஓடமுய்க்குந் தன்மையால் அருள் தந்த தலைவா' என்றது காண்க. அவசியமில்லாது நம் நாயனார் அற்புதங்கள் செய்வதில்லை. ஆற்றில் ஓடுகின்ற வெள்ளத்தைப் பார்த்துத் தம் அடியார் குழாங்கள் அக்கரை சேரும்வரை இருபுறமுஞ் சுவர்போல விலகிநிற்கச் சொன்னாலும் அது நிற்கும். ஓடங்கள் வழிப்போக்

கர்கள் யாவர்க்கும் பயன்படும்படியாக நதிக்கரையிற் கட்டப்பட்டிருந்தமையால், ஓடக்காரனிடம் அவற்றைப் பயன்படுத்துதலைப்பற்றிக் கூறவேண்டிய அவசியம் இலதாயிற்று. மேலும் இறைவனை விரைவில் வழிபடச்செல்லும் அன்பு மீதூரப்பெற்ற அடியார்களுக்கு ஓடக்காரனைத் தேடிக் கொண்டிருத்தல் இயலாததொன்றே.

திருக்கொள்ளம்பூதூரில் ஓடஞ் செலுத்தியதற்காகச் சிவபெருமானுக்கு நன்றியுணர்த்தினமைபோலத் திருநள்ளாற்றிலும் அத்தலப்பதிகத்தை எரியிற் பசுமையுடன் திகழச் செய்ததற்காக அங்கு வீற்றிருக்கும் பெருமானைப் பரவிப்போற்ற நேரிட்டது.

திருப்போதிமங்கையின்கண் புத்தர்களது கூட்டம் வீற்றிருந்ததாகத் தெரிகின்றது. அழிவுக்குமுன் அகந்தை என்றபடி புத்தநந்தியும் அவன் சீடர்களுஞ் சிவசின்னங்கள் ஊதுவாரைத் தடுத்தமையால் பிள்ளையாரது திருப்பதிகமெழுதும் அடியாரது சினத்திற்கு அப் புத்தர் தலைவன் இரையானான். 'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்தல் அரிது' என்றபடி அன்பர்களது கோபம் உடனே பயன்தரும் என்பதைப் புத்தனுக்கு நிகழ்ந்த கெடுதியினால் இனிதுணரலாம். அவர்களது சொல் குறித்த பயனை உடனே பயக்குமாதலின் அவர்கள் நிறைமொழிமாந்தரெனப்படுவர். சண்டேசுர நாயனார் தம் தந்தையின் தாளைத் தடிந்தமைபோல சண்டும் புத்தநந்தியின் தலையைப் பிள்ளையாரது தொண்டர் வீழ்வித்தார். அன்பர்கள் சிவனடிப் பேரன்பினால் விழுங்கப்பெற்றுத் தற்போதமிழந்து செய்யுஞ் செயல்கள் அவர்களுக்கு வினைப்பயனைத் தரமாட்டா என்பது சைவநூற் கொள்கை. . பிள்ளையாரது அன்பர் செய்தது இறைவன் விதித்த விதிபோலுமெனக் கருதி இறைவனுக்கே அச் செயலை ஒப்புவித்தற்பொருட்டு அரஎன்னுஞ் சிவநாமத்தை யாவரும் ஓதும்படி பிள்ளையார் பணித்தனர். தம்பொருட்டுப் பிள்ளையார் ஒருவரையும் வெகுளாராதலின் புத்தநந்தி பால் ஒரு சிறிதுங் கோபங்கொள்ளாது அவனோடு வாது

செய்யவே முற்பட்டனர். புத்தர் முதலியோர் தம் மதப் பற்று மிக்குடையோரென்பது, தம் தலைவன் உயிரிழந்த பின்னும் தம் சமயக்கொள்கையைப் பேச்சுவாதத்தால் நாட்டவேண்டுமென்று முற்பட்டமையால் இனிதுவிளங் கும். சாரிபுத்தனென்பாேைடு வாதும் திருப்பதிகம் எழுதும் அன்பராலேயே நிகழ்த்தப்பட்டதென்று தெரி கிறது. இங்கே வாதஞ்செய்த புத்தர் 'சவுத்திராந்திக மத' மென்னும் புத்தக் கொள்கையினரென்று தெரிகின்றது. புத்தர் நால்வகைப்படுவர். சிவஞானபோத மாபாடியத் துள் ஆசிரியர் சிவஞான யோகிகள் நால்வகைப் பௌத்தர் களின் கொள்கைகளைப்பற்றிச் சுருக்கமாகக் கூறுகின்றார். சவுத்திராந்திக மதமே தென்னாட்டிலே மிகுதியாகப் பரவி யிருந்ததாகத் தெரிகின்றது. ஏனையன வடநாட்டில் வழங் கினபோலும். அவையாவன :—யோகாசார மதம், மாத் தியமிக மதம், வைபாடிக மதமென்பன. வடநாட்டுப் புத்த சரித்திரங்களிலே மகாயானம் என்றும், ஈனயானம் என்றும் இரண்டு பிரிவுகள் இருப்பனவாகக் கூறப்பட்டுள் ளது. மகாயானம் என்பது வடநாட்டுச் சத்திமதக் கொள்கைகளையும் தழுவிநிற்பது. ஈனயானம் என்பது தான் தென்னாட்டில் வழங்கிய சவுத்திராந்திக மதம் போலும். சவுத்திராந்திக மதத்தைச் சிவஞானசித்தி ஆசிரியரும் விரிவாக மறுத்துள்ளனர். பெரிய புராணத் துட் கூறப்படுவதும் இம்மதக் கொள்கையே. இவர்களே உருவம், வேதனை, ஞானம், குறி, வாசனை என்னும் ஐவகைப்படுங் கந்தங்களின் தொகுதியால் யான் என்னும் அறிவு தோன்றுமென்றும், கந்தங் கெடுமிடத்து உடல் இலதாம் உயிரும் இலதாய்ப் போமென்றுங் கூறுவர். இதனை உணர்தலே ஞானம் என்பதும், அந்த ஞானத்தாற் பிறவி ஒழியுமென்பதும் அவர்கள் கொள்கை. அறிவுக்கு வேறாக உயிரில்லை என்பதும், அறிவானது கணந்தோறும் புதிது புதிதாகத்தோன்றி அழியுமென்பதும் புத்தர்கள் யாவரும் நம்புவன. அவர்கள் யாவர்க்கும் அக் கணபங்க வாதம் பொது. 'மாத்யமிக' ரென்பவர், தோன்றும் எல்லாப் பொருளும் சூனியமே என்னுங் கொள்கையுடை

யவர். 'யோகாசாரர்' ஞானம் மாத்திரம் உளதென்பர். 'சவுத்திராந்திகர்' புறச்சமுதாயம் அகச் சமுதாயமென்று பொருள்கள் இருவகைப்படுமென்றும், அவற்றுட் புறச் சமுதாயம் நிலம், நீர், தீ, வளி என்பன என்றும் அவ்வவற் றிற்குரிய அணுக்களின் தொகுதியால் அவை தோன்று வன என்றுங் கூறுவர். அகச் சமுதாயமே ஐவகைப்படுங் கந்தங்கள். கந்தமென்றாற் கூட்டமென்று பொருள். அகத் துள் தோன்றும் புறப்பொருளின் வடிவமும் அவற்றின் பண்பும் உருவக்கந்த மெனப்படும். இன்பமும் துன்பமும் வேதனைக் கந்தமெனப்படும். பொருள்களைப் பெயர் முதலியவற்றாற் பகுத்தறியும் அறிவு குறிக்கந்தமெனப் படும். பகுப்பின்றி அறிவது ஞானக்கந்தமெனப்படும். இனி, வாசனைக் கந்தமென்பது செய்கைக் கந்தமென்றும், பாவனைக் கந்தமென்றுங் கூறப்படும். அது நல்வினை தீவினைகளின் தொகுதி. புறப்பொருள், ஞானத்தாலன்றி நேராக அறியப்படுமென்பார் 'வைபாடிகர்.'

பெரியபுராணத்துட் கணபங்க வாதமே நன்கு மறுக் கப்பட்டது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் காலத்திலே நடந்த வாதத்தின் விரிந்த பொருளனைத்தும் ஆசிரியர் சேக்கிழார் காலத்தே அறியப்படாதிருத்தல் கூடும். வாது நிகழ்ந்த காலத்திற் பேசிய வழக்குகளை ஒருவரும் எழுதி வைத்ததாகத் தெரியவில்லை. கதைப் போக்கிற்குத் தக்க படி நடந்த வாதத்தின் ஒரு பகுதியே புராணத்துள் எடுத்து இயம்பப்பட்டது போலும்.

இனி, திருஞானசம்பந்தருந் திருநாவுக்கரசரும் ஒரு வரை யொருவர் பாராட்டி அளவளாவிய நட்பின் சீரை அளவிட்டுரைத்தல் அரிது. சிறந்த நட்பிற்கு அவர்கள் எடுத்துக்காட்டாவார்களென்பது முன்னரே குறித்தாம். இது பற்றியே, ஆசிரியர் சிவஞான யோகிகள் சோமேசர் முதுமொழி வெண்பாவுள் நண்பர்கள் அளவளாவுதற்கு இவ் விருபேரன்பரையுமே எடுத்துக்காட்டியது காண்க. திருஞானசம்பந்தர் சீர்காழிக்கு மீண்டவுடனே தம் மெய்த் தாய் தந்தையராகிய தோணியப்பரையும் உமையம்மை

யாரையுமே வணங்கச் சென்றனர். நெடுநாள் தோணிபுரத் தீசரைப் பிரிந்திருந்தமையால் பிள்ளையாரது அன்பு முகிழ்த்து விளங்கிற்று. திருநீலகண்ட யாழ்ப்பாணரும் யாத்திரை முழுவதிலும் பிள்ளையாரைப் பிரியாது உடன் சென்றனரென்பது தெரிகின்றது. திருஞானசம்பந்தர் நமது திருமாளிகையிற் சென்றபோது அவர் ஒப்புயர் வற்ற சிவஞானியாதலால் அருமறைக் குலத்துத் தாயர் வந்து அடிவணங்கினர். அவரும் திருத்தோணியில் வீற் றிருக்கும் தாயர் தாள் மனங்கொண்டு தொழுதனர். திரு மாளிகைக்கு வருபவர்களை மணிவிளக்கெடுத்து எதிர் கொள்ளுதல் ஓர் உபசார வழக்குப் போலும். பெற்றோரும் வழிபடத்தக்க நிலையில் நின்றமையால், திருஞானசம்பந்தர் உலகப்பற்று யாதுமின்றி யாவரையும் ஒரு தன்மையாகக் கருதும் பொதுநோக்குமுடைய பெருந்தகையாரென்பது தெளியப்படும்.

---

## ௧0. தொண்டைநாட்டு அற்புதங்கள்

திருஞானசம்பந்தப் பெருமான் தோணியப்பரிடம் விடைபெற்றுக்கொண்டு தம் அடியார் குழாத்துடன் தண்டகநாட்டிற்குப் புறப்பட்டார். அவர் தாதையாகிய சிவபாதவிருதயரும் உடன்செல்லக் கருதினர். அப்போது ஆளுடைய பிள்ளையார் அவரைச் சீர்காழியிலேயே அருமறை வேள்வி இயற்றிக்கொண்டு அன்போடு சிவபெருமானை வழிபட்டுக்கொண்டிருக்கும்படி பணித்தனர். அவ்வாறே வழியனுப்பி மீளுவோர்களுக்கெல்லாம் பிள்ளையார் விடைகொடுத்து மேற்சென்று தில்லை மூதூரை அடைந்து கூத்தப்பெருமான் திருநடனங் கண்டனர். பின்னர், திருத்தினை நகர், திருமாணிகுழி முதலிய திருப்பதிகளை வணங்கிப் பாடித் திருப்பாதிரிப் புலியூரை வந்தடைந்தனர். அங்கே சிவபெருமானைப் பணிந்து 'முன்னநின்ற முடக்கால் முயற்கருள் செய்து' என்று தொடங்குந் திருப்பதிகம் பாடியருளினர். அங்குநின்றும் போந்து திருவடுகூர், திருவக்கரை, திரு இரும்பைமாகாளம் முதலிய தலங்களை வணங்கித் திருவீரட்டானம் அடைந்து அங்கே பூதம்பாட நின்றாடும் பெருமானைத் தொழுது 'குண்டைக் குறட்பூதம்' என்னுந் திருப்பதிகம் பாடித் திருவாமாத்தூருக்குச் சென்றனர். திருக்கோவலூர், அறையணிநல்லூர் முதலிய திருப்பதிகளை வணங்கித் திருவண்ணாமலையை அடைந்தனர். திருவண்ணாமலையானது சிவபெருமானது வடிவாகவே இருந்ததைக் காதலாற் கும்பிட்டு, 'உண்ணாமுலை' என்று தொடங்குந் திருப்பதிகம் பாடி, அப்பதியிற் சிலநாள் தங்கி, 'பூவார் மலர்கொண்டு' என்னுந் திருப்பதிகம் இசைத்தனர்.

பின், திருவோத்தூருக்குச் சென்றபோது அங்கே அன்பர்களால் மிகவுஞ் சிறப்பாக எதிர்கொள்ளப்பெற்றுத் திருக்கோயிலை எய்திச் சிவபெருமானைத் தொழுது விழுந்து

பணிந்தெழுந்து சொன்மாலைகளால் துதிசெய்து அங்கே சிலநாள் தங்கினர். அவ்விடத்தில் ஒரு தொண்டர் சிவ பெருமானுக்காகத் தாம் வைத்து வளர்க்கும் பனைகளெல் லாம் ஆண்பனையாய்க் காயாது போயின என்றும், அதைக் கண்டு வீணுக நீர்வார்த்துப் பயன் என்? இவைகள் காய்ப் பதற்கு இடமுண்டோ என்று சில சமணர் தம்மை நகை செய்து இழித்துரைத்தாரென்றும் புகலிமன்னர்க்குத் தெரிவித்தனர். அப்போது அவர்பாற் பரிவுகூர்ந்து ஞான வள்ளலார் திருக்கோயிலுட்சென்று கடவுளைப் பணிந்து திருப்பதிகம் பாடி அதன் திருக்கடைக் காப்பதனில் 'குரும்பை ஆண்பனை ஈன் குலை' என்னும் திருவாக்கமைத் தமையால் ஆண்பனைகளெல்லாம் நிறைந்த குலைகளையுடைய பெண்பனைகளாயின. இதைக் கண்ட எல்லாரும் அளவற்ற மகிழ்ச்சியடைந்தனர். இதனை அறிந்த சமணர்களுட் சிலர் நாட்டைவிட்டகன்றார்கள்; சிலர் தமது கையிலுள்ள குண் டிகை முதலியவைகளை எல்லாம் இவற்றால் ஒருபயனு மில்லை என்று தகர்த்து எறிந்துவிட்டுச் சைவசமயம் புகுந் தனர்.

பின்னர், புகலிமன்னர் திருமாகறல், திருக்குறங் கணின் முட்டம் என்னுந் திருப்பதிகளை வணங்கிச் சென்று திருக்காஞ்சிபுரத்தை அணைந்தனர். அங்கே அன்பர்களெல்லாருங் கமுகு, வாழை, கொடி, மாலை முதலியன நிறைந்த அழகிய பந்தர்களை வீதியெங்கும் அமைத்து வீடுகளிலே வாசனைநீர் நிறைந்த கும்பங்கள் வைத்துப் பொன் விளக்கெடுத்துப் பெண்டிர் பிள்ளைகள் முதலானவர்களோடு காஞ்சி நகர்க்கு வெளியே சென்று சண்பை மன்னரை எதிர்கொண்டு வணங்கினார்கள். சண்பை மன்னருஞ் சிவிகை நின்றிழிந்து சென்னிமேற் குவித்த கையராய்த் திருவீதியினை வலம்வந்து திரு ஏகம்ப வாணர் திருக்கோயிலுட் புகுந்து இறைவரை அளவற்ற காதலோடு பன்முறை பணிந்தெழுந்து திருப்பதிகம் பாடி னார். பின் திருக்காமக் கோட்டஞ் சென்று உமையம்மை யாரை வழிபட்டனர். திருஏகம்பநாதர்க்குத் திருவிய

மகப் பதிகமும் திருஇருக்குக்குறட் பதிகமும் பாடியருளி னர். திருக்கச்சி நெறிக்காரைக்காடு, அனேகதங்காவதம், திருமேற்றளி, திருமாற்பேறு, திருவல்லம், திருஇலம்பை யங்கோட்டூர், திருவிற்கோலம், திரு ஊறல், திருத்தக் கோலம் முதலிய தலங்களை வணங்கிப் பாடி, திருவாலங் காட்டிற்கு அருகிலுள்ள திருப்பழையனூர்க்கு வந்தனர். திருவாலங்காடு, காரைக்காலம்மையாரால் தலையாலே நடக் கப்பெற்ற தலமாதலால் அவ்வூரை மிதிப்பதற்குக் கூசி அங்கே செல்லாது ஓரிடத்தில் இரவு துயில் கொள்ளும் போது திருவாலங்காட்டப்பர் அவர்க்குக் கனவில் தோன்றி நம்மைப் பாட மறந்தனையோ என்று வினவினர். அதனை நள்ளிரவிலே உணர்ந்து விழித்துக் கடவுளுடைய திரு வருட்டிறத்தினைப் போற்றி மிக உருக்கத்துடன் 'துஞ்ச வருவார்' என்னுந் திருப்பதிகத்தைப் பழம்பஞ்சுரம் என் னும் பண்ணிற் றிருவாய்மலர்ந்தருளினர். பின்னர், திருத் தொண்டர் குழாத்துடன் திருவாலங்காட்டை யடைந்து சிவபெருமானை வணங்கிப் பாடி அங்கு நின்றும் போந்து திருப்பாசூரை அடைந்து மிக்க காதலுடன் 'சிந்தை யிடை யார்' என்னுந் திருப்பதிகம் பாடி, இறைவரை வணங்கினர். திருவெண்பாக்கம் முதலிய பிற பதிகளையும் வணங்கித் திருக்காரிக்கரையைப் பணிந்து திருக்காளத்தியை யடைந் தனர். அங்குள்ள அடியார்கள் யாவரும் அவரை எதிர் கொண்டழைத்தனர். அடியார்களுடன் அங்குள்ள மலை களில் திருக்காளத்திமலை எது என்று கேட்டறிந்து 'வானவர்கள் தானவர்கள்' என்னுந் திருப்பதிகம் பாடி அதன்கண் திருக்கண்ணப்பர் திருத்தொண்டினைச் சிறப் பித்தனர். பின்னர் பொன்முகலிக்கரையை யடைந்து திரு மலையைத் தொழுது கொண்டே ஏறிப்போய்த் திருக்கோயி லுட்சென்று இறைவரைத் தொழுது மீண்டெழுங் காலைக் கும்பிட்ட பயன் காண்பார் போலக் கண்ணப்ப நாயனாரைக் கண்டு தாழ்ந் திறைஞ்சினர். அன்பின் மெய் வடிவினையும் அவ்வன்பினுள்ளே மன்னுங் கடவுளையும் உடன் கண்டமை யால் எழுந்த விருப்பங் காரணமாகப் பல முறையும் அவரை வணங்கினர்.

உள்ளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மை
யுருவினையு மவ்வன்பி னுள்ளே மன்னும்
வெள்ளச்செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண்
விமலரையு முடன்கண்ட விருப்பும் பொங்கிப்
பள்ளத்தி லிழிபுனல்போற் பரந்து செல்லப்
பைம்பொன்மலை வல்லிபரிந் தளித்த செம்பொன்
வள்ளத்தில் ஞானவா ரமுத முண்டார்
மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்கு கின்றார்.

பின்னர், அரிதிற் புறம்போந்து திருமலையின் கீழிறங்கித் திருமடம் ஒன்றில் தங்கினர். அதற்கு வடக்கே தமிழ் பயிலாத நாடாதலின் அங்கிருந்தே வட கயிலையில் வீற்றிருக்கும் பெருமானை வணங்கிப பாடினர். அவ்வாறே திருக்கேதாரம், திருக்கோகரணம், திருப்பருப்பதம், இந்திரநீல பருப்பதம் முதலிய திருப்பதிகளையும் பாடி யருளினார். தென்கயிலையாகிய திருக்காளத்தியிற் சிலநாள் அமர்ந்த பின்பு திருவொற்றியூரில் உறையும் பெருமானை வணங்குங் கருத்துடன் புறப்பட்டனர். 'சந்தமா ரகிலொடு' என்னுந் தேவாரத் திருப்பதிகம் பாடிப் பொன்முகலியைச் சிறப்பித்தனர். பின் அடியார் திருக்கூட்டத்துடன் முதல்வனார் திருப்பதிகள் பலவும் போற்றிப் பாலாற்றின் வடகரையிலுள்ள திருவேற்காட்டினை யடைந்து இறைவரைப் பணிந்து திருப்பதிகம் பாடித் திருவலி தாயத்தையும் வணங்கிப்போற்றி, ஒற்றியூரை அணைந்தபோது தொண்டர்கள் எல்லாராலும் எதிர்கொள்ளப்பெற்று 'விடையவன்' என்னும் திருப்பதிகம் பாடி யருளினர். பின்னர்த் திருக்கோயிலை யடைந்து மிகுந்த காதலோடு சிவபெருமானைத் தொழுதெழுந்து திருப்பதிகம் இசைத்தருளி அங்குத் தங்கினர்.

பிள்ளையார் அங்கிருக்கு நாளில் திருமயிலாப்பூரில் வணிகர் குலத் தலைவராய்க் கப்பல் வணிகத்தாற் பெரும் பொருள் படைத்தவராய்ச் சிவபெருமானிடத்து மெய்யன்புடையராய் அறம்புரி சிந்தையராய்ச் சிவநேச ரென்னும் பெயர் பெற்ற வணிகர் ஒருவர் ஞானசம்பந்தப்

பெருமானது பெருமையனைத்துங் கேள்விப்பட்டு அவருடைய சேவடிக் கீழ் அளவில்லாத காதல் உடையவராய் இரவும் பகலும் அவருடைய திருவருட்டிறத்தைப் பற்றிப் பேசுதலிலும் கேட்டலிலுமே பொழுது போக்கி வந்தனர். தமக்குக் குழந்தை இல்லாமையால் அவா மிகவுங் கவலையுற்று அருந்தவம் புரிந்து சிவனடியார்க்கு மிகுந்த வழிபாடு செய்ததின் பயனாக ஒருபெண் குழந்தை உதித்தனள். அதனாற் கழிபெரு மகிழ்வெய்திச் சிவநேசர் சிவபெருமானுக்கும், சிவனடியார்களுக்கும், சிவனடி மறவாத அந்தணர்க்கும் வேண்டுவன எல்லாங் கொடுத்து, உரிய பருவத்திலே தம் அருமைப் புதல்விக்குச் செய்யற்பாலனவாகிய சடங்குகளை எல்லாஞ் செய்து முடித்தார். அவர் தம் புதல்வி பூவினுறையுந் திருமகள்போலக் கவின் மிகும் வடிவத்தினளாய்ப் பண்புநிறை செல்வியாய் வளர்ந்தமையால் பூம்பாவை என்றே அவளை யாவரும் அழைத்து வந்தனர். அவளை மணம்புரியும் ஆண் மகனுக்கே சிவநேசர் தம் நிதி யெல்லாம் கொடுப்பதாகக் கூறினர். திருஞானசம்பந்தப் பெருமானது திருவருட்டிற மெல்லாங் கேட்டபோது, அவர் பெருமையைச் சொன்னவர்களுக்கெல்லாம் ஆடையும் பொன்னுங் கொடுத்து அவரைத் திசை நோக்கி வீழ்ந்தெழுந்து தம்முடைய சுற்றத்தார் எல்லாரையும் பார்த்துப் புகலிமன்னர்க்குப் பூம்பாவையையும் தமது பெருஞ் செல்வத்தையும் தன்னையுங் கொடுத்து விட்டதாகச் சிவநேசர் செப்பினர். அத்தகைய மனத்தோடன் சிவநேசர் மகிழ்ந்திருக்கு நாளில் ஒரு நாள் கன்னிமாடத்திலிருந்த பூம்பாவை தம் தோழிமாருடன் பூப்பறிக்கச் சென்று ஒரு பூவினைக் கொய்தவுடன் ஒரு பாம்பானது அவளது விரலைக் கடித்து நஞ்சு உகுத்தது. உடனே பூம்பாவை, மெல்லிய பூமாலை தீயிடைப் பட்டது போல அறிவு மயங்கித் தரையில் விழவே, சேடியர்கள் அஞ்சி அவளைக் கன்னிமாடத்தினுட் கொண்டுபோய் வைத்தனர். அப்போது வணிகரும் அவர்கள் சுற்றத்தாரும் கலக்கமுற்று அழுது மந்திரத்தினாலும் விடத்தைத் தீர்ப்பதற்குச் செய்ய வேண்டிய முயற்சிகள் யாவுஞ் செய்தனர்.

அவற்றால் ஒரு நன்மையும் விளையாமற் பூம்பாவை உடம்பில் உயிர் இருப்பதற்கு அடையாளங்கள் யாவும் இல்லாமற்போயின. ஒலிக்கின்ற கடல்போலச் சுற்றத்தார் எல்லாரும் பூம்பாவை மேல் வீழ்ந்தழுது துயரக் கடலில் ஆழ்ந்தார்கள். அப்பொழுது சிவநேசச்செல்வர் சற்றுத் தெளிவடைந்து இவ்வுலகத்திலே தம் புதல்வியின் விடத்தைத் தீர்ப்பதற்குத் தன்னுடைய பொருள்களை எல்லாங் கொடுத்துவிடுவதாகப் பறையறைவித்தார். மூன்றுநாள் வரை உலகத்திலுள்ள மந்திரம் வல்லார் யாவரும் வந்து விடத்தைத்தீர்க்க இயலாதவராய்த் திரும்பிப் போயினர். பின்னர், சிவநேசர் திருஞானசம்பந்தப் பெருமான் அவ்வூர்க்கு வரும்வரை பூம்பாவையின் உடம்பைத் தழலிடைப் படுத்தி எலும்பையும் சாம்பரான பிற பகுதிகளையும் ஒரு கும்பத்திற் பாதுகாத்து வைக்கக் கருதினர். பிள்ளையார்க்கு அவளைக் கொடுத்துவிட்டமையால் தாம் வருந்த வேண்டியதில்லை என்று தேறி எலும்பையுஞ் சாம்பலையும் பெரிய குடம் ஒன்றிற் சேர்த்துக் கன்னிமாடத்திலே அதனைக் காவலுடன் வைத்து அதற்கு அணிகலன்களையும் பூந்துகிலையும் பொருத்தி வைத்தனர் இதனைப் பார்த்து யாவரும் வியப்பெய்தி இருந்தனர். சண்பை மன்னர் திருவொற்றியூரின்கண் வந்திருக்கின்றார் என்று கேள்விப்பட்டவுடன் அந் நற்செய்தியைக் கூறியோர்களுக்கெல்லாம் தூசுந் காசுங் கொடுத்து அளவற்ற களிப்படைந்து திருவொற்றியூர்வரை நடைப்பந்தலிட்டுப் பந்தல்களில் மகரதோரணம், வாழை, கமுகு, கொடி முதலியவைகளை அணிபெற அமைத்து நிலவுலகத்திற் பொன்னுலகம் இழிந்ததுபோல அழகுறச் செய்தனர். பின்னர் அடியார் குழாத்துடன் புகலி மன்னருடைய திருவடிகளை வணங்கத் திருவொற்றியூர்க்குச் சிவநேசர் புறப்பட்டுச் சென்றார். அப்போது பிள்ளையாரும் தம் அடியார்களுடன் மயிலாபுரி நோக்கிப் புறப்பட்டு வந்தனர் இடைவழியிலே வணிகரும் தொண்டரும் காழிவேந்தரது பரிவாரத்தைத் தூரத்தே கண்டவுடனே கீழே வீழ்ந்திறைஞ்சினர். அவருஞ் சிவிகையினின்றிறங்கி வணிகர் செய்தியனைத்துங் கேட்டுக்கொண்டே

திருமயிலாப்பூரை அடைந்தனர். அவண் திருக்கபாலீச் சுரத்தை அடைந்து திருக்கோயில் வலம் வந்து சென்னி மேற்குவித்த கையராய் இறைவர் திருமுன்பெய்திப் பேரன் புடன் அவரைப் பரவினர். பின்னர்ப் புறம்போந்து வணிகரைப் பார்த்து அவர் மகளின் எலும்பு நிறைந்த குடத்தைப் பெருமயானத்து நடம்புரியும் பெருமானது திருக்கோயின் மதிலின் கண் உள்ள திருவாயிலுக்கு முன்னே உலகோர் அறியக் கொண்டுவருமபடி பணித் தனர். அவ்வாறே கன்னிமாடத்திலிருந்து ஏடுபெல்லக் கொன்றிற் குடத்தை எடுப்பித்தாக கொணர்ந்து சிவ பெருமானது சந்நிதானத்திலே அதனை இறக்கி வைத்தனர். அப்போது மயிலைமா நகரத்திலுள்ளோரனைவரும் பிற இடங்களில் வாழ்கின்றவர்களும புறச்சமயத்தாரும அத னைப் பார்ப்பதற்கு நெருங்கிவந்து கூடினர். விண்ணவர்கள விசும்பிடை நெருங்கினா. தொண்டர் குழாமும நம் நாயனாரைச் சூழ்ந்திருந்தது. அப்போது நம பரமாசாரியர் திருவருள் நோக்கினாலே எலும்புக் குடத்தைப் பார்த்து, பூமபாவையின் பேரைச் செப்பி 'மட்டிட்ட புன்னை' என் னும் திருப்பதிகம் பாடி அத்திருபதிகத்தின்கண்,

> "மண்ணாரி னிற்பிறந் தார்பெறும் பயன் மதி சூடும்
> அண்ணலாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
> கண்ணாரி னுலவர் நல்விழாப் பொலிவுகண் டார்த
> லுண்மை யாமெனி னுலகர்முன் வருகென."

உரைத்தார். அவர் திருவாக்கென்னும் அமுதமானது பெருகப் பெருகக் குடத்திலிருந்த அங்கமானது உருவமாய் வடிவெடுத்தது. எடுத்த பாட்டினில் வடிவுபெற்று, அடுத்த எட்டுப் பாட்டுக்களிற் பன்னிரண்டு ஆண்டின் வளர்ச்சி யடைந்து, சமணர் சாக்கியரைப்பற்றிய பத்தாவது திருப் பாட்டினை அருளிச்செய்தவுடன் தாமரைப்பூ விரிந்து திரு மகள் அதினின்று எழுந்தாற்போலக் குடம் உடைந்து பூம்பாவை வெளிப்பட்டனள். அப்போது அடியார்கள் அதிசயித்துச் செய்த அரகர முழக்கம் வானநாட்டினை எட்டிற்று. தேவரும முனிவரும் திருவருட்டிறத்தினை

வியந்து பூமாரி பொழிந்தனர். மண்ணவர்கள் யாவரும்
சிவபெருமானது திருவருட் பெருமையைக் கண்டு உச்சி
மேற் கைகொண்டு இறைஞ்சி வீழ்ந்தார். புறச்சமயத்தார்
எல்லாரும் அளவற்ற அதிசயமெய்தித் தாங்கள் பங்க
முற்றதாகவே கருதினர். சமணரும் கள்ளாடி வீழ்ந்தார்
கள். பூம்பாவை முன்னினும் மிகுந்த வனப்பும் ஒளியும்
உடையளாய்ச் சித்திரக்காரர் எழுதமுடியாத எழில் உரு
வொடு திகழ்ந்தனள். அயன் வயது மிகுந்த கிழவனா
யிருந்தும் தான் படைத்த திலோத்தமையின் அழகு
வெள்ளத்தைத் தன்னுடைய நான்கு முகத்தாலுங் காமுற்
றுப் பார்த்தனன். அத் திலோத்தமையைப் பார்க்கிலுங்
கவினுற்று அழகினுக்கு அணியாய் விளங்கிய பூம்பாவை
யைப் பதினாறாண்டுற்ற புகலிவேந்தர் சிவனாரது கருணை
வெள்ளம் ஆயிரமுகத்தால் விளங்கும் வடிவாகக் கண்ட
னர். ஆயகாலை சிவநேசர் திருஞானசம்பந்தரது திருவடி
யில் வீழ்ந்து வணங்கினர். பூம்பாவையும் அவரை வணங்கி
னள். அவளைப் பிள்ளையார் திருமணம் புரிந்தருள வேண்டு
மென்று சிவநேசச்செல்வர் வேண்டியகாலைப் பிள்ளையார்
சிவபெருமானது திருவருளினாலே அக்குழந்தையைத் தாம்
மீட்டும் பிறப்பித்தபடியால் மணம்புரிதல் தக்கதன்
றென்று மறுத்தனர். அப்பொழுது சிவநேசரும் அவரது
சுற்றத்தாரும் பிள்ளையாரது திருவடியில் வீழ்ந்து அரற்றத்
தமக்கு மகள்போன்ற அவளைத் தான் மணத்தல் அறிவு
நூல் முடிபுக்கு மாறுமென்று மீட்டும் மறுத்தருளினர்.
அவர் சொல்லியது தக்கதென்று வணிகரும் அவர்
கிளைஞரும் உணர்ந்தனர். பின்னர்ச், சிவநேசர் பூம்
பாவையை ஒருவர்க்கும் மணஞ்செய்துகொடுக்க இசை
யாது கன்னிமாடத்தே வைத்தனர். பூம்பாவையுஞ்
சிவத்தைச் சேர்ந்தனள். பிள்ளையார் திருக்கோயிலுட்
புகுந்து திருவருளினை வியந்து பாடிப் பணிந்தெழுந்து
புறம்போந்து திருமயிலையிற் சிலநாள் தங்கியபின் பிற
பதிகளை வணங்கப் புறப்பட்டுச் சிவநேசர்க்குத் தேறுதல்
கூறி விடைகொடுத்துத் திருவான்மியூருக்குச் சென்று
இறைவரைத் தொழுது வினவுரைப் பதிகம் பாடிச் சில

நாள் அங்கு அமர்ந்திருந்த பின்னர், திருஇடைச்சுரஞ் சென்று இறைவர்க்கு அருந்தமிழ் மாலைசாற்றித் திருக்கழுக்குன்ற மடைந்து. சிவிகைநின் றிழிந்து திருமலையை வலம் வந்து திருக்கழுக்குன்றநாதரைப் பணிந்து பாடித் திருஅச்சிறுபாக்க மடைந்தனர். பின்னர், திருஅரசிலி திருப்புறவார் பனங்காட்டூர் முதலிய தலங்களை வணங்கிச் சென்று, திருத்தில்லை நகரை அடைந்தனர்

அங்கே தில்லைவாழ் அந்தணராலும், அடியார் கூட்டங்களாலும் மிகவும் சிறப்பாக எதிர்கொள்ளப்பெற்றுக் கூத்தப்பெருமான் குரைகழல் தொழுது கண்ட பேரின்பத்தின் கரையில்லா நிலையினை யடைந்தார். அங்கு அவர் வந்து சேர்ந்ததைக் கேள்விப்பட்ட சிவபாதவிருதயரும், சீர்காழியிலுள்ள பிற அடியவர்களும் தில்லைக்கு வந்தனர். யாவரும் அம்பலவாணரை அடிதொழுது மகிழ்ந்தனர். பின்னர்த் திருஞானசம்பந்தர் அவர்களுடன் திருக்கழுமலத்திற்குப் புறப்பட்டார். சீகாழி தூரத்தே தோன்றியவுடன் சிவிகை விட்டிழிந்து 'வண்டார்குழல் அரிவை' என்னும் திருப்பதிகம் பாடத் தொடங்கினார். பின்னர் அத் திருப்பதியிற் புகுந்து திருத்தோணியில் வீற்றிருந்த சிவபெருமானைச் சென்னிமிசைக் குவித்த கைகளோடு தொழுது விழுந்தெழுந்து திருவருளின் முழுநோக்கம் பெற்று ஆனந்தக்கண்ணருவி வெள்ளத்திற் குளித்தெழுந்து புறம்போந்து திருமாளிகையைச் சேர்ந்தனர். அப்போது காழிவேந்தரைக் கண்டு மகிழ்ந்த கருத்துடன் திருமுருகநாயனார், திருநீலநக்கநாயனார் முதலிய தொண்டர் பலரும் சீர்காழிக்கு வந்தனர். சண்பையர்கோன் அவர்களோடு அளவளாவித் திருத்தோணியப்பரைப் பணிந்து பாடி மகிழ்ந்திருக்குநாளில் சிவபாத விருதயரும் சுற்றத்தாரான மறையவர் பலரும் பிள்ளையார்க்குத் திருமணஞ் செய்யும் பருவம் வந்தமையால் ஒரு கன்னியை மறை முறைப்படி அவர் வேட்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள். பெருந்தவத்தினராகிய ஞான வள்ளலார் சிவபெருமானது திருவருளை முன்னே தான்

பெற்றமையினாலே உலகபாசத் தொடர்ச்சி தமக்குக் கூடா தென்று மறுத்தனர். பின்னும் மறையவர்கள் அவரைத் தொழுது உலகத்திலே மறைவழக்கத்தை நீர் நாட்ட வந்த மையால் வேதநெறிப்படி திருமணஞ் செய்தருளுவதற்குத் திருவுள்ளம் இசையவேண்டுமென்று வற்புறுத்தினர். திருஞானசம்பந்தர் அதற்கு உடன்படலும் மறையோர் எல்லாரும் பெருமகிழ்வெய்தித் திருப்பெருமணத்தில் நம்பாண்டார்நம்பி யென்பாரின் புதல்வியை அவர்க்கு மணஞ்செய்வித்தல் தக்கதென்று கருதினர். திருஞான சம்பந்தரின் தந்தையார் தொண்டர்களோடு திருநல்லூர்ப் பெருமணத்திற்கு நம்பாண்டார் நம்பியைப்பார்க்கப் போயி னர். அவரும் இவர்கள் எல்லாரையும் மிகச் சிறப்பாக எதிர்சென்று வரவேற்றார். சிவபாதவிருதயர் முதலி யோர் மகட்பேச வந்ததைத் தெரிவித்தவுடன் அவரும் மிக மகிழ்ந்து தம மகளைக் கொடுப்பதற்கு இசைந்தனர். அதைத் திருஞானசம்பந்தர்க்கு அவர்கள் தெரிவித்துத் திருமணத்திற்குச் செய்ய வேண்டுவன யாவுஞ் செய்தனர்.

எல்லாவகையான அலங்காரங்களுஞ் செய்து திரு மணத்திற்கு வருகின்றவர்களுக்குக் குறைவறுத்தற் பொருட்டு எல்லாவகைப் பண்டங்களும் வளம்பெறத் தொகுத்து வைத்தனர். சீர்காழியிலும் திருநல்லூர்ப பெருமணத்திலுமுள்ள எல்லா வீதிகளும அணி பெற்று விளங்கின. திருமணநாட்கு முந்திய நாளில் ஒப்பற்ற புகலி வேந்தற்கு இறைவரது திருவருள் வடிவமாகிய திருக் காப்பு கையில் அணிவித்து நகர் வலம் செய்வித்தனர். சீர் காழியின்கண் ஏழுகடலும் ஒன்றாகத் திரண்டு வந்தது போல வேதியரும் பிறரும் நெருங்கிவந்தனர். திருமண நாளிலே திருத்தோணியப்பரை வணங்கி விடை பெற்றுக் கொண்டு யாவரும் முன் செல்லத்தனிப்பெருஞ் சின்னமும் பிற இசைக்கருவிகள் அனைத்தும் இனிதொலிப்ப மறை யோரது மந்திர ஒலி எங்கும் முழங்க முத்துச் சிவிகை மேற் காழிவேந்தர் எழுந்தருளித் திருமணத்திற்குச் சென் றனர். அறுவகைச் சைவ முனிவரும், பிறருங் கூட்டங்

கூட்டமாக உடன் சென்றனர். விஞ்சையர், இயக்கர், சித்தர், கின்னரர் முதலிய விண்ணவர் யாவரும் அரம்பையருடன் தங்கள் தங்கள் விமானமேறி விசும்பின்மீது திருமணக்கோலங் காண நிறைந்தனர். காழி வேந்தர் திருநல்லூர்ப்பெருமணத்தைச் சார்ந்தவுடன் திருக்கோயிலுட் புகுந்து சிவபெருமானை வணங்கிப் புறம்போந்து ஒரு மடத்திலே தங்கி வேதியர் வேண்டிக் கொண்டபடி திருமணக் கோலங் கொண்டனர் எல்லாவகையான அணிகலன்களும் அணிந்த பின்னர்த் திருவடையாளமாலேயும் எடுத்துப் பூண்டு திருவெண்ணீற்றினை ஐந்தெழுத்தோதிச் சாத்தித் திருவுள்ளத்திலே சிவபெருமானை வணங்கி முத்துச் சிவிகைமேல் எழுந்தருளியபோது எத்திசையிலும் மங்கள வாத்தியங்கள் ஒலித்தன. விண்ணோர் கற்பகப் புதுப்பூமாரி பொழிந்தனர். முனிவரும் தொண்டரும் மறைமொழியினால் வாழ்த்து முழக்கினர். முத்துக்குடை நிழற்றச் சின்னங்கள் அவரின் திருநாமங்களையெல்லாம் ஓதி ஒலிப்பத் திருஞானசம்பந்தர் திருமணப்பந்தரை அடைந்தார். கற்பகப்பூங்கொம்பு போன்ற மணமகளும் கவினுற அலங்காரஞ் செய்யப் பெற்றனர். மங்கையர் எல்லாரும் பொற்குடமும் மணிவிளக்கும் எடுத்துக் காழிவேந்தரை எதிர் கொண்டனர். அவர் பந்தரை அடைந்து செம்பொன் மணிப்பீடத்தில் வீற்றிருந்தருளினர். மறை விதிப்படி சடங்குகள் செய்யப்பட்டன. மணமகளின் பெற்றோர்கள் பெருமகிழ்ச்சியோடு பாலும் நீருங்கொண்டு பிள்ளையாருடைய திருப்பாதங்களை விளக்கினர். பின்னர் நம்பாண்டார்நம்பி தம் மகளைக்கொடுப்பதாகக் கோத்திரமுங் குலமுஞ செப்பி மங்கலநீரைப் பிள்ளையாரது திருக்கரத்தில் ஊற்றித் தம் புதல்வியைப் பிள்ளையாருக்கு அளித்தேன் என்றார். திருஞானசம்பந்தர் அப் பெண்மணியைக் கைப்பிடித்தற் பொருட்டுப் பெற்றோருடைய உடன் பிறந்தார்கள் அப்பெண்மணியை அழைத்துச் சென்று ஞானசம்பந்தர்க்கு வலப்பால் வெள்ளை முகிலோடு ஒருங்கிருந்த மின்கொடியென விளங்கும்படி வைத்தார்கள். திருமணக்காட்சியைக் கண்ட மக்கள் எல்லாரும் இமையா நாட்ட

முடையவராய் மணமகனையும், மணமகளையும் வாழ்த்தித் தேவராயினர். திருஞானசம்பந்தப்பெருமான் காதலியின் செங்கைபற்றி வெண்பொரியினைக் கையால் எடுத்து எரியினில் இட்டு வலங்கொள்ளுஞ் சமயம் வந்தபோது, எரியாவார் சிவபெருமானே என்று நினைந்து திருப் பெருமணத்தி லுள்ள திருக்கோயிலை அடையக் கருதினர். காதலியின் கையைப்பற்றி எரியை வலம்வந்தவுடன் சிவஞானச் செம்மலர் உலகபாசமாகிய இல்லறக்கட்டு வந்து சூழ்ந்ததே என்று கவன்று இம் மாதினோடு அந்தமில்லாத சிவபெருமானுடைய திருவடிகளை அடையவேண்டுமென்னும் ஆசையானது பொங்கத் திருக்கோயிலை நோக்கிப் புறப்பட்டார். கிளைஞருந் தொண்டரும் உடன் அணையத் திருக்கோயிலை அடைந்து 'நாதனே! நல்லூர்மேவும் பெருமண நம்பனே; உன் பாதமெய் நீழல்சேரும் பருவம் ஈது' என்று பாடச் சிவபெருமானும் திருவருள் புரிந்து, 'நீயும் மணமகளும் மணத்தில் வந்தார் யாவரும் ஈண்டுத் தோன்றுஞ் சோதி வாயிலாக என்பால்வருக' வென்று கட்டளையிட்டு மூவுலகும் ஒளிவீசத் தக்கதாய்த் திருக்கோயிலை உள்ளடக்கி மேலோங்குவதாய் உள்ள ஒரு பெருஞ் சுடர்ப் பிழம்பாகத் தோன்றி அதன்கண் ஓர் வாயிலை வகுத்துக்காட்டினர். புகலி மன்னர் அப்பரஞ்சுடரைத் தொழுதுபோற்றி உலகர் யாவர்க்கும் ஞானமெய்நெறி திருவைந்தெழுத்தாய மந்திரமே என்று நமச்சிவாயத் திருப்பதிகத்தை வானவரும் மண்ணவருங் கேட்கும்படி திருவாய்மலர்ந்தருளி 'இம்மணத்தில் வந்தோர் யாவரும் பிறவி தீரும்படி இதன்கண் புகுவீர்களாக' என்று கட்டளையிட்டருளினார். அப்போது யாவருஞ் சோதியினுட் புகுந்தனர். திருநீலநக்கர், திருமுருகர் முதலிய தொண்டர்களும், சிவபாதவிருதயர், நம்பாண்டார், திருநீலகண்டப் பெரும்பாணர் என்பவர்களும் பிறயாவரும் சுற்றத்தாரோடும் மனைவியரோடும் உட்புகுந்தனர். முத்துச்சிவிகை தாங்கிச் சென்றவர்களும் பணிசெய்த பெண்டிர் யாவரும் பரிசனரும் வினைப்பாசத் தொடக்கறுத்த உணர்வோடு உள்ளே புகுந்து ஒடுங்கினார்கள். அறுவகைச் சமயத்தைச் சார்ந்த

அருந்தவரும் அடியவரும் மறைமுனிவர்களும் கும்பிட வந்தோர்களும் வேறு வழியாகத் திருவருளினால் வீடுபெற வந்தவர்களும் எல்லாரும் ஈறில்லாத பெருஞ்சோதியிற் புகுந்த பிற்பாடு, தம் காதலியைக் கைப்பற்றிக்கொண்டு வலம் வந்து திருஞானசம்பந்தர் சோதியினுட் புகுந்து அறிவின் எல்லைகடந்த பெருநிலையில் இறைவனோடு இரண்டறக் கலந்தனர். உடனே பெருஞ்சோதியும் மறைந்தது. பழையபடி திருமணநல்லூர்த் திருக்கோயிலிலே தோன்றியது சோதியினுட் புகப்பெறாதார் கழிவிரக்கங் கொண்டனர். காழியர் பிரானொடு கண்ணுதலாரது திருமேனியிற் கலக்கப்பெறாது தூரத்தே நின்ற விண்ணவர்களும் முனிவர்களும நான்முகன் முதலிய எண்ணிலாதவர்களும் இதனைப் புகழ்ந்து போற்றினர்.

தொண்டை நாடானது தண்டகனென்னும் அரசனால் ஒருகாலத்தில் ஆளப்பட்டமையால் தண்டக நாடு எனப் பெயர்பெற்றது. தண்டகாரண்ணியம் என்பது விந்திய மலைக்குத் தென்பக்கத்தில் இச்சுவாகு குடும்பத்தைச் சார்ந்த தண்டகன் என்னும் அரசனால் ஆளப்பட்டுச் சுக்கிரர் சாபத்தால் அழிந்து வனமாயிற்று என்பர். தொண்டைநாட்டை ஆண்ட தண்டகன் யார் என்று தெளிவாக விளங்கவில்லை. தொண்டைநாடு என்று பெயர் வருவதற்குக் காரணம் ஆதொண்டைச் சக்கரவர்த்தியினால் ஆளப்பட்டமையால் என்றும், தொண்டைமான் இளந்திரையன் என்னுஞ் சோழர் மரபில் வந்த ஓர் அரசகுமாரனால் ஆளப்பட்டமையால் என்றுங் கூறுப.

திருஞானசம்பந்தப் பெருமான் தொண்டை நாட்டிற்கு எழுந்தருளியபோது உடன்வரக் கருதிய தம் தந்தையாரைச் சீர்காழியிலேயே இருக்கும்படி பணித்தது, தொண்டைநாட்டு யாத்திரை அக்காலத்திற் கடுமையாக இருந்தமையாலும் சிவபாதவிருதயர் வயது மிகுந்தவராய் இருந்தமையாலும் போலும். திருப்பாதிரிப்புலியூர்க்குக் கன்னிவனம என்ற பெயர் எதனால் அமைந்ததென்று நன்கு விளங்கவில்லை. அத்திருப்பதியிலே நொண்டிக்

காலுடைய முயலொன்று கடவுளை வணங்கி அருள்பெற்ற தாகத் தெரிகின்றது. விலங்குகள் சிவபெருமானைத் தொழு வதைப்பற்றிப் பல புராணங்களினுஞ் சொல்லப்பட்டிருக் கிறது. திருக்காளத்தியில் யானை கடவுட்குப் பூசனை புரிந் தது. பெரியகுளம் என்னும் ஊரில் வராகம கடவுளை வழி பட்டதாகத் தெரிகிறது. மக்களிற் கீழான பிராணிகளும் இறைவனை வழிபடுதல் முன் பிறப்புக்களின் பயிற்சி வயத் தாற்போலும். புழுவாய்ப் பிறக்கினுங் கடவுளுடைய திரு வடிகளை மறத்தல் கூடாதென்று அப்பரடிகள வேண்டிக் கொண்டதுபோலக் கடவுளுடைய நினைவினைப் பல பிறவி களிலும் விரும்பிப் பெற்ற உயிர்கள் விலங்கு பறவை முதலியனவாகப் பிறக்கினும் கடவுட் பூசைக்குரிய நல் லுணர்வுடையனவாய்த் திகழும் என்பது இதனால் அறியற் பாலது. 'எங்கேனும யாதாகப் பிறந்திடினும் தன்னடி யார்க் கிங்கேஎன் றருள்புரியு மெம்பெருமான்' என்றதுங் காண்க. திருவள்ளுவ நாயனார்,

"ஒருமைக்கண் தாங்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து."
"ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து."

எனக் கல்வியும் அடக்கமும் ஒரு பிறவியில் ஒருவன் பெறுவானாயின் அவனது எழுவகைப் பிறவியிலும் அவ னுக்கு அவை துணை நின்றுதவுவ என்று கூறியருளினார். சிவனடிப் பேரன்பும் அவ்வாறே ஆம் என்பது அறிக.

திருவீரட்டானத் திருப்பதிகத்திற் பூதகணம் பாடச் சிவபெருமான் ஆடினமை கூறப்பட்டது. பூதகணம் என்பது பூதங்களின் கூட்டம். பூதங்கள் பல்வகை வடி வங்கள் உடையனவாய் உருத்திரமூர்த்தி கட்டளை இடும் பல்வகைத் தொழில்களையும் இயற்றும் உருத்திர வகுப் பைச் சார்ந்தவர்கள். பூதங்கள், தேவர்களினும் மிக்க வலிமையுடையவர்கள். கடவுளைப் பாடும் பதினெட்டு விண்ணோர் வகுப்பினருட் பூதரும் ஒரு வகுப்பினர்.

திருவீரட்டானத்திலும் திருஞானசம்பந்தப் பெருமான் இறைவரது திருநடனத்தைக் கண்டு களித்ததாகத் தெரிகிறது. அவ்விடத்தில் பூதம்பாட நின்று ஆடினமையால் 'குண்டைக் குறட்பூதம்' என்னும் பதிகம் பாடினர்.

திருவண்ணுமலையானது நெருப்புப் பிழம்பாக மால் அயன் அடிமுடி தேடும்வண்ணம் இறைவர் நின்றருளிய இடமாதலால் அம்மலையே கடவுளுடைய திருவடிவமாகத் திருஞானசம்பந்தப் பெருமானுக்குத் தோன்றியதென்று ஆசிரியர் சேக்கிழார் கூறுகின்றார். இக்கருத்துப் பற்றியே திருப்பதிகத்துள்ளும் 'அண்ணுமலை தொழுவார் வினை வழுவா வண்ணமறுமே' என்ற அடியில் அண்ணுமலையையே கடவுளாகக் கூறியதூஉங் காண்க.

திருவோத்தூரில் ஆண்பனையைப் பெண்பனையாக்கியது ஒரு பெரிய வியப்பாகும். பெரியோரது நிறைமொழி வன்மை இவ்வருஞ் செயலால் தெள்ளிதிற் புலனுகின்றது. திருவோத்தூர்த் தேவாரப் பதிகத்துள் 'குரும்பை ஆண்பனையின் குலைஓத்தூர்' என்று அமைத்த திருவாக்கினலேயே ஆண்பனை பெண்பனையாயிற்று. அப் பதிகத்துள் ஆண்பனையைப் பெண்பனையாக்க வேண்டுமென்று வெளிப்படையாக வேண்டவுமில்லை. பெரியவர்கள் எது நிகழ வேண்டுமென்று நினைத்துச் சொன்னர்களோ அஃது, அப்பொழுதே நிகழ்ந்துவிடுதல் கடவுளுடைய ஆணைபோலும். அங்ஙனம் பலிக்குஞ் சொல்லே மந்திரமெனப்படும். சொல்லினலே கடவுள் உலகத்தைப் படைக்கின்றார் என்பது பற்றியே அவரை 'வார்த்தைக் குயவனுர்' என்று பெரியோர் கூறினர். அக்கடவுளுடைய திருவருட்சத்தி பதியப்பெற்றவரும் அவர் திருவருள் வழிநின்று சொல்லுந் திருவாக்கினலே ஒன்றை அழித்தலும் ஆக்கலும் வல்லவரென்று அறியற்பாலது. உலகமே, சொலலுலகம், பொருளுலகம் என்று இருவகைப்படும். அவற்றை வடநூலார் 'சப்தப்பிரபஞ்சம்' 'அர்த்தப் பிரபஞ்சம்' என்பார்கள். பொருளுலகத்திற்கு அடிப்படையாகச் சொல்லுலகம் ஏற்பட்டிருக்கிறது. ஒலி இயக்கத்தாற் பொருள்கள் வடி

வடைகின்றன என்பதும் அதுவே. சொல்வடிவாகவே நினைவும் நிகழ்கிறது. நினைவின்கண் எழுதிய படமே நினைவினுடைய ஆற்றலால் வெளிப்பொருளின்கண்ணே பிரதிபலித்தலுங் கூடும். ஒருவர் எண்ணுவதைப் படமெடுக்கலாமென்று மேலைநாட்டிலே சில நுண்ணறிவாளர்கள் தெரிந்துரைத்தனர். இதனால் நினைவுதானே வெளிப்பொருள்களிலும் உருவெடுத்தல் கூடுமென்று தோன்றுகிறது. நினைவின் வன்மையினாலே வெளிப்பொருள்கள் நினைத்தவண்ணமே மாறுதலுங்கூடும். நினைவின் வன்மையினாலே உடம்பினது நோய்நிலையை மாற்றுதல்கூடுமென்று மருத்துவ அறிஞர் பலர் கருதுகின்றார்கள். ஆதலால், நினைவின் ஆற்றலினாலேயே ஒரு பொருள் முழுவதும் மாறிய நிலையை அடைதல்கூடும் என்பது தெளிவு. நினைவிற்கு அத்துணை ஆற்றலைக் கொடுப்பது கடவுளுடைய திருவருட்சத்தியே. திருவோத்தூரில் நம் பரமாசாரியரது நினைவாற்றலால் ஆண்பனை பெண்பனை ஆயிற்று. ஆணிற்கும் பெண்ணிற்கும் கருவின்முளை ஒன்றே என்றும், கருவொன்றே சிலவகையான மாறுதல்களால் ஆணாகவும், வேறுவித மாறுதல்களாற் பெண்ணாகவும் உருவெடுக்கின்றனவென்றும் உயிர்நூல்வல்லார் கூறுகின்றார்கள். பனையானது குலையொன்றும் ஈனதபோது ஆண் என்றும், குலை ஈன்றவிடத்துப் பெண் என்றும் கூறப்படும். சில மருத்துவ முறைகளால் மலடுநீங்கி மகவுண்டாதல்போலப் பனையானது வளமற்றநோய் நிலைமாறி வளமுள்ள நன்னிலை அடைதலே, ஆணாய் இருந்து பெண்ணானவாறாகும் என்று கொள்க. நம் பரமாசாரியர் ஆண்பனையைப் பெண்பனையாக்கியது சமணரால் நகைபாடப்பெற்ற சிவனடியாரது இடுக்கண் தீர்த்தற்பொருட்டேயாகும். 'ஒன்னார்த்தெறலும் உவந்தாரை ஆக்கலும் எண்ணின் தவத்தால் வரும்' என்பதற்கு இவ்வற்புதம சிறந்ததோர் எடுத்துக்காட்டாக விளங்குதல் காண்க. இவ்வற்புதத்தைக் கண்ட சமணருட் சிலர் சைவசமயத்திற்கு வந்தமையால் அக் காலத்திலேயே புறமதத்துட் புகுந்தவரைத் தஞ்சமயமேற்று மீட்டுக் கொள்ளுதல் வழக்கமென்று தெரிகின்றது. பிள்ளையார்

திருவாக்குப்பெற்ற பனைமரங்களுங்கூடப் பிறவியொழித்துச் சிவத்தை அடைந்தன என்று புராணம் 983-வது பாட்டுக் கூறியது காண்க. அவைகள் முன்னமே மிகுந்த பக்குவமுற்றிருந்தாலொழியப் பிள்ளையார் திருவாக்குப் பெற்று அந்நிலையை அடைந்திருக்கமாட்டா என்று தோன்றுகிறது.

நம் பரமாசிரியர் திருக்காஞ்சியிற் சிவபெருமானை வணங்கியதைக் கூறுமிடத்து, அவரது பேரன்பின் மெய்ப் பாட்டினை ஆசிரியர் சேக்கிழார்,

"பம்புதுளிக் கண்ணருவி பாய்ந்து மயிர்ப் புளகம்வரத்
தம்பெருகு மனக்காதல் தள்ளநில மிசைத் தாழ்ந்தார்"

"பாடினா பணிவுற்றார் பரிவுறுமா னந்தக்கூத்
தாடினார் அகங்குழைந்தார் அஞ்சலிதஞ் சென்னியின்மேற்
சூடினா மெய்ம்முகிழ்த் தார"

"மருவியவே றிசைபொழிய மனம்பொழியும்
பேரன்பாற்
பெருகியகண் மழைபொழியப் பெருமபுகலிப்
பெருந்தகையார்
உருகியவன் புள்ளலைப்ப உமைதழுவக்
குழைந்தவரைப்
பருகியமெய் யுணாவி னொடும் பரவியே
புறத்தணைந்தார"

என மிகவும் தெளிவாக எடுத்து இயம்பியுள்ளார். அக் காலத்திலேயே காமக்கோட்டமானது திருவேகம்பரின் கோயிலின் வேறாகத் தனியே இருந்தது.

திருவாலங்காட்டிலே, நம் நாயனார் மிதிக்க அஞ்சினமை அடியார் பெருமையைப் போற்றும் அவர் மாண்பினை இனிதுவிளக்கும். அவர் காலத்திற்குமுன்னமே, காரைக்காலம்மையார திருவருள்பெற்றமை விளங்குகின்றது. பழையனூர் நீலி கதையைத் திருவாலங்காட்டுத் தேவாரத்தில் நம் பரமாசிரியர்,

"வஞ்சப்படுத் தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்
டஞ்சும பழையனூ ராலங் காட்டெம் மடிகளே"

எனக் குறிப்பித்துள்ளார்.

திருக்காளத்தியிலே கண்ணப்பநாயனார் திருவடிவைக் கண்டு, ஞானசம்பந்தர் கும்பிட்ட பயன்காண்பார்போற் பலமுறையும பணிந்தெழுந்தமை மிகவும் வியக்கத்தக்கது. அன்பே, யாவற்றினும் மேம்பட்டதென்பதையும பெரிய புராணத்தின் உயிர்ப்பொருள் அன்பே என்பதையும் ஆசிரியர் சேக்கிழார் 1023-ம் பாட்டில் நன்கு தெரித்துள்ளார்.

திருஞானசம்பந்தப்பெருமான் பேரன்பினுடன் பன்முறை கண்ணப்பநாயனாரைப் பணிந்தனரென்றால், கண்ணப்பர் ஒப்பற்ற மெய்யன்பு வடிவினரென்பதை யார் மறுத்தல்கூடும? அடியாரது பேரன்பிற்கு ஈடுபட்டுத் தாழ்ந்திறைஞ்சும் நம பரமாசாரியரது தற்போதமற்ற உயர்நிலை இதனால் இனிதுவிளங்கும. ஆளுடையபிள்ளையாரை ஞானத்தின தலைவர் என்று சிறப்பாக நவில்வதினும் அவர் அன்பின்தலைவர் என்று கொள்ளுதல் ஏற்புடைத்து அன்பு செலுத்துதல் அடியார் தகுதிக்கேற்ப வேறுபடும். அன்பு அறிவினால் வளர்வது; சரியையாளர், கிரியையாளர், யோகியர் என்பாரது அன்பினும் ஞானிகளது அன்பு மிகவுயர்ந்தது. உள்ளிருப்பதே வெளிவரும் என்றவண்ணம் ஒருவரது உள்ளத்தின்நிலைக் கேற்றவாறே அவரது அன்புநிலையும் ஆம். திருஞானசம்பந்தர். கண்ணப்பநாயனாரைக் கண்டபோது தமதுள்ளத்தில் நிறைந்துள்ள உயர்ந்த அன்பின் மெய்வடிவமாக அவரைக் கருதினார்.

அவரன்பு உயர்ந்த அன்பென்பது அவ் வன்பினுக்குள்ளே 'இறைவன் மன்னுவதாக ஆசிரியர் சேக்கிழார் குறித்தமையால் தெளியப்படும். 'பக்திவலையிற் படுவோன் காண்க' என்றபடி உயர்ந்த மெய்யன்பினுள்ளே தான் இறைவர் வீற்றிருப்பர். இதனால் எப்பொழுதும் ஒரேநிலை

யாகப் பேரன்போடு வழிபடும் ஞானிகட்கு இறைவன் எப்பொழுதும் நுகர்ச்சிப் பொருளாயிருப்பன் என்பது தெளிக. அன்பு செலுத்தாதார்க்குக் கண்ணப்பர் வடிவமும், சிவலிங்க வடிவமும் பூதவடிவங்களாகத் தோன்றும்.

நம் பரமாசாரியருக்கு அவை மெய்யன்பின் வடிவமாகவும், கடவுளாகவும விளங்கின. 'தவமும் தவமுடையார்க்காகும்' என்றதும் இக்கருத்தை வலியுறுத்துமென்க. நம் நாயனர் தில்லைக்குச் சென்றிருந்தகாலை அவர்பெற்ற ஞானமே அம்பலமாகவும் அவர் நுகருஞ சிவபோகமே இறைவரது திருக்கூத்தாகவுங் கண்டனரென்று கூறிய வண்ணமே ஈண்டும் அவர் உள்ளத்தின் மெய்யன்பே கண்ணப்பராகவும் அங்குறையுங் கடவுளே காளத்தியப்பராகவுந் திகழ்ந்தனரென்று மொழிந்தது காண்க.

தில்லையில் நம் பரமாசாரியரது ஞானத்தின் உயர்வையும், திருக்காளத்தியில் அவரது பேரன்பின் பெற்றியையும் ஆசிரியர் சேக்கிழார் நன்குவிளக்கிப் போந்தனர்.

நம் பரமாசாரியர் தமிழ் வழங்காத நாடுகளுக்குச் செல்லக் கருதாமை தம் பரிசனங்களின் யாத்திரைக் கடுமையை நினைந்து அவர்கட்கு இடர் விளையாதிருத்தற் பொருட்டுப்போலும். வடகயிலை, திருக்கேதாரம், கோகரணம், திருப்பருப்பதம், இந்திரநீலப் பருப்பதம் என்னும் ஐந்து தலங்கள் சிறப்பாகப் பாடப்பெற்றமையால் அவை பிறவற்றினுஞ் சிறந்த தலங்களாகச் சைவர்களாற் பேணற்பாலன.

இனி, திருமயிலையில் எலும்பைப் பெண்ணுக்கிய வரலாறு ஆயற்பாலது. அக்காலத்தில் திருமயிலையானது கடற்கரைத் துறைமுகமாக இருந்ததென்பதும் மரக்கலப் போக்கு வரவு அவண் நிகழ்ந்த தெனவுஞ் சிவநேசர் சரித்தால் விளங்குகின்றது. அதை,

அருநி தித்திறம் பெருக்குதற் கருங்கலம் பலவும்
பொருத டற்செலப் போக்கியப் பொருட்குவை நிரம்ப
வரும ரக்கல மணைப்படப் பணைக்கரை நிரைக்கும்
இருநி திப்பெருஞ் செல்வத்தி னெல்லையில் வளர்ந்தார்.

என்றதாற் காண்க.

சிவநேசரென்ற பெயர்க்கேற்பவே, சிவபெருமானி டத்துஞ் சிவனடியாரிடத்துஞ் சிவநேசர் மிகுந்த அன் புடையராய்த் திகழ்ந்தனர். இவ்வணிகர் செல்வச்செருக்கு யாதும் இல்லாதவராய் வாழ்வெனு மையல்விட்டு வறுமை யாஞ் சிறுமை தப்பித் தாழ்வெனுந் தன்மையுடையரென் பதும், எப்பொருளினும் மெய்ப்பொருளையே ஆராய்ந் தறிந்து, அதன்கண் தமது உள்ளத்தைச் செலுத்துவோ ரென்பதும், 'தம்மை உள்ளவா றறிந்தபின் சங்கரர்க்கு அடிமை மெய்ம்மையே செய்யும்' என்றும், 'பொய்ம்மை நீக்கி மெய்ப்பொருள் இதுவெனக் கொள்ளும் செம்மையே புரிமனத்தினார்' என்றும் ஆசிரியர் சேக்கிழார் மொழிந்த மையால் இனிது விளங்கும். திருஞானசம்பந்தர்பால் இவர் தலைஅன்பு செலுத்தினரென்பது அவரைக் காணு திருந்தகாலையில்,

செல்வ மல்கிய சிரபுரச் சிறுவரே வடிக்கீழ்
எல்லை யில்லதோர் காதலி னிடையறு வுணர்வால்
அல்லு நண்பக லும்புரிந் தவரருட் டிறமே
சொல்ல வுஞ்செயல் கேட்கவுந் தொழிலின ரானார்.

என்பதாலும், திருஞானசம்பந்தர் மதுரையில் சைவத்தை நிலைநாட்டியதைத் தமக்குக் கூறியவர்களுக்கெல்லாம் மிகுந்த பொருளும் ஆடையும் உதவினமையாலும் அவரைத் திசை நோக்கி வீழ்ந்து தொழுது தம் அருமை மகளையும் பெருஞ் செல்வத்தையும் ஆருயிரையும் அவருக்கே கொடுத்ததாக மொழிந்தமையாலும் இனிது புலனும். இதை,

இன்ன வாறெலா மறிந்துளா ரெய்தியங் கிசைப்பச்
சொன்ன வர்க்கெலா மிருநிதி தூசுட னளித்து
மன்னு பூந்தராய் வள்ளலார் தமைத்திசை நோக்கிச்
சென்னி மேற்கரங் குவித்துவீழ்ந் தெழுந்துசெந் நின்று.

சுற்ற நீடிய கிளையெலாஞ் சூழ்ந்துடன் கேட்பக்
கற்ற மாந்தர்வாழ் காழிநா டுடையவர்க் கடியேன்
பெற்றெ டுத்தபூம் பாவையும் பிறங்கிய நிதியு
முற்று மென்னை யுங்கொடுத்தன னியானென்றுமொழிந்தார்

என்றதாற் காண்க.

நிலவுலகத்தினிற் பிறக்கும் யாவர்க்குங் குறையுண்டென்பதும், அஃது அன்பாக்குத் திருவருளால் நிறைவெய்தும் என்பதும், சிவநேசர்க்கு முதற்கண் மகவில்லாமையும், பின்னர்ப் பூம்பாவை உதித்தமையும் ஆகிய இரண்டின்வைதது அறியலாம். மக்கட்பேற்றில் ஆண்மகப் பெறுதல் சிறந்ததென்று கொள்ளுதல் இவர் சரித்திரத் திற்குப் பொருந்தாது. ஆசிரியர் திருவளளுவனார், ஆண் மகப்பேற்றினைச் சிறந்ததாகச் செபபினரென்று சிலர் கூறுதல் தவறு 'அறிவறிந்த மக்கள்' என்பதற்கு அறிய வேண்டுவனவற்றையறிந்த மக்களென்பதே பொருளாகும். ஆண்மக்களென்று பொருள் கொள்ளுதல் விரிவிலா அறிவினர் கொள்கையே.

கலை மகளும், மலை மகளும் அங்கயற் கண்ணியாரும் பெண்டி ரல்லரோ? அவர்கள் அறிவறிந்த மக்களல்லரோ? இவர்கள் கடவுளரே யானல் புனிதவதியாருந், திலகவதியாரும், மங்கையர்க்கரசியாரும், சங்கத்து நல்லிசைப் புலமை மெல்லியலார் பலரும அறிவறிந்த மக்களல்லரோ?

இது நிற்க, மலைமகளைச் சிவபெருமானுக்கு மணம் புரிய வேண்டுமென்று அவள் தந்தை விரும்பியது போலவே, பூம்பாவையைச் சிவபெருமான்றன் திருமகனார் என்னும் புகலி மன்னர்க்கு மணம் புரிவிக்கச் சிவநேசர் விருப்பங் கொண்டனர். ஞானவள்ளலாரையே, சிவநேசர் தம் குலமுழுமுதல்வராகக் கருதினமையால், தம் அரும் பொருள்கள் யாவையும் அவர்க்கே கொடுத்தனர்.

'மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் அடியார்க் கமுதளித்தல்' என்று ஆளுடைய பிள்ளையார் குறித்தருளியவாறே சிவநேசர் செய்ததாக ஆசிரியர் சேக்கிழார் இயம்பினர். அது, "ஆறுசூடிய முடியினார் அடியவர்க்கு அன்பால் ஈறிலாத பூசனைகள் யாவையும் மிகச்செய்து" என்றதாற் பெறப்படும். சிவபெருமானை வழிபடும் மறையவரே சிவனடியாரோடு வழிபடற் பாலரென்பார் "மாறிலா மறையவர்க்கு வேண்டினவெலா மளித்து" என்றனர்.

இப் பேரறத்தைச் செவ்விதிற் புரியும் அன்பர்க்கு மகப்பேறு நிலைக்கும் பான்மையது. ஆதலின் அஃது உண்மையானால் இறந்த பூம்பாவை மீண்டு வருக என உரைப்பாராயினர்போலும். தந்தையின் பேரறத்தை மக்கள் கைக்கொண்டு நடத்துதல் கடனாதலாலும் புதல்வியை யிழந்த தந்தை அப்பேரறத்தைச் செவ்வையாக நடத்த இயலாது ஆகலாலும், அப் பேரறம் உண்மையானால் பூம்பாவை மீண்டும உயிர் பெற்று வருகவென்று பிள்ளையார் இயம்பியருளினார் போலும் ஆண்மக்களன்றிப் பெண்மக்களும் உலகத்தில் தந்தையது பேரறத்தை நிலைபெறுத்தும் உரிமையுடையாரென்பது இதனாற் போதருமென்க.

"முற்றினர்க்கு நல்வரங்கள் முற்றும்"

என்றபடி சிவநேசருடைய பெருந்தவத்திற் கேற்ப அவருடைய அருமைப் புதல்வி, ஒப்பிலலாத அழகிளஞ் செல்வியாய்த் திகழ்ந்தனளென்பது ஆசிரியர் சேக்கிழாரால் அணிபெற விளக்கப்பட்டது.

"பாவை நல்லுறுப்பு அணிகிளர் பணபெலாம் நோக்கிப்
பூவினாள் என வருதலிற் பூம்பாவை யென்றே
மேவு நாமமும் விளம்பினா"

என்றதால், அவளது பெயரே அழகு காரணமாக எழுந்ததென்பது அறியற்பாலது. ஒளியும் மென்மையும் களங்கமின்மையும், அழகின் உறுப்புக்களாமென்பதை ஆசிரியர் சேக்கிழார் பூம்பாவையைத் தளர்கின்ற மின்னற் கொடியின் முளைபோலவும் இளம்பொற் கொம்புபோலவும், மாணிக்கச் செவ்வொளியின் கொழுந்துபோலவும் பெண்மான் கன்றுபோலவும் புனைந்துரைத்து விளக்கிப் போந்தனர்.

தளரு மின்னினங் குரமெனத் தமனியக் கொடியின்
வளரி ளந்தளிர்க் கிளையென மணிகிள ரொளியி
னளவி லஞ்சுடர்க் கொழுந்தென அணைவுறும் பருவத்
திளவ னப்பிணை யனையவர்க் கேழியாண் டெய்த

எனும் இச்செய்யுளால் அறிக.

கழங்கு, அம்மனை, பந்து முதலிய விளையாடல்களும் சிறுவீடு கட்டிச் சிறுசோ றட்டுண்ணும் விளையாட்டும், ஊஞ்சலாட்டும் அக்காலத்தே மகளிர் வழக்கமாயிருந்தன வென்பது சரிதத்தால் விளங்குகின்றது.

பூம்பாவை தன் தோழியருடன் விளையாடத் தொடங்கியது, அவளது ஏழாவது ஆண்டென்று குறிக்கப்பட்டது. அவளை அரவு தீண்டியது எந்த வயதிலென்பது குறிக்கப்படவில்லை. அவள் மீண்டு, திருவருளால் எழுந்தபோது பன்னிரண்டாண்டினளாய்த் திகழ்ந்தனள் என்பது,

> எடுத்த பாட்டினில் வடிவுபெற் றிருநான்கு திருப்பாட்
> டடுத்த வம்முறைப் பன்னிரண் டாண்டள வணைந்து
> தொடுத்த வெஞ்சமண் பாட்டினிற் றேன்றிடக் கண்டு
> விடுத்த வேட்கையர் திருக்கடைக் காப்புமேல் விரித்தார்.

என்ற செய்யுளால் காண்க. அவளது எலும்பினைச் சில ஆண்டுகளாகப் பாதுகாத்து வைத்தனர்போலும். ஏழாவது ஆண்டில் அவள் உயிர் துறந்தனளென்றால், ஐந்து ஆண்டுகளாகச் சிவநேசர் அவளது எலும்பினைப் பாதுகாத்து வைத்திருக்கவேண்டும். அங்ஙனஞ் செய்தமை அவரது ஒப்பற்ற திண்ணிய அன்பினை விளக்குகின்றது. நல்ல பாம்பிற்கு நச்சுப் பற்கள் நான்கு என்பதும், நஞ்சின் வேகம், படிப்படி ஏழுவகையாக உடம்பில் வெளிப்படுமென்பதும்,

> நாலு தந்தமு மென்புறக் கவர்ந்துநஞ் சுகுத்து
> மேலெ ழும்பணம் விரித்துநின் றுடிவே றடங்க
> நீல வல்விடந் தொடர்ந்தெழ நேரிழை மென்பூ
> மாலை தீயிடைப் பட்டது போன்றுள மயங்கி.

> மருந்து மெண்ணில மாறில செய்யவும் வலிந்து
> பொருந்து வல்விட மேழுவே கமுமுறை பொங்கிப்
> பெருந்த டங்கண்மென் கொடியனாள் தலைமிசைப் பிறங்கித்
> திரிந்து செய்வினை யாவையுங் கடந்துநீர்ந் திலதால்.

என்ற பாட்டுக்களில் விளக்கப்பட்டன. வேர்வை தோன்றுதலும், பின் வெப்புண்டாதலும், கண்ணேறிச் செருகுத

லும், வாந்தி செய்தலும், கோழை மிகுதலும், அறிவு மயங்குதலும், உடலில் விரைப்புண்டாதலும் ஏழு வேகமெனப்படும். எட்டாம் வேகத்தில் உயிர் நீங்குமென்பர். விடநீக்கத்திற்கு மருந்தும மந்திரமும் வழக்கத்திற் கைக்கொள்ளப்படுவன. மந்திரத்தின் தொடர்பாகத் தெய்வ நினைவும் பாவனையும் மேற்கொள்ளப்படும். மந்திரமென்பது வேண்டுகோளானால், வேண்டப்படுந் தெய்வத்தின் நினைவு இன்றியமையாததாகும். அதுவே தியானம் எனப்படும். பாம்பின் விடத்தை நீக்க அதற்கு மாறாகிய கருடனைகத் தம்மைப் பாவித்தல் பாவனை யெனப்படும். அதனையே 'காருட விஞ்சை' யென்பர். அதுவே பாவக மெனப்படும். கிரியையென்பது உடம்பின் உறுப்புக்களாற் செய்யும் செய்கையாம்.

முட்டிநிலை யென்னுங் கிரியை அடியிற் குறிக்கப்படும் பாட்டில் கூறப்பட்டுள்ளது காண்க.

விடந்தொலைத்திடும் விஞ்சையிற் பெரிபரா மேலோர்
அடர்ந்த தீவிட மகற்றுதற் கணைந்துளா ரனேகர்
திடங்கொண் மந்திரந் தியானபா வகநிலை முட்டித்
தொடர்ந்த செய்வினைத் தனித்தனித் தொழிலாராய்ச் சூழ்வார்.

அது நான்கு விரலையும் மடக்கிப் பெருவிரலினால் உச்சிமுதல் கடிவாயீறாகத் தொட்டு விடத்தினை இறக்குவதாம். உடம்பு மூர்ச்சித்து விழுந்தகாலை உயிர் அதன்கண் உளதா இலதா வென்று துணிவதற்குப் பல அடையாளங்கள் அக்காலத்திலே தமிழ் மருத்துவர்களுக்குத் தெரிந்திருந்தன வென்பது,

"ஆவி தங்குபல் குறிகளும் அடைவிலவாக"

என்றதால் அறியப்படும். பூம்பாவையின் உடம்பில் உயிர் இல்லையென்று குறிகளால் தெரிந்த பின்னும் மூன்றுநாள் வரை விடந்தீர்க்கும் வழிகளைக் கைக்கொண்டனரென்று அறிகிறோம். அங்ஙனஞ் செய்தல் அக்காலத்து வழக்கம் போலும். உயிர் நீங்கினமையைச் செவ்வையாகத் துணிதற்குக் காலதாமதம் வேண்டற்பாலது. பூம்பாவையின்

எலும்புக்கூட்டினைச் சிதைவுபடா வண்ணம் சிவநேசர் ஒரு பெருங்கும்பத்திற் சேமித்து வைத்தனரென்று அறிகின்றோம். அவ்வாறு சேமிப்பதற்கே பெரிய குடம் வேண்டற்பாலது.

புறப்பற்றினும், மக்கள்பால் உள்ள காதல், கடந்த ஞானிகட்குக் கடத்தற்கரியதென்பர் பெரியோர். நெடுநாள் மகவிலாது அருந்தவத்தாற்பெற்ற அழகிளம புதல்வியைத் தமது பெருஞ் செல்வத்தினும் பெரிதாகச் சிவநேசர் கருதினமையால் 'இந்த வெவ்விடம் ஒழிப்பவர்க்கு என்னுடைய நிதிக்குவை முழுவதும் ஈவன்' என்று பறை அறைவித்தார். பெறுமவற்றுளெல்லாம் அரிதாகிய குழவியையும் திருஞானசம்பந்தர்க்குக் கொடுத்துவிட்ட காரணத்தால் தாம் துன்புறுதல் முறைமையன்றென்று சிவநேசர் கருதியது அவரது தலையன்பை வற்புறுத்துமென்க. 'உடைய பிள்ளையார்க்கு என இவள்தனை உரைத்ததனால் அடைவு துன்புறுதற்கில்லையாம் நமக்கு' என்றது காண்க. சுற்றத்தாரனைவரும படரொலிக் கடல்போல் அறைவும் சிவநேசர் துன்புறுதல் கூடாதென்று தெளிவெய்தினமை அவரது பற்றற்ற உயர்நிலையைக் குறிப்பதாகும். இறந்த பின்னும் பூம்பாவையின் எலும்பைப் பாதுகாத்து வைத்தமை ஆளுடைய பிள்ளையார்க்கென வைத்தபொருளை அவர்பால் ஒப்புவித்தல் கருதியென்க. உயிர் போனபின் அங்ஙனம் ஒப்புவித்தலாற் பயனென்னையெனின், இறந்த உயிரை மீட்பிக்குந் திருவருட் பேராற்றல் வாய்ந்தவர் பிள்ளையார என்று நம்பி அவர் செய்தருளிய அற்புதங்களைக் கேட்டறிந்து சிவநேசர் அவர் வரவை எதிர்பார்த்திருந்தமையின் இழுக்காகாமை யறிக. 'ஔவிய நெஞ்சத்தான் ஆக்கமும், செவ்வியான கேடும் நினைக்கப்படும்' என்ற திருக்குறளில் செவ்வியான் கேடு என்பதற்குச் சிவநேசர் பூமபாவையை இழந்தமை ஓர் எடுத்துக்காட்டாகும். நல்லவர்களுக்கு இவ்வுலகத்திலே கேடு வருதல் அவரது முற்பிறப்பின் வினைப்பயனே என்பதும், உலைவின்றி உஞற்றுந் தவவலிமையால் அன்னோர் ஊழையும்

உப்பக்கங் காணவல்லாரென்பதும் இப் பூம்பாவை சரித்திரத்தால் தெளியப்படும். சிவநேசர் பூமபாவை இறந்த பின்னும் மனவுலேவின்றிக் கன்னிமாடத்திலே அவளது எலும்புக்கூட்டினைப் பாதுகாத்து வைத்தமையால், அவர் உலேவின்றித் தாமுாது முயன்றவராவர். சிவநேசர் ஆளுடைய பிள்ளையாரை 'ஆறுசூடினார் திருமகனெனவழிபட்டனர்' என்பது "ஆறுசூடினார் திருமகனார் அணைந்தாரென்று ஈறிலாதகோர் மகிழ்ச்சியால் விழுந்திறைஞ்ச" என்பதால் விளங்கும். சிவநேசர் திண்ணிய அன்பர் என்பது "ஒருமையுய்த்த நல்லுணர்வினீர்" என்ற திருஞானசம்பந்தர் அவரைச் சிறப்பித்தழைத்ததாக ஆசிரியர் சேக்கிழார் கூறினதால் தெரியப்படும.

படைக்கப்பட்ட பொருள்களெல்லாம் ஒடுங்கிய இடம் பெருமயானம் எனப்படும். அங்கே நடமபுரிபவர் சிவபெருமானாகலின், அவரது கோயில் திருமதிற்புறவாயிலில் எலும்புக்குடம் கொண்டுவரற்பாலதென்பதை அச்சொற்றொடராற் புராண ஆசிரியர் குறிப்பித்தமை காண்க. விதி வெல்லுதற்கரிதன்று என்று கருதுஞ் சமயத்தார்க்குச் சிவபெருமானது திருவருட்பெற்றி விளங்காமையின், அவரை நன்றியில் சமயத்திலுள்ளோர் என்றனர் ஆசிரியர் சேக்கிழார். இறந்தவுயிரினை மீட்பித்தல் தேவாக்குமரிதென்று மணிமேகலே முதலிய நூல்கள் கூறுகின்றன. சிவபெருமானது திருவருளைச் செவ்விதிற் பெறஇயலாது நல்வினைப்பயனாகிய பொன்விலங்கு பூண்ட தேவர்கட்கும் ஞானவள்ளலார் இயற்றும் அற்புதம் வியப்பினை விளைக்க வல்லதாதலின் அவர்களும் விசும்பிடை நெருங்கினர் போலும். பூம்பாவையின் வரலாற்றினை மயிலேயிலுள்ளாரன்றிப் பிறவிடங்களிலுள்ளவர்களும் நன்கறிந்தாராதலின், மற்ற நாடுகளில் வாழ்பவரும் இவ் வருஞ்செயலேக் காண்பதற்கு வந்துகூடினர்.

திருப்பதிகத் திருப்பாட்டுகளை ஒவ்வொன்ருகப் பாடப்பாட எலும்புக்குடமும் உயிர்பெற்று வளர்ந்தமையாலும், பூம்பாவையென்ற பெயரைச்செப்பி, எலும்புக்

குடத்தை நோக்கித் திருப்பதிகம் அருளிச்செய்யப்பட்டமையாலும், அவருடைய திருவாக்கு அக்குடத்தில் நிறைந்த அமுதமாகக் கூறப்பட்டது.

மன்னு வார்சடை யாரைமுன் றொழுது மட்டிட்ட
என்னு நற்பதி கத்தினிற் போதியோ வென்னும்
அன்ன மெய்த்திரு வாக்கெனு மமுதமவ் வங்கந்
துன்ன வந்தவத் துருவமாய்த் தொக்கதக் குடத்துள்.

சமணருஞ் சாக்கியருமே இறந்த உயிரை மீட்பித்தல் முடியாதென்ற கொள்கையுடையாராதலின், சமண்பாட்டைக் கூறியவுடன் பூம்பாவை குடம் உடைந்து எழுவாளாயினள். இதனால் அச்சமயத்தார் கொள்கை பொய்யென்பது வெள்ளிடைமலைபோல் விளக்கப்பட்டது. இதனால் அவர்கள் தள்ளாடிவீழ்தல் இயல்பே.

பூம்பாவை திருமகளையொத்த கவின்மிக்க வடிவொடு வெளிப்பட்டமையால் அக் குடமானது தாமரைக்கு ஒப்பிடப்பட்டது.

"புடை பெருத்த கும்பம்"

என்றபடி தலைசிறுத்து அடிபெருத்திருந்தமையால் பாவை வெளிப்படாமுன்னம் அக்குடம் கூம்பிய தாமரைபோலவும், வெளிப்பட்டகாலை, விரிந்த தாமரைபோலவும் விளங்கிற்று. அக்குடம் சிவனாரது திருவருள் வெள்ளத்தில் நிலைபெற்றுத் திருஞானசம்பந்தரென்னும் ஞானக்கதிரவனது திருப்பாடற் கதிர்களால் விரிந்து திருமகள் இருப்பிடமாக விளங்கிற்றுப்போலும்.

ஆசிரியர் சேக்கிழார் பெண்ணழகைப் புனைந்துகூறுங் கவிநயத்தைப் பூம்பாவையின் எழிலையே இயம்புமிடத்து இனிது அமைத்துள்ளார். உச்சிமுதல் உள்ளங்கால்வரை உள்ள உறுப்புக்களனைத்தையுஞ் செவ்விதிற் புனைந்துரைத்தனர். பூம்பாவையின் முகத்தைச் செந்தாமரைக்கும், கூந்தலை வண்டுக்கூட்டத்தின் ஒழுங்கிற்கும் உவமித்தமையால், சிவப்புநிறமும் மிகக் கரிய தலைமயிருமே, அழ

குடைய வனிதையர்க் குரியனவென்று அக்காலத்துமக்கள் கருதினரென்பது தெளிவு. நெற்றியானது வானவில்லிற் கொப்பாகக் கூறப்பட்டுள்ளது. அஃது ஒளிநயம் உள்ள தாகவுங் கூறப்பட்டுள்ளது தலைமயிரானது புருவவெல்லை வரை நெருங்கி வளர்ந்திருக்குங்காலே, நெற்றியானது வில்லை ஒத்திருப்பதியல்பே. நெற்றிக்கு ஒளியினால் வனப்பு மிகுவதாக மேல்நாட்டுப் புலவர்களுங் கூறியுள் ளார்கள். திலகம் முதலியவற்றின் செவ்வொளியும் வெண் சாந்தின் வெள்ளொளியும் மகளிர் பூசும் மஞ்சளொளியும், காதின் விளிம்பு முதலிய உறுப்புக்களில் அணிந்திருக்கும் பச்சை நீல முதலியவற்றின் விலகிவீழும் பச்சை நீலவொளி களும், கலந்து நெற்றியானது வானவில்லுக்கு வடிவாலும், நிறத்தாலும் ஒத்திருப்பதாகவுங் கொள்க. பிற ஆசிரி யர்கள் நுதலைப் பிறைக்கு உவமித்தனர். வெண்ணீறுங், கருஞ்சாந்துத் திலகமும் இடப்பட்ட நெற்றியே பிறைக்கு ஒத்தது. இவ்வாறே ஒவ்வோர் உறுப்பின் புனைவுரையும் ஆராயற்பாலது. ஈண்டு விரிவஞ்சி விடுத்தாம். நான்முகன் படைத்த திலோத்தமையினும், பூம்பாவை கவின் மிகுந்தவளென்று ஆசிரியர் சேக்கிழார் கூறியுள்ளார். வயதுமிகுந்த கிழவனாயிருந்தும் அயன் திலோத்தமையை விரும்பினனெனவே நம் பரமாசாரியரைப்போல அவன் தெள்ளிய சிவஞானம் பெற்றவனல்லனென்பதும், காமம், வெகுளி, மயக்கங்களைக் கடந்தானல்லனென்பதும், ஆத லாற் பிறவியறாதவனென்பதும் அறியக்கிடக்கின்றன. இத னால் நான்முகக்கடவுட் பதவிபெறுதற்கு, ஒப்பற்ற திரு வடிஞானப்பேறு இன்றியமையாததாகத் தெரியவில்லை.

ஆதலால் நான்முகன் முதலியோர் வழிபடும்பெற்றி நம் பரமாசாரியருக்கு உண்டென்பது தெளியப்படும். அகப்பொருளுட் கூறுகின்ற முறைப்படி, திருஞானசம் பந்தர் பதினாறுண்டு வயதுற்றவராய் ஒப்பற்ற தலைவராய் நின்றனர். பூம்பாவையும், பன்னீராட்டைப் பிராயத்த ளாய் அழகு, குணம், குடிப்பிறப்பு முதலியவற்றில் ஒப் பற்ற தலைவியாய் விளங்கினள். பூம்பாவையின் தந்தை

யும், அத் தலைவனுக்கே அவளைத் தான் கொடுத்துவிட்டதாகக் கருதினன். பூம்பாவையும் அத் தலைவனிடத்தே பேரன்புடையவளென்பது சொல்லாதே யமையும். இவ்வாறு பொருத்தங்களமைந்தவிடத்து இவ்வுலக வாழ்க்கையை மேற்கொள்ள விரும்பும் எத் தலைவனும் இல்லறம் புக விரும்புவனென்பது திண்ணம். இத்துணைப் பொருத்தங்கள் அயனுக்கு வாய்த்திருந்தால் அயன் சிற்றின்பத்தையே விடாது பற்றுவனென்பது சொல்லவும் வேண்டுமோ! ஒப்புயர்வற்ற ஞானவள்ளலார், சிற்றின்ப வாழ்க்கையை அறவே வெறுத்தொதுக்கிய பாசமற்ற உயர்நிலையில் நின்றமையால், பூம்பாவையைத் தாம மணப்பதில்லையென்று வற்புறுத்தியருளினர்.

விசுவாமித்திரர் காசிபர் முதலிய அருந்தவர்கள் நம் பரமாசாரியருக்கு ஒரு சிறிதும் ஒவ்வார்களென்பது இதனால் தெளியப்படும். சிவநேசர் பெற்ற பூம்பாவையைத் தாம் திருவருளால் உயிர்ப்பித்த காரணமபற்றித் தம்மை அவளுக்குத் தந்தையாகக் கூறியது உலக வாழ்க்கையை அறவே யொழித்தற்பொருட்டும், பேருதவி செய்வோர் அணுவளவுந் தத்தம் நலங் கருதாமையைக் கடைப்பிடித்தற்பொருட்டு மென்க.

மகளைத் தந்தை மணத்தல் கூடாதென்ற வேதவிதி வேதாவுக்கே இலதாயொழிந்தது. விலங்கினுலும், பிறவற்றாலும் வருங் கெடுதிகளினின்று தலைவியரைத் தலைவர் தப்புவித்தல் மரபென்று பண்டை நூல்களால் அறிகின்றோம்; அவ்வாறே நம் பரமாசாரியரும் பூம்பாவையை மறலிவாயினின்று மீட்டனர். அங்ஙனமாயினும் சிற்றின்ப வாழ்க்கையை வெறுத்தொதுக்கவே பிள்ளையார் தம்மைத் தந்தை யெனக் கூறினர்.

தமது பதினாறாண்டிலுஞ் சிவபுண்ணியங்களையே செய்து, உலகவாழ்க்கையில் ஈடுபடும் பருவத்திலும் அதில் ஈடுபடாது அவர் பற்று முற்றிலுமற்ற சிவஞானச் செம்மலாய்த் திகழ்ந்தமையால், "புண்ணியப்பதி

ஞாருண்டு பேர்பெறும் புகலி வேந்தர்'' என்றனர் ஆசிரியர் சேக்கிழார். மிகுந்த ஆயுளுடைய அயன் வயோதிகனை காலத்தும், காமுற்றமையால், அவனுக்கு அவன் வயதே பேரிகழ்ச்சியையும மதிப்பின்மையையும் தந்தது. ஆதலால் 'எண்ணிலாண்டெய்தும் வேதா' என்றனர். எண் என் பது மதிப்பென்னும் பொருட்டு. தோன்றிப் பன்னாளும் மகளிர் விருப்பினை அயன் ஒழித்திலனாகலின், அவன் வாழ்ந்த பன்னாளும் மதிப்பிலவாயின. அயன் திலோத்த மையின் அழகினைக் கண்டபோது, அறிவு மயங்கித் தனது ஊன்முகமாகிய நான்முகத்தால் அவளைப் பார்த்தனன். நம் பரமாசாரியர், சிவபெருமானது கருணை வெள்ளத் தில் அலர்நத தாமரையாகவே பூம்பாவையைக் கண்ட னர். கதிரவன் கதிர்களை ஆயிரமென்று கூறுதல் மரபு. நம் நாயனார் ஞானக் கதிரவனாதலால் அவரது ஞானப்பார் வையை ஆயிரமுகத்தாற் கண்ட காட்சியாக;

எண்ணிலாண டெய்தும் வேதாப்
    படைத்தவ ளெழிலின் வெள்ள
நணணுநான் முகத்தாற் கண்டா
    னவனினு நலலாள் தன்பாற்
புண்ணியப் பதினா ருண்டு
    போபெறம புகலி வேந்தர்
கண்ணுதல் கருணை வெள்ள
    மாயிர முகததாற் கண்டார்.

என்னுஞ் செய்யுளாற் கூறினர் நங் குன்றைப்பிரான்.

அறிவின் முயற்சி நிகழ்தற்கிடமாகிய மனிதர்க ளுடைய மூளையை ஆயிரம் இதழ்க்கமலமாக யோக நூல் புனைந்துரைக்குமென்பர். சிவநேசர் பூம்பாவையை ஞானசம்பந்தருக்கு மெய்யாகவே அளித்து விட்டார் என் பது அவர் அவளை மணஞ்செய்வியாது கன்னிமாடத்தில் வைத்தமையால் தெளியப்படும். பூம்பாவையும் நம் பரமா சாரியரது திருவருள் நோக்கத்தாற் புனிதமான பின்பு உலகவாழ்க்கையில் விருப்புவையாது சிவனடிக்கே அன்பு செலுத்திச் சிவத்தை மேவினாள்.

நம் நாயனுர் சீர்காழிக்கு மீண்டபின் மறை வழக் கப்படி இல்லறம் நடத்துவதற்குத் திருமணஞ்செய்ய இசைந்தது, இல்லறம் உலகத்தார்க்கு உரியதே என்று காட்டக் கருதினமையாற் போலும். இல்லற வாழ்க்கையை ஒரு கணமேனும் உலகமுறைப்படி நிகழ்த்தும் விதி தமக் கின்மையை முன் உணர்ந்தே அதற்கிசைந்தனர்போலும். பெண்கொள்ளுபவரே பெண்ணினது பெற்ரோரிடம் தங் கள் கருத்தைத தெரிவிக்கும் வழக்கமும, பெண் வீட்டிலே மணம் நடக்கும் வழக்கமும், திருமணத்திற்கு ஏழுநாளிற்கு முன்னரே பாலிகைகளில் முளேகளே நிறைத்து வைப்பதும், முற்றத்திலும் வீதியிலும் தலைவாயிலிலும் மணி விளக்கு, பொற்குடம், மாலேகள், நறும்புகை முதலியன அமைப்ப தும், குங்குமம், சந்தனம், கர்ப்பூரச்சுண்ணம் முதலியன வற்றை வருவார்க்கு வழங்குதலும், மணநாட்கு முன்னு ளில் திருக்காப்பணிதலும், மணமகன் மணத்திற்காகப் புறப்பட்டுச் செல்லுங் காலே வெண்கொடிக ளெடுப் பதும், சங்கு தாரை சின்னம் தாளம் எக்காளம் வீணே யாழ் முதலிய வாத்தியங்கள் முழக்குவதும், ஆடவரும் பெண்டிரும் உடன்செல்லுவதும் மணமகன் வெண் பட்டாடையும் முத்துமாலே பொற்சரடு முத்துப்பூணூல் மணியாழி முதலியன அணிதலும் அக்காலத்து வழக்கங்க ளென்று அறிகிருேம்.

நம் நாயனுர் எல்லாவற்றிலுஞ் சிறந்த சாந்தாகத் திருநீற்றினேயும் எல்லா அணிகளிலுஞ் சிறந்ததாகக் கண் டிகையினேயுங் கொண்டமையால் சைவமணமக்கள் மணத் தின்போது அவற்றை மறத்தல் கூடாது என்பது அறியற் பாற்று. மணமானது பூம்பந்தரில் நடப்பதும் மணமகன் செல்வதற்குப் பொற்சுண்ணம் தூவிய பாவாடைவிரிப் பதும் மணமகனே எதிர்கொள்ள மங்கலமகளிர் பொற் பாலிகை மணிவிளக்கு பொற்குடம் சந்தனம் முதலிய வற்றை ஏந்திநிற்றலும் செம்பொற்பீடத்தில் மணமகன் வீற்றிருப்பதும் மணமகனுக்கு வலப்பால் மணமகளே இருத் துவதும், பாலும்நீருங் கொண்டு மாமன் மாமியார் மண

மகனது பாதம்விளக்குவதும், கோத்திரமுங் குலமுஞ் செப்பி மணமகன் கையில் கன்னியை அளித்ததாக நீர் வார்ப்பதும், பெண்ணுக்குப் பெற்றோரின் உடன் பிறந்தான் பெண்ணினை மணப்பந்தலுக்கு அழைத்துச் செல்லுதலும், மணமகனும் மணமகளும் எரிவலங்கொண்டு எரியுட் பொரி இடுதலும் அக்காலத்தும் நிகழ்ந்தன என்று அறிகின்றோம். நம் பரமாசிரியர் தம் காதலியைக் கைப் பற்றிய அளவிலேயே உலக பாசத்திற்கு அஞ்சிச் சிவனடி சேரும் வேட்கையினை மிகுதியும் உடையரானார். இது,

> மந்திர முறையா லுயர்ந்த எரிவல மாக மாதர்
> தந்திருக் கையைப் பற்றுந் தாமரைச் செங்கை யாளர்
> இந்தஇல் லொழுக்கம் வந்து சூழ்ந்தவே இவடன் னோடும்
> அந்தமில் சிவன்றாள் சேர்வ னென்னுமா தரவு பொங்க.

என்பதால் அறியப்படும். அவர் திருமணக்காட்சியானது அன்பர் பலர்க்கும் சிவபெருமானது திருமணக்காட்சி போலப் பாசநீக்கமும் சிவப்பேறும் தருவதாயிற்று. எரியாவார் சிவபெருமானே என்று கருதினமையால் திருநல்லூர்ப்பெருமணத் திருக்கோயிலின்கண் இறைவரும் அருட்பெருஞ் சோதிவடிவாகத் திகழ்ந்தனர் போலும். திருஞானசம்பந்தர் சமயவேந்தர் என்பதை வலியுறுத்துவான் அவர்க்கு மாத்திரமன்றி அவரது திருமணத்தில் வந்த யாவர்க்கும் இறைவர் வீட்டின்பத்தை நல்குவாராயினர். இந்நிலவுலகத்திலே எக்காலத்தும் உயிர்கள் திருவைந்தெழுத்தையே கைக்கொண்டுய்யவேண்டுமென்று அறிவுறுத்துவான் நமச்சிவாயத் திருப்பதிகத்தை நம்பரமாசாரியார் அருட்பெருஞ்சோதியிற் கலப்பதற்குமுன் திருவாய் மலர்ந்தருளினர்.

ஓம் நமசிவய என்னுந் தமிழ்மந்திரமே நமச்சிவாய என்று திருப்பதிகத்துள் அமைக்கப்பட்டது. அதன் ஒவ்வொரு எழுத்தும் வெவ்வேறு பொருள் கொள்ளப்படும். நகரம் உயிர்களை உலகவாழ்க்கையிற் செலுத்தும் கடவுளது மறைப்புச் சத்தியைக் குறிக்கும். மகரம் உலகப் பற்றிற்கு மூலமாக ஆணவ மலமென்னும் அறியாமையைக்

குறிக்கும். சிவமாகிய சிகரம் கடவுளைக் குறிக்கும். வகரம் உயிர்களைக் கடவுள்பாற் செலுத்துந் திருவருட்சத்தியைக் குறிக்கும். யகரம் உயிரைக் குறிக்கும். இங்ஙனம் பொருள் கொள்ளுதலே தமிழ்மக்கள் முறையாகும் நமசிவாய என்ற வடசொற்றொடர்க்குச் சிவனுக்கு வணக்கம் என்று பொருள். நமசிவாய என்பதற்கு இரு மொழிப்பொருளும் கொள்ளலாம. போகம் வீடென்னும இரண்டையும் உயிர்களுக்கு அளிப்பவர் கடவுள என்பதையும் இரணடிற்கும் கடவுளது பேராற்றலே துணை என்பதையும, உயிர்கள் மலத்தின் நீங்கித் திருவருட் சத்தியின் உதவியால் சிவத்தை அடையற்பாலன என்பதையும, எதற்குஞ சிவனடி மறவாச் சிந்தையே அடிப்படையாக வேண்டப்படும் என்பதையும் அறிவுறுத்துவது திருவைந்தெழுத்தின் குறிப்பாகும். ஆதலால், இதனையே எல்லாவகையான நூலுக்கும் அடிப்படையாகக் கொள்ளவேண்டுமென்றும் முதற் கடவுளுடைய திருநாமமென்றும் நம் பரமாசாரியர்,

> காத லாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
> ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
> வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
> நாத னாம நமச்சி வாயவே.

என்னுந் திருப்பதிகத்துள் உரைத்தருளினார்.

திருமணததில் வந்த யாவரும் பிறவியற்று வீடெய்தும் தகுதியுடையார் ஆயினர் என்பது யாங்ஙனம் எனில், திருஞானசமபந்தரது திருவருட் பார்வையால் மலநீக்கம் பெறுதற்குரியவரே திருமணத்திற் கூடிய கூட்டத்தினர் ஆவர் எனறு கருத இடமுண்டு. மலநீக்கம் பெறுதற்குத் தகுதியில்லாதவர்கள் சோதியுட் புகுதற்கு இசையமாட்டார்கள். பிறவி நீங்கப்பெற்று அபர முத்திக்குரிய புவனங்களில் வாழ்தற்குரியவர் சோதியுட்புகுந்த பலரும் ஆவர். சோதியுட் புகுந்தவர் யாவரும் இறைவன்பால் பரமுத்தி அடைந்தனர் என்று ஆசிரியர் சேக்கிழார் கூறவில்லை. ஆதலால் அவரவர் பக்குவத்திற்குத் தக்கபடி இறைவன் சோதியுட்புகுந்த பலர்க்கும் உயர்ந்த பதவிகளை அளித்

திருப்பர். ஆறுவகைச் சமயத்தில் அருந்தவரும் என்றவிடத்து அகச்சமயம் ஆறுமே சுட்டப்பட்டதென்று கொள்க. திருமூலமாமுனிவரும் புறச்சமயம் ஆறினையுங் கடிந்து உட்சமய மாறினையுந் தழுவிக்கொண்டனர் என்றது,

'சமையங்க ளாறுந்தன் றாளிணை நாட
வமையங் குழல்கின்ற வாதிப் பிரானே'

'ஒன்றது பேரூர் வழியாறு அதற்குள'

என்னும் இவற்றாற் காண்க.

சிவபெருமானது உருவத் திருமேனியையும் சிவசத்தியினையும் சிவசத்தியின் ஆண்வடிவமாகிய திருமாலையும் சிவத்தின் ஆனந்தவடிவமாகிய முருகக்கடவுளையும் ஓங்கார வடிவமாகிய கணபதியையும் ஒளிவடிவமாகிய கதிரவனையும் தனித்தனிச் சிறப்பாக வழிபடும் அறுவகை நெறியையும் அறுவகைக் சமயம் என்று கூறுதல் உண்டு. சைவத்தின் ஆறுவகைச் சமயமென்று அவற்றைக் கூறலாம். மறைமுனிவர்கள் என்றது, சிவவேள்வி வாயிலாகக் கடவுளை வழிபடுகின்றவர்கள். மந்திரம் வல்லாரையும் மறைமுனிவர்கள் என்று கூறலாம்.

'அப்பனை நந்தியை யாரா வமுதினை
யொப்பிலி வள்ளலை யூழி முதல்வனை
யெப்பரி சாயினு மேத்துமி னேத்தினு
லப்பரி சீச னருள்பெற லாமே'

என்றவண்ணம் கடவுளைத் தத்தமக்குத் தெரிந்த ஏதாவதொரு நல்வழியினாலே பற்றற்ற அன்பினோடு அவனது அருளை நாடி வழிபடுவார்களும் வீடுபெறுதற்குரியவரென்று குறிப்பான் ஆசிரியர் சேக்கிழார் 'வேறு திருவருளினால் வீடுபெற வந்தாரும்' என்றருளிச் செய்தார். இது சைவசமயத்தின் விரிந்த நோக்கத்தைக் காட்டுகின்றது. சுட்டி அறியும் அறிவிற்கு அடிப்படையான விந்துநாத தத்துவங்களையுங் கடந்து சுட்டாது அறிந்து அனுபவித்தற்குரிய கடவுளோடு இரண்டறக் கலக்கும் தனிப்பெரு

நிலையாகிய வீட்டின்பத்தைப் பிள்ளையார் பெற்றனர் என்பார், 'போதநிலை முடிந்தவழி புக்கொன்றி உடனானார்' என்றார். சிவமாந் தன்மைப் பெருவாழ்விலும் உயிருங் கடவுளும் பொருளால் வேறென்பார் 'உடன் ஆனார்' என்றார். அத்துவிதக் கலப்பைக் குறித்தற்கு, 'ஒன்றி' என்ற சொல் அமைக்கப்பட்டது. தவம முற்றினவரே சோதியுட் புகுந்தனர் என்று குறிப்பார் 'சோதி மறைந்து பழைய கோயில் தோன்றுதலும், பேறில்லார் தெரு மந்தார்,' 'நணுகப்பெறா விண்ணவரும் முனிவர்களும் விரிஞ்சனோ முதலானார் எண்ணிலவர்' என்றார். மும்மைப் பெருவாழ்வும் பெறுதற்கு மன்னுயிர்கட்குத் தமது பேரருளால் வழிகாட்டினவர் நம் பரமாசாரியராகிய திருஞானசம்பந்தப்பெருமானே என்பது கடைப்பிடிக்க.

---

## கக. திருஞானசம்பந்தர் தேவார ஆராய்ச்சி

திருஞானசம்பந்தர் தேவாரமானது இணையற்ற ஆன்மைமிக்க இனிய செந்தமிழ் நடையில் அமைந்திருப்பதோடு இயற்கைப் பொருள்களின் பல்வகைப் பேரழகுகளையும் நயம்பெற விளக்கும் இயல்புடையது. சைவ சமயத்தில் தலைசிறந்த உண்மைகளையுந் திட்பமாக உணர்த்துந் தன்மையது. அதன் இயற்கை வருணனையைப்பற்றி ஒரு சிறுநூல் முன்னமே வெளியிடப்பட்டுள்ளது. ஆதலின் இவற்றுட் சில உதாரணங்களே காட்டப்படும். ஐம்புலன்களுக்கும் இன்பந் தரவல்ல இயற்கைப்பொருட் காட்சிகளை நம் பரமாசிரியர் தம்முடைய திருப்பதிகங்களுள் மிகவும் அழகாகப் புனைந்து கூறியுள்ளார். கண்ணைக்கவரும் ஒளிமிக்க பன்னிற மணிகளை உருவமாக வைத்தமை,

> "எண்ணார் முத்தமீன்று மரகதம்போற் காய்த்துக்
> கண்ணார் கமுகு பவளம் பழுக்குங் கலிக்காழி."

என்னும் இவ்வடிகளாற் காண்க.

இவ்வடிகளின் பொருள் தொகைமிக்க முத்துப் போன்ற பூக்களைப் பூத்து, மரகதம் போன்ற பசுங்காய்களைக் காய்த்து, பவளம்போற் செவ்விய பழக்குலைகளைக் கொண்டுள்ள கண்கவர் வனப்புமிக்க கமுக மரங்கள் சிறந்திலங்கும் முழக்கம் பொருந்திய சீர்காழி மாநகர் என்பது.

காட்சிக்கினிய இயற்கைப் பொருள்களை,

> "வாவிதொறும் வண்கமல முகங்காட்டச்
> செங்குமுதம் வாய்கள் காட்டக்
> காவியிருங் கருங்குவளை கருநெய்தல்
> கண்காட்டுங் கழுமலமே"

என்ற அடிகளால் மக்கள் உறுப்பிற்கு உவமித்தமை காண்க.

ஒலிநயத்தை,

"வாசமலர் கோதுகுயில் வாசகமு மாதரவர் பூவை மொழியும்
தேசவொலி வீணையொடு கீதமலி வீதிநிறை தேவூ ரதுவே"

என்ற இவ்வடிகளால் உணர்த்தினமை காண்க. இதனுள் இயற்கை ஓசைநயங்களும் செயற்கை ஓசைநயங்களும் சேர்த்துக் கூறப்பட்டன.

நாவிற்கின்பத்தை நினைவூட்டும் அடிகள்

"குலைவாழைத் தீங்கனியு மாங்கனியுந்
தேன்பிலிற்றுங் குறும்ப லாவே"

"நலமஞ்சுடைய நறுமாங்கனிகள் குதிகொண்
டெதிருந்திப்
பலவின் கனிகள் திரைமுன் சேர்க்கும்
பழன நகராரே"

என்றிவ்வாறு கூறப்பட்டன.

நறுமணங் கமழும் மரங்களைத் தொகுத்துக் கூறும் அடிகள்,

"கோடுமலி ஞாழல்குர வேறுசுர புன்னை
நாடுமலி வாசமது வீசியநள் ளாறே"

"மரவந்தோடு மணமாதவி மவ்வலது விண்ட
குரவத்தோடு விரவும் பொழில்"

என்றிங்ஙனம் கூறப்பட்டன.

செந்நெற் கதிர்கள் சாமரம் வீசுவனவாகக் கூறும் பகுதி உடற்கு நயந்தரும் காற்றுலாவுவதை நினைவூட்டும். அவை,

"செறியிதழ்த் தாமரைத் தவிசிற் றிகழ்ந்தோங்கு மிலைக்
குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்
வெறிகதிர்ச் சாமரை யிரட்ட இளவன்னம்
வீற்றிருக்கு மிழலை யாமே"

என்னும் இவ்வடிகளாம்.

திருக்குற்றாலத்தின் சாரற் காலத்தை நினைவுறுத்துவனவாக,

"போதும் பொன்னு முந்தியருவி புடைசூழக்
கூதன்மாரி நுண்டுளி தூங்குங் குற்றாலம்"

என்னும் இவ்வடிகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஐந்திணை வளங்களையும் திணைமயக்கங்களின் நயங்களையும் எண்சுவைகளின் இயல்பையும் இனிது விளக்கும் பாடல்கள் பல உள்ளன. இயற்கைப் பொருளழகைப்பற்றி இயற்றப்பட்டுள்ள வேறு நூலில் அவற்றைக் காண்க.

கடவுளைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியாகவுங் கருதித் தலைவன்பால் குயில் அன்றில் முதலியவற்றைத் தூதுவிடுவதும் கிளியினைத் தலைவன்பெயா சொல்லுமாறு வேண்டிக்கொள்ளுவதும் இவர் தேவாரத்துட் காணப்படும். அவற்றிற்கு உதாரணங்கள்.

"பானுறு மலர்ச்சூதப் பல்லவங்க ளவைகோதி
ஏனோர்க்கு மினிதாக மொழியுமெழி லிளங்குயிலே
தேனூரும் பொழில்புடைசூழ் திருந்தோணி புரத்தமரர்
கோனாரை யென்னிடைக்கே வரவொருகாற் கூவாயே"

"முன்றில்வாய் மடற்பெண்ணைக்
குரம்பைவாழ் முயங்குசிறை
அன்றில்காள் பிரிவுறுநோ
யறியாதீர் மிகவல்லீர்
தென்றலார் புகுந்துலவுந்
திருந்தோணி புரத்துறையுங்
கொன்றைவார் சடையார்க்கென்
கூர்பயலை கூறீரே"

"சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபால்
முறையாலே யுணத்தருவேன் மொய்பவளத் தொடுதரளந்
துறையாருங் கடற்றோணி புரத்தீசன் றுளங்குமிளம்
பிறையாளன் றிருநாம மெனக்கொருகாற் பேசாயே"

என்பவைகளாம்.

இனி தத்துவப்பகுதிகள் அவற்றுள் வருமாறு :

கடவுள் உலகுயிர்களோடு கலந்து உலகமாகியும் அவற்றின் வேருகியும் உடனுகியும் இருக்கின்ருர் என்பதற்குப் பாட்டுகள்.

"ஈருய்முத லொன்ருயிரு பெண்ணுண்குண மூன்ருய்
மாருமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய்
ஆருர்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தாஞய்
வேறயுட ஞனிடம் வீழிம்மிழ லையே"

"முற்றுமாகி வேறுமாஞன் மேயது முதுகுன்றே"

என்பவைகளாம்.

கடவுள், நிலம் நீர் தீ காற்று விண் கதிரவன் மதி உயிர் என்னும் எட்டினையும் நிலைக்களமாக உடையான் என்று கூறுந் திருப்பாட்டுகள் பல. அக் கருத்தைக்கூறும் ஒருபகுதி,

"மண்ணும்புன லுயிரும்வரு காற்றுஞ்சுடர் மூன்றும்
விண்ணும்முழு தாஞனிடம் வீழிம்மிழ லையே"

என்பதாம்.

கடவுளைப் பசுபதி என்று பின்வரும் அடிகளில் குறித்தது காண்க. அவை;

"கதிமலி களிறது பிளிறிட வுரிசெய்த வதிகுண னுயர்பசு
பதியதன் மிசைவரு பசுதி பலகலை"

"பாலனும் விருத்தனும் பசுபதி தானும்"

என்றவைகளாம்.

பாசத்தைப்பற்றிய குறிப்பை :—

"விளையாததொர் பரிசில்வரு பசுபாசவே தனையொண்
டளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்பாம்"

"மலனேடு மாசு மில்லவர் வாழுமல்குபெருந்துறை யாரே"

என்றவற்ருல் காண்க.

சிவபெருமான் மும்மூர்த்திகளாயும் மகேசுவரன் சதாசிவன் என்னும் இருவருமாயும் அருவசிவமாயும் நிற்பதை,

"மூவருமாகி யிருவருமாகி முதல்வனுமாய் நின்றமூர்த்தி"

என்றவிடத்துக் குறித்தார்.

மூவரின் வேறுயுள்ள முதல்வன் என்பதை,

"மேவராய விரைமலரோன் செங்கண்மா லீசனென்று
மூவராய முதலொருவன் மேயது முதுகுன்றே"

என்பதாலும்,

"முன்பினூர் மூவர் தாந்தொழும் முக்கண் மூர்த்தி"

என்பதாலுங் காண்க.

ஞானத்தினல் இறைவன் வழிபடத்தக்கவனென்பதை,

" நுண்ணறிவால் வழிபாடு செய்யுங்கா லுடையான் "

" ஞானத்திரளாய் நின்ற பெருமான் "

" அறநீர்மையில் எய்தும் அவர்க்கு அறியும் அறிவருளி "

" ஊனமில ராகிஉயர் நற்றவமெய் கற்றவை உணர்ந்த அடியார்
ஞானமிக நின்று தொழும் "

என்பவற்றாலும்,

" உணர்வினை யிலாதார் உள்க லாததோர்
இயல்பினை உடையார் "

" அகனமர்ந்த வன்பினரா யறுபகைசெற்
றைம்புலனு மடக்கி ஞானப்
புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்
துள்ளிருக்கும் புராணர் கோயில் "

என்பவற்றானும் தெளியப்படும்.

படைப்பு எண்பத்துநான்கு நூறாயிரம் பிறப்புவேறுபாடு என்பது,

"உரைசேரு மெண்பத்து நான்குநூ
றாயிரமாம் யோனி பேத
நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா
யங்கங்கே நின்றான் கோயில்"

என்பவற்றால் அறியப்படும்.

சிவபெருமானுக்கு ஆயிரம், நூறுநாமம் வழங்குவதை,

"நூற்றுப் பத்தாய பேருடையார்"

"பாரினார் தொழுதெழு பரவுபல் லாயிரம் பேரினார்"

எனவும்,

"நாமநூ றாயிரஞ் சொல்லி வானோர் தொழும் நாதனை"

எனவுங் குறித்தார்.

தேவாரம் மறை என்பது,

"மறைவளருந் தமிழ் மாலை"

"மறையிலங்கு தமிழ் வல்லார்"

என்று வருவனவற்றால் தெளியப்படும்.

தத்துவஞானமென்ற சொற்றொடர் "சரவா என்பார் தத்துவஞானத் தலையாரே" என்றவிடத்து வந்தது காண்க. எண்குணங்கள் என்னுஞ் சொற்றொடர் "மொய்த்தாறு சுவையும், ஏழிசையும் எண்குணங்களும் விரும்பும்" என்றவிடத்து வந்தது காண்க.

உட்சமய மாறுக்குஞ் சிவபெருமான் தலைவனென்பது "ஒத்தாறு சமயங்கட் கொருதலைவன்" என்றவிடத்துக் காண்க.

கடவுள் தம்பொருட்டு ஒரு வடிவத்தை வேண்டானென்பதை,

"உருவிலான் பெருமையை உளங்கொளாத"

"கருவினால் அன்றியே கருவெலாம் ஆயவன்
உருவினால் அன்றியே உருவுசெய் தானிடம்"

"ஆணலார் பெண்ணலார்"

"இன்னஉரு இன்னநிறம் என்றறிவ தேலரிது"

என்றவிடத்துக் காண்க!

கடவுளே உலகுக்கு ஆதி அந்தம் என்பதை 'அந்த மாய் உலகாதியுமாயினான்' 'அந்தமா யாதியாகி அயவந்தி அமர்ந்தான்' 'ஆதியந்த மாகினான்' என்று வருவனவற்றால் காண்க.

ஆகமம் என்ற சொல்லைத் 'தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்' 'ஆகமத்தொடு மந்திரம்' 'ஆகமச் செல்வனாரை அலர்தூற்றுதல் காரணகமம்' 'ஆறு சமயங்களும் விரும்பி அடிபேணி அரன் ஆகமம் மிகக் கூறும்' என்றவிடத்துக் காண்க.

கடவுளுடைய சொரூப இலக்கணத்தை 'எந்தையார் அவர் எவ்வகையார் கொலோ' 'யார் அறிவார் அவர் பெற்றியே' 'ஊழிகளாய் உலகாய் ஒருவற்கும் உணர்வரி யான்' 'தனதுருவம், அறிவரிய சகல சிவன்' என்று வருவனவற்றால் அறிக. 'உரையரும் உருவினர் உணர்வரு வகையினா' என்றதுமது.

விந்து ஞானத்திற்கும் அப்பாற்பட்ட பரஞானத்தால் உணரப்படுபவன் என்பதை,

"சொற்றெரியாப் பொருள் சோதிக்கும்
அப்பால் நின்ற சோதிதான்"

என்றதாற் காண்க.

கடவுளைச் சைவரென்று கூறியதை,

"தழையார் வடவியதிற் றவமேபுரி சைவர்"

"அடியார் கருதுசைவ னிடமாம்"

என்றவற்றால் காண்க.

பௌட்கரத்துட் கூறியபடி ஏகன், அனேகன், இருள், கருமம், மாயை இரண்டு என்னும் அறுவகைப் பொருள்களாக முப்பொருள்களைப் பகுத்தறிவது அக்காலத்து வழக்கம்போலும். அதை,

"அஞ்சுபுலன் வென்று அறுவகைப்
பொருள்தெரிந்து எழுவிசைக் கிளவியால்
வெஞ்சின மொழித்தவர்கள் மேவிநிகழ்
கின்றதிரு வேதி குடியே"

என்றவிடத்துக் காண்க.

பின்வரும் அடிகளில் திருக்குறட் சொற்றொடர்கள் வந்தமை காண்க.

"அகர முதலானை அணியாப்ப னூரானை"

"ஆறினார் பொய்யகத்து ஐயுணர் வெய்திமெய்
தேறினார் வழிபடு தென்குடித் திட்டையே."

---

## ௧௨. திருஞானசம்பந்தர் காலம்

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் காலத்தைப்பற்றிப் பலர் பலவாறு கூறியதை மறுத்துக், காலஞ்சென்ற கனம் சுந்தரம்பிள்ளையவர்கள் ஒரு நூல் எழுதியுள்ளார்கள். திருஞானசம்பந்தர் காலத்தில் சிறுத்தொண்டர் செங்காட்டங்குடியில் வாழ்ந்தனர். அவர் வாதாவி என்னும் வடநாட்டு நகரத்தைத் தம் அரசனுக்காகச் சென்று வென்றழித்தனர் என்று பெரியபுராணம் கூறுகின்றது. வாதாவி நகரம் பம்பாய் மாகாணத்திலுள்ளது. அஃது அழிக்கப்பட்ட காலத்திலே அங்கே அரசாண்டவன் சாளுக்கிய வேந்தனை இரண்டாவது புலிகேசன் என்பான் என்பது டாக்டர் ஹீல்ஷ் என்பவர் வெளியிட்ட கல்வெட்டுப் பட்டயங்களாலே தெரிகின்றது. அவ்வரசன் காலம் கி. பி. 609-642 அதேகாலத்தில் காஞ்சி நகரத்தில் முதல் நரசிம்ம வாமன் என்பான் அரசாண்டனன். சிறுத்தொண்டர், முதல் நரசிம்மவர்மனுக்கே படைத்தலைவனாக இருந்திருக்க வேண்டும். இதனால் திருஞானசம்பந்தர் காலமும் 7-வது நூற்றாண்டின் முன்பகுதி என்றே தெரிகின்றது. முதல் நரசிம்மவாமனின் தந்தையாகிய குணபரன் என்பவன் காலத்தே அப்பரடிகள் சைவசமயம் புகுந்தனர் என்று ஊகிக்க இடமுண்டு. குணதரவீச்சரம் எனனும் கோயிலை அவன் கட்டினதாகத் தோன்றுகிறது. அப்பர் பெருமான் கி. பி. 509-650 வரையுள்ள காலத்தில் 80 ஆண்டு இவ்வுலகில் திகழ்ந்தனர் என்று ஊகிக்கலாம். திருஞான சம்பந்தர் கி. பி. 609- 642 வரையுள்ள காலத்தில் 16-ஆண்டு நிலவுலகில் வாழ்ந்து சைவத்தை நிலைநாட்டினர் என்க.

---

## கரு. நாயனர் திருப்பெயர் விளக்கம்

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்க்கு, ஞானம் பெறுவதற்குமுன் என்ன பெயர் இருந்ததென்று தெளிவாக விளங்கவில்லை. திருஞானசம்பந்தர் என்ற பேரே அவர் புராணத்தின் முதல் திருப்பாட்டில் காணப்படுகிறது. 45-வது பாட்டில் புகலிப் பிள்ளையார் என்ற சொற்றொடர் அமைக்கப்பட்டிருக்கிறது. பிள்ளையார் என்ற பெயர் அவர்க்கு இயற்பெயரோ அல்லது அவரது பிள்ளைமைப் பருவத்தைக் குறிப்பதற்கு அமைத்த திருப்பெயரோ தெரியவில்லை. அவர் திருவருள் பெற்றபின் ஆளுடைய பிள்ளையார் என்ற திருநாமம் அவர்க்கு வழங்கப்பட்டு வந்தது. சிவபெருமானுல் ஆட்கொண்டருளப் பெற்றமை பற்றி ஆளுடைய என்ற அடை கொடுக்கப்பட்டது. சண்பை நாடுடைய பிள்ளை என்றும் ஓரிடத்தில் காணப்படுகின்றது. அப்பர்பெருமானும் ஓரிடத்தில் பிள்ளாய் என்று நம் நாயனரை அழைத்திருக்கின்றார். கவுணியர் கோன், கவுணியனர், கவுணியர் குலதீபம், கவுணியர் கற்பகம், கவுணியர் தலைவர் என்ற பெயர்கள் நம் நாயனரது கோத்திரத்தைக் குறிக்கும் பெயர்களாம். காழிவேந்தர், புகலியர்கோன், காழியர்கோன், காழியர் தவப்பயன், காழிப புண்ணியக் கொழுந்தனையவர், சண்பைநாதர், சண்பைமன்னர், புகலிமன்னர், வெங்குருவேந்தர், சிரபுரச் செல்வர், தோணிபுரத் தோன்றலார் என்பன அவரது ஊரைக்குறிக்கும் பெயர்களாம். அக்காலத்தில் புலவர்களுக்கு அவர்களது ஊரையும் குடியையும் குறிக்கும் பெயர்களை வழங்குவது வழக்கமாக இருந்தது. ஆலூர்க்கிழார், கோவூர்க்கிழார் என்பன ஊரைக்குறிப்பன. சேக்கிழார் என்பது குடியைக்குறிக்கும் பெயர்.

திருமுலைப்பாலுண்டு ஞானம் பெற்றதைப் பல இடங்களில் ஆசிரியர் வெவ்வேறு சொற்றொடர்களாற் குறித்தனர். திருஞானசம்பந்தர், சிவஞானசம்பந்தர், சம்பந்தர், தெய்வஞானக்கன்று, ஞானபோனகர், ஒப்பருஞானமுண்டார், ஞானத்தமுதுண்டார், மெய்வகை ஞானமுண்ட

வேதியர், ஞாலம் உய்ந்திட ஞானம் உண்டவர், ஞானம் குழைத்தளித்திட அமுதுசெய்தருளிய பிள்ளையார், ஞான வட்டில் வண்கையர், மெய்ஞ்ஞானமுண்டார், வளரொளி ஞானமுண்டார், திருஞானம் உண்ட செல்வர் என்பன அவற்றை விளக்கும். நம் நாயனாரைப்போல முற்றிலும் ஞானம்பெற்று உலகினை உய்வித்தவர் வேறு யாரும் இல்லை என்பதற்குக் குறைவிலா நிறைஞானக் கொண்டலார், போதஞானப் புகலிப்புனிதர், ஞானத்தலைவர், ஞானச்செம்மலார், ஈறில்சீர்த் திருஞானசம்பந்தர், அண்டமெலாங் கொண்டதொரு ஞான மணிவிளக்கு, திருவளர் ஞானத்தலைவர், ஏகாம்பரசிவ மெய்ஞ்ஞானம் மிசைந்தவர், நிகரிலாதவர், முற்றுமெய்ஞ்ஞானம் பெற்றமூர்த்தி என்னும் சொற்றொடர்கள் வழங்கப்பட்டன. ஞானப்பாலைனது ஒழிவில்லாத உள்ளத்திற்றங்கி ஞானமொழியாக வெளிப்படுதலால் பாலறாவாயர், பாலறா மதுரமொழிப் பவழவாயார், உலவாத ஞானம்பெற்றார் என்னுந் திருநாமங்கள் எழுந்தன. பாசத்தில் ஈடுபடாத பேராற்றல் உடைமையால் ஆண்தகையார், ஆளியார், அண்ணலார், ஏந்தலார், சிங்கமனையார், தூயவாய்மையார் என்னும் நன்மொழிகளை அவர்க்கு ஆசிரியர் வழங்கினர். ஆண்தகைமையோடு மிக்க இளமையும் உடைமையால் மழவிளம் போதகம், சிங்க இளவேறு, கவுணியர் கற்பகக்கன்று, மதிக்கொழுந்து முதலிய பெயர்கள் வழங்கப்பட்டன. அம்மையப்பரால் ஞானப்பால் கொடுத்து ஆட்கொள்ளப் பட்டமையால், வானவர்நாயகனார் மகனார், இறைவர் திருமைந்தர், புரமெரித்தார் திருமகனார் என்னும் பெயர்களால் அவர் அழைக்கப்பட்டனர். ஞானத்திற்கு வழியாகிய தவநெறியிற் றலைநின்று ஏனைஉயிர்களுக்கு அந்நெறியை நன்குகாட்டியருளினமையால் தவமுதல்வர், தவந்தழைப்ப வந்தருளிய பிள்ளையார், செந்தமிழ்நாடு செய்த செய்தவக் கொழுந்துபோல்வார், பந்தச்சார்பு ஒழிப்பவர் என்னுஞ் சொற்றொடர்கள் வழங்கப்பட்டன. சிவபெருமானுடைய திருவருள் உலகர்க்கு விளங்கும்படியாக இளமையிலேயே தாம் அதனைப் பெறும்வண்ணம் ‘அம்மே’ ‘அப்பா’

என்று அழைத்தழுதமையால் காலம்பெற அழுதார், அழு தழைத்துக்கொண்டவர் என்று அவர் விதந்தோதப் பட்டார். ஞாலமெங்கும் அரன்நாமம் பரவவேண்டு மென்ற நோக்கத்தோடு சமய வேந்தராக உலகுக்கு ஒப் பற்ற பேருபகாரம் அளித்தமையால், பெருந்தகையார், ஞானவள்ளலார், மண்ணெலாம் உய்யவந்த வள்ளலார், பாரெல்லாம் உய்யவந்தார், உலகுய்ய வருவார், நிறைபுகழ் வேதியர், புண்ணியமூர்த்தி, மண்ணினுக் கிடுக்கண்தீர்க்க வந்தவர் என்னுஞ் சொற்றொடர்கள் எழுந்தன. சிவசம பந்தமல்லாத பிறநெறிகள் நிலவாதவண்ணம் சிவப் பேரொளி பரப்பினமையால் பரசமயகோளரி, பரசமயங் களை வீழ்த்தார் என்னும் வாக்கியங்கள் வழங்கப்பட்டன. நம் பரமாசாரியருடைய திருவருட் பாடல்கள் மந்திரங் களும் வேதமும் ஆம் என்பார், இருக்குமொழிப் பிள்ளை யார், வேதவாய்மொழிப் பிள்ளையார், வேதவாயர், வேத கீதர் என்றார். சிவசம்பந்தமான மறைநெறியை நிலைநாட் டினவர் என்பது சைவமறையவனார், எல்லையில்லா நீற்று நெறி மறையவனார், மன்னிய சைவநீதி மாமறைச்சிறுவர், திருமறையோர் தலைவர், நான்மறை வாழவந்தார், வேத நெறி வளர்த்தவர், மறைவேந்தர், மாமறைச் சிறுவா முதலிய சொற்றொடர்களால் தெளியப்படும் அவர் சைவ நெறித்தலைவர் என்பதைச் சைவசிகாமணியார், சைவ முதல்வனார், சிவநெறி வளர்க்கவந்தார், சைவ மைந்தர், வேதமொடு சைவநெறி விளங்கவந்த கவுணியனார் என்பன குறிக்கும். அவர் தமிழ்த்தலைவர் என்பதை முத்தமிழ் விரகர், வண்டமிழ் நாயகர், செந்தமிழ் ஞானசம்பந்தர், வண்டமிழின் மொழிவிரகர், மதுரமுத்தமிழ் வாசகர், அருந்தமிழ் ஆகரர், இருந்தமிழ் ஆகரர், இயலிசைத் தலைவ னார் முதலியன குறிக்கும். மும்மை நிலைத்தமிழ் விரகர் என்றவிடத்து இம்மை மறுமை வீடென்னும் மூன்று நிலைகட்கும் பாடல் அருளிச்செய்தவர் என்று பொருள் கொள்ளலாம். அவரது இசைப்பெரு வன்மையை, ஏழி சைத் தலைவனார், கானத்தின் எழுபிறப்பு என்ற வாக்கி யங்கள் குறிக்கும். அவர் முழுநீறு பூசிய முனிவர் என்

பது பால்நிற நீற்றர், மண்ணில்வளர் மதிக்கொழுந்து, நீற்றணி திகழ்ந்தமேனி நிறைமதிப் பிள்ளையார் என்பவற்றால் விளங்கும். அவர் வேண்டுவார்க்கு வேண்டியவை ஈந்தமையால், கற்பகக்கன்று, கவுணியர் கற்பகம் என்றழைக்கப் பட்டார்.

அறுபத்துநான்கு கலைகளிலும் வல்லவர் என்பார், திருக்கொள்ளம்பூதூர்க்கு ஓடத்தைத் திருவருளினாலே ஓட்டியதைக் கூறுமிடத்துக் கலைபயிலும் கவுணியர்கோன் என்றார். திருவைந்தெழுத்தையே மண்ணவர்களும் விண்ணவர்களும் கேட்கும்படி யாவர்க்கும் மெய்ந்நெறி என்று குறித்தமையால் அவர் ஐந்தெழுத்து மெய் உணர்ந்தவர் என்றோதப்பட்டார். இடையறாத பேரின்பத்தை நுகர்பவராதலால் திருவுடைப்பிள்ளையார் என்னுஞ் சொற்றொடர் எழுந்தது. நகரையும் நாடென்பது செய்யுள் வழக்குப்போலும். அது சண்பைநாடு என்றவிடத்திற் காண்க நம் பரமாசாரியார் கடவுளின் திருமகனார் என்பதைப் பிள்ளை என்ற சொல்லும் குறிக்கும் திருஞானசம்பந்தப்பிள்ளை என்னுஞ் சொற்றொடரில் பிள்ளை என்று வரும் இறுதி அடைமொழியையே வேளாளர்மரபினர் தங்கள் பெயர்க்குப் பின்னடையாக அமைத்து வழங்கலாயினர் என்பாரும் உளர்.



வெளியீடு :

## வரலாற்று நூல்கள்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| ஞான முனிவர் வரலாறு | ... | 1 | 4 |
| ஆண்டாள் வரலாறு | ... | 0 | 4 |
| செகப்பிரியர் வரலாறும் நாடகக் கதைகளும் | ... | 0 | 4 |
| திருஞான சம்பந்தர் வரலாறும் நூலாராய்ச்சியும் | ... | 2 | 4 |
| அப்பர்சுவாமிகள் சரித்திரம் | ... | 1 | 8 |
| சுந்தரமூர்த்தி நாயனார் வரலாறும் நூலாராய்ச்சியும் | ... | 2 | 0 |
| மணிவாசகப் பெருமான் வரலாறு | ... | 1 | 8 |
| சேக்கிழார் சுவாமிகள் வரலாறு | | (அச்சில்) | |
| குமரகுருபர அடிகள் வரலாறு | ... | 1 | 8 |
| சங்கராசாரியர் வரலாறும் நூலாராய்ச்சியும் | ... | 0 | 12 |

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி & சென்னை.

விலை ரூ. 2-4.

சகம், சென்னை - 1.